உ

கடவுள் துணை

போகர்

திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபட்சி சாஸ்திரம்

மூலமும் - உரையும்



டி. சாரதா புத்தகசாலை அவர்களால்

திருமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.

இதன் விலை] 1934. [ரூபா 1.

உ

கடவுள் துணை

# போகர்

திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபட்சி சாஸ்திரம்

கீர்வாணத்திலிருந்த இதை

சதாவதானம் செழுமனவை சித்திரகவி

சோதிடமணி

தேவேந்திரநாத பண்டிதரவர்களால்

மொழி பெயர்த்து

மூலமும் - உரையுமாக

இயற்றித்தர,

டி. சாரதா புத்தக சாலையாரால்,

சென்னை

திருமகள் விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1934 [விலை ரூபா 1.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# ரிஜிஸ்ட்டர் காபிரைட்

---

இதனால் சகலமானவர்கட்கும் தெரிவிப்பது யாதெனில், இந்த போகர் பஞ்சபட்சியென்னும் நூலானது இதுவரையிலும் யாரும் கீர்வாணத்திலிருந்து பெயர்த்து அச்சிடா திருந்தபடியால் சிறுமணவூர் சோதிடமணி தேவேந்திரமென்பவரால் மொழிபெயர்த்த போகர் பஞ்சபட்சியென்னும் இந்நூலை ஷை யூர் கண்ணப்ப முதலியார் பாரியாள் சொர்ணாம்பாள், போகர் பஞ்சபட்சி சாஸ்திரம் மூலமும் உரை என்னும் இப்புஸ்தக காப்பிரைட் சுதந்திரத்தை எனக்கு விக்கிரயம் செய்து விட்டபடியால் இதை 1897-வது வருஷத்திய 25-வது ஆக்டு 20-வது பிரிவு 6-வது விதியின் பிரகாரம் இந்நூலை பிரன்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும், காரைக்காலிலும், காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது ஆகையால் இந்நூலுக்குடையவராகிய டி. சாரதா புத்தக சாலை தலைவர், த. துரைசாமி முதலியார் அவர்களின் உத்திரவின்றி பிறர் இதைப் பதிப்பித்தலும், இதை வேறுபாஷையில் மொழி பெயர்த்தலும் அல்லது இதிற் கண்டிருக்கிற பாகங்களை அச்சிடுதலும் கூடாது அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

இப்படிக்கு,

த. துரைசாமி முதலியார்

நெ. 34, நயினியப்ப நாய்க்கன் வீதி, பி. டி. சென்னை.

# போகர் பஞ்சபட்சி தலைப்புகளின் அட்டவணை.

போகர் பஞ்சபட்சி தலைப்புள்ள அகராதி முற்றிற்று.

உ

கடவுள் துணை

# போகர்

திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபக்ஷி சாஸ்திரம்

## மூலமும் - உரையும்

---

### காப்பு

ஞாலங்கண்வாலைமனோன் மணியைப்போற்றி
நன்மைபெறக்குருவருளை மனதிலுன்னி
சீலமதாய்ச்சித்தர்பதம் பணிந்துநாளும்
சினமறவேமுனிவர்களைத் தெரிசித்தேதான்
மூலமுதற்செனிக்கவே யெழுந்தவீசன்
முன்னவனையெந்நாளு முடிவணங்கி
நூலதுவும்பஞ்சபக்ஷி நுட்பமாக
நுவலுகின்றேன்போகர்பெய ரிருக்கத்தானே. 1

### பாயிரம்

இருக்கவேசின்மயத்தின் பாதம்போற்றி
என்மக்காளென்னூலை யிதையத்தேற்றி
மருமமதைக்கண்டறியப் பஞ்சபக்ஷி
வழியறிந்துயாவருமே தொழிலியற்ற
கருக்குருவும்பொருட்குருவும் கனிவாய்க்காண
கசடின்றிகாக்ஷியதாய்க் காண்பித்தேதான்
விருதுபெறப்பஞ்சபக்ஷி விவரமாக
விளம்பினேன்போகருந்தான் விள்ளத்தானே 2

விள்ளவேபஞ்சபக்ஷி யறிந்தோனையா
விவேகியவன்சித்தனெனப் பேருமாச்சு
உள்ளபடியவன்யோகி யவனேவாதி
உண்மையாய்மனோன்மணிக்குச் சிவனுரைத்தார்

கள்ளமறக்காரிகையின் மயலைநீக்கிக்
கனமாகப்பேறுபெற்றோர் காண்பதற்கு
வெள்ளையதாய்ரவிமதியை முன்பின்னாக
விவரித்தேன்போகாது வாக்கினாலே. 3

வாக்காகபஞ்சபக்ஷித் தொழிலைமுன்னம்
வகையறிந்துசெய்பவர்க்கு வழியைக்காண
தாக்காகவறனுடைய நேர்மைகண்டு
தவசிகளுஞ்சித்தர்களுஞ் சொன்னாரில்லை
போக்காகவஷ்டகரும மிதைவெல்லாது
பொல்லாதுபட்சிதொழில் வலிவுமெத்த
சாக்காகவந்தந்தக் கிரியைக்கெல்லாம்
சரியாகவுதவுவது மிந்நூற்றானே. 4

இந்நூலைக்கண்டபேரெதற்குமஞ்சார்
எத்தொழிற்குங்கைத்தொழிலாய்ச் செய்வார்பாரு
பந்நூலையெந்நாளும் பார்த்துப்பார்த்து
பரதவிப்பார்வீணர்களும் பாழாயங்கே
எந்நூலைத்தன்னாலா ராய்ந்துகஷ்ட
மின்றியேவெகுவெளிதி லியற்றினேன்பார்
இந்நூலைக்கருதியே யெவருமெச்சி
யெங்கெங்குந்தேடிடுவ ரியம்பத்தானே. 5

பாயிரம் முற்றிற்று.

---

# பஞ்சபக்ஷிகள்

1. வல்லூறு. 2. ஆந்தை.



3. காகம். 4. மயில். 5. கோழி.

# பூர்வாபரப்பக்ஷிப் படலம்

## நூல்

முன்னாகப்பஞ்சபக்ஷி வலிவைச்சொல்ல
முறையானவூண்பக்ஷி வலிவுமுக்கால்
தன்னிலேநடைப்பக்ஷி யதனிற்பாதி
சந்ததமுமாசின்வலி சாற்றொணாது
அன்னதனிற்றூங்குபக்ஷி வலிவுதானும்
அமையுமேநடைவலிவிற் பாதியாக
சொன்னபடியறியார்கள் மாணப்பக்ஷி
தூக்கத்திற்பாதியாய்ச் சொல்லலாமே.

(இ-ள்.) முதலிற் பூர்வாபரப்பக்ஷிப் படலமென்றும் பூர்வபக்ஷம் அமரபக்ஷமாகிய இரண்டிற்கும் செயற்கையான பக்ஷிகளின் தொகுப்பைக் காட்டுகின்றனவாம். அதாவது ஆதியில் பரமேஸ்வரன் உமையவளுக்குபதேசிக்க, உமையவள் நந்திதேவருக் கருளிச்செய்ய நந்திதேவர் போகருக்குத் திருவாய் மலர்ந்தருள, அப்போகரானவர் இந்நூற் செய்ததன்றி அவர் உரோமரிஷிக்குப் போதிக்க, அவரும் ஓர்ந்து விநாடி பஞ்சபக்ஷியென மற்றொரு நூலும் செய்தனர்.

இப் பஞ்சபக்ஷிகளின் வலிவைச் சொல்லவெனில் ஊண்பக்ஷி வலிவின் முக்காற்பங்கு நடைப்பக்ஷியின் வலிவு அவ்வூண்பக்ஷியிற் பாதியாகவும், உறங்குபக்ஷியின் வலிவு நடைவலிவிற் பாதியாகவும், மாணப்பக்ஷி வலிவு உறங்கும்பக்ஷியிற் பாதியாகவுங்கொள்க அரசின் பக்ஷியின் வலிவோவெனில் கணக்கிட்டுச் சொல்லமுடியாது அதாவது மிகவும் வலிவென்பதாம் எ-று. 1

சொல்லவேபாதியது வலியாங்கொஞ்சம்
துடியாகுமரசதுவும் வலிவுமெத்த
வெல்லவேயரசுவலிக் கொன்றுமில்லை
மேலாயூண்பக்ஷிசயம் பாகியாகும்
புல்லவேநடைபக்ஷி யோட்டமிக்கான்
புகலவேமற்றபக்ஷி வலிவுங்கொஞ்சம்
சொல்லவேயரசற்கு வினையொன்றில்லை
செப்பவேயெத்தொழிலுஞ் செயமுமாமே.

(இ-ள்) முற்கூறியபாதிவலி வென்பது கொஞ்சமென்றும், அரசின் வலிவென்பது அதிகமென்றும், அரசுவலிக்குயாதொரு ஊனமில்லை

யென்றும், முற்றுமுணர்ந்தோர் சொல்லியதில் அவ்வூண்பக்ஷி சுபம் பாகியாகவும், நடப்பக்ஷி ஒட்டக்காரனாகவும், மற்ற இரண்டு பக்ஷிகள் வலிவிற் குறைந்ததெனவும், அரசுபக்ஷிக்கு யாதொன்று பிணையில்லை யெனவும், எத்தொழிற்குஞ் ஜெயமுள்ளதெனவும் சொல்லுவர் நூலாய்ந்தோர் எ-று. 2

செயமடாவரசுக்குப் பகையுமில்லைத்
திரமாகமித்துருவே யாகுமியாவும்
வயமாகச்சகமெல்லா மரசதற்கு
வந்துமேபணியுமஞ் சாதுதாழும்
தயவாகவரசதைமேய பகைத்தோரெல்லாம்
தாணிடர்வரீடேறார் சம்பத்தில்லை
சுயமாகவரசதுவு மிகவுநன்மை
சுகமாசிலியாவுமே தோற்றுப்போமே.

(இ-ள்.) அவ்வரசுக்கு யாதொரு பகையுமில்லையெனவும், அது எவைக்கும் மித்துருவெனவும், அதற்கு ஜகமஞ்சி பணியுமெனவும், யாதுக்கு மஞ்சாதெனவும், அரசைபகைத்தவர் இடர்பட்டு ஈடேறாது வாழ்வுகுன்றி சம்பத்தை யிழப்பரெனவும், அவ்வரசு எக் கருமங்கட்கும் நன்மையெனவும் கூறியதாம் எ-று. 3

## பக்ஷி தொழில்

போமதுவுமூண்பக்ஷி வல்லூறாகும்
புனிதமாய்நடைபக்ஷி யாந்தையாகும்
ஆமதுவுமரசதாய்க் காகமாகும்
அப்பனையுறக்கமது கோழியாகும்
சேமமதாய்மரணமது மயிலதாகும்
செப்பவேபூருவமு மமரந்தானும்
நேமமதாயிவைகளி னெறியுணர்ந்தால்
நீணிலத்திலவனைவெல்ல ரில்லைத்தானே.

(இ-ள்.) இப்பக்ஷிகளில் ஊண் பக்ஷியாவது வல்லூறெனவும், நடைபக்ஷியாவது ஆந்தையெனவும், அரசுபக்ஷியாவது காகமெனவும், துயில் பக்ஷியாவது கோழியெனவும், மரணப் பக்ஷியாவது மயிலாக வும், பூர்வபக்ஷம் அமரபக்ஷம் இரண்டினில் இவ்வைந்து பக்ஷிகளும் முறையே மாறிவருவதை யுண்மையா யுணர்ந்தவரை வெல்ல யாரால் முடியுமென்பதாம் இங்கு தொழிலைப் பொதுவாகக் கூறினல் இவைக ளுக்குச் சிறப்புத்தொழிலுமுள அவற்றைச்சமயம்வந்துழிவரைவாம் எ-று. 4

தானுகாள்பார்த்து வேளைபார்த்துத்
   தப்பாதுபேர்பார்த்து தொழிலைச்செய்யில்
கோனுகவொருவராற் றிருப்பப்போமோ
   குடிகெடுக்குங்கர்மிகட்குச் செய்துபாரு
வானமுள நட்சத்திரம் பார்க்கநன்று
   வவன்ராசி திதிவகுக்க வருமியாவும்
தினமதாய்ப்பிரமிக்கும் வித்தையாகும்
   செப்பரியபோகரிதைக் குறித்ததாமே.

(இ-ள்.) பக்ஷிகள் சஞ்சரிக்கும் நாள்பார்த்து நல்லவேளை பார்த்து அவர் பேர்பார்த்து தொழிலைச் செய்வாராயின் அதைத் திருப்ப ஒருவராலும் முடியாதென்க. அப்படிச் செய்வதிலும் குடிகெடுக்கும் காமிகள்மீது பார்க்கவும் அதிலும் இருவர்பேரும் ஒரு பக்ஷியாயிருக்கின் அங்கு நக்ஷத்திரம் திதிபார்த்து செய்ப யாவும் நன்று. இதை எல்லோரும் பிரமிக்கும் வித்தையாய் போகர் குறிப்பிட்டதென்றறியக் கடவாய் எ-று. 5

## அக்ஷரப் பக்ஷிகள்

குறியென்றால் அகாமது வல்லூறுகும்
   கூறவேஇகாமது வாந்தையாகும்
தெறியான உகாமது காகமாகும்
   நேறவேஎகாமது கோழியாகும்
உறுதியாய்ஒகாமது மயிலதாகும்
   உலகதனிற்பூர்வத்தி னிலையீதப்பா
அறிவுடையோர்காணவே யெளிதில்யானும்
   அனைவருக்குஞ்சொன்ன திது வாதியாமே.

(இ-ள்.) பக்ஷியின் அக்ஷாகுறி என்பது அகாவெழுத்து வல்லூறாகவும், இகாவெழுத்து ஆந்தையாகவும், உகாவெழுத்து காகமாகவும், எகாவெழுத்து கோழியாகவும், ஒகாவெழுத்து மயிலாகவும், பூர்வபக்ஷத்தில் கண்டறிய நிலையீதென ஆதியிற் சொன்னதென்பதாம் எ-று. 6

## பகற்முதல்சாமம் ஊண்பக்ஷி

ஆதிமுதல்ஞாயிறுடன் செவ்வாய்வல்லூறு
   ஆனபுதன் திங்களுக்கு வாந்தையாகும்
சோதியென்றவியாழமது காகமாகும்
   சுயமாகச்சுக்கிரனிற் கோழியாகும்

நீதியாய்ச்சனிதனக்கு மயிலுமுண்ணும்
   நேர்பூர்வப்பகல்முதற் சாமமீதாம்
சேதிக்கவிரவுதனிற் சேயருக்கன்
   சேர்க்காகந்திங்கள்புதன் கோழியென்னே.

(இ-ள்.) முதலில் ஞாயிறு செவ்வாய்க்கு வல்லூறுண்ணும், திங்கள் புதனுக்கு ஆந்தையுண்ணும் நன்மையைத்தரும், வியாழத்துக்குக்காகமுண்ணும், வெள்ளிக்குக்கோழியுண்ணும், நீதியுள்ளசனிக்கு மயிலுண்ணும். இவ்வடைவு பூர்வபக்ஷம் பகல் முதற்காகத்திற் றென்பதாம் எ-று. 7

## இரவு முதற்சாமம் உண்பக்ஷி

என்னவேகுருவார மயில்தானுண்ணும்
   இசையவேவெள்ளியினில் வல்லூறுண்ணும்
பன்னவேமைந்தனுக்கு வாந்தையுண்ணும்
   பகலிரவுவூண்பட்சி வலியைக்காண
தன்னிலேசத்துரு மித்துருவும்பார்த்து
   சார்பாகநேர்வலி யறிந்துகொண்டு
முன்னமேசத்துரு நாளாகாதப்பா
   முறையாகத்தள்ளிவிடு கொடுமைநாளே.

(இ-ள்.) பூர்வபக்ஷம்இரவில் ஞாயிறு செவ்வாய்க்கு காகமுண்ணும், திங்கள் புதனுக்கு கோழியுண்ணும், வியாழத்துக்கு மயிலுண்ணும், வெள்ளிக்கு வல்லூறுண்ணும், சனிக்கு ஆந்தையுண்ணும், வலிவைக்கண்டு சத்துருமித்துரு வேளைபார்த்து நேர்வலிவிற்சத்துரு நாளடுமையுள்ள தாகாதென்பதாம் எ-று. 8

## ஞாயிறு செவ்வாய் பகற்சாமம் 5-க்கும்

### தொழின் முறை

நாளதற்குப்பூர்வபக்ஷம் பகலைச்சொல்ல
   நாயகனேஞாயிறுடன் செவ்வாய்தன்னில்
நீளவேயொன்றுங்கால் வல்லூறுண்ணும்
   நேராகவாந்தைநடை காகங்கோனும்
கோளையறகோழிதுயில் மயிலுஞ்சாகும்
   சோறவேயிரண்டாங்கால் தோகையுண்ணும்
ஏளவேநடைவல்லூ றாந்தைவேந்தாம்
   எக்காலுங்காகமது தூக்கம்பாரே.

(இ-ள்.) ஞாயிறு செவ்வாய் பகற்சாமம் ஐந்துக்கும் தொழில் முறைமைச்சொல்ல பூர்வபக்ஷபம் பகல் ஒன்றுங்காலில் ஞாயிறு செவ்வாய்க்கு வல்லூறூணாகவும், ஆந்தை நடையாகவும், காகம் அரசாகவும், கோழி உறக்கமாகவும், மயில் சாவாகவும், இரண்டாங் காலில் மயில் ஊணாகவும், வல்லூறுநடையாகவும், ஆந்தை அரசாகவும், காகம் உறக்கமாகவும் இருக்குமென்பதாம் எ-று. 9

பாரேநீகோழியது மரணந்தானும்
பண்பாகமூன்றுங்கால் கோழியுண்ணும்
தேரேநீமயில்நடக்கும் வல்லூறுகோனும்
செப்பரியவாந்தையது தூக்கமாகும்
சேரேநீகாகமது மரணமாகிச்
செத்துவிடும்நாலாங்கால் காகமுண்ணும்
நேரேநீகோழியது நடைதானுகும்
நெறியாகமயிலரசாம் நிற்குங்காணே.

(இ-ள்.) கோழிமரணமாகவும், மூன்றுங்காலில் கோழி ஊணாகவும், மயில் நடையாகவும், வல்லூறு அரசாகவும், ஆந்தை உறக்கமாகவும், காகம் மரணமாகவும், நாலாங்காலில் காகம் ஊணாகவும், கோழி நடையாகவும், மயில்அரசாகவும் இருக்கும் பார்த்துக்கொள் எ-று.

நிற்கவேவல்லூறு தூக்கமாகும்
நேர்த்தியாயாந்தையது மரணமங்கே
கற்கவேயைந்தாங்கா லாந்தையுண்ணும்
காகமதுநடைகோழி யரசுசெய்யும்
சொற்கவேமயில்தூங்கும் வலியன்சாகும்
தோற்றவேயருக்கனுடன் செவ்வாயாச்சு
முற்கவியில்போகரவர் மொழிந்தவாக்கு
வுண்மையாமிதன்மேலு மோதக்கேளே.

(இ-ள்.) வல்லூறு தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும், ஐந்தாங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் நடையாகவும், கோழி அரசாவும், மயில் உறக்கமாகவும், வல்லூறுமரணமாகவும், போகர்சொன்ன வாக்கியப்படி அந்தந்தப் பக்ஷிகள் சஞ்சரித்து மாறி மாறிவரும் எ-று.

## திங்கள் புதன் பகற்சாமம் 5-க்கும்

### தொழின் முறை

ஓதவேதிங்கள்புதன் றொழிலைக்கூற
உத்தமனேயொன்றுங்கா லாந்தையுண்ணும்

நீதறவேகாகம்நடை கோழிவேந்தாம்
செயிலாகமயில்தூங்கும் வலியன்சாகும்
நீதமாயிரண்டாங்கால் வல்லூறுண்ணும்
நேர்மையானந்தநடை காகம்கோனும்
சாதனமாய்வரும்கோழி தூக்கமாகும்
சாருமயில்மாணமூன்றுங் காலுக்கேதான்.

(இ-ள்.) திங்கள் புதன் பகல்சாமம் ஐந்திற்குந் தொழில் முறைமையைச் சொல்ல, திங்கள் புதன் முதலாங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் நடையாகவும், கோழி அரசாகவும், மயில் தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும், இரண்டாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை நடையாகவும், காகம் அரசாகவும், கோழி தூக்கமாகவும், மயில் மரணமாகவும் பொருந்தி இருக்கும் எ-று. 12

காலாகமயிலுண்ணும் வல்லூறுசெல்லும்
கண்டாந்தையரசாகுங் காகந்தூங்கும்
மேலாகக்கோழியது மரணமாகும்
மீறவேநாலாங்கால் கோழியுண்ணும்
கோலமாய்மயில்நடக்கும் வல்லூறுகோனும்
குணமாகவாந்தையது தூங்கும்பாரு
சேலாகக்காகமது மரணமாகும்
செப்பவேவயைந்தாங்கால் காகமூணே.

(இ-ள்.) மூன்றுங்காலுக்கு மயில் ஊணாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை அரசாகவும், காகம் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும். நான்காங்காலில் கோழி ஊணாகவும், மயில் நடையாகவும் வல்லூறு அரசாகவும், ஆந்தை துயிலாகவும், காகம் மரணமாகவும் பொறுந்தும் எ-று. 13

ஊணைகோழிநடை மயிலும்வேந்தாம்
ஒக்கவேவல்லூறு தூங்கும்பாரு
ஆனாகவாந்தையது மரணமாகும்
தப்பாதுதிங்கள்புத னிற்சொல்ல
கோனாகவறிவுடையோர் குறியைக்காண
கூறியதும்பஞ்சபட்சி போகர்வாக்கு
பானாகவுலகறியச் சொன்னதல்லால்
பண்பாகக்குருவாரப் பாகங்கேளே.

(இ-ள்.) ஐந்தாங்காலில் காகம் ஊணாகவும், கோழி நடையாக வும், மயில் அரசாகவும், வல்லூறு தூக்கமாகவும், ஆந்தை மரணமாக வும், திங்கள் புதவாரங்களில் அறிவுடையோர் இக்குறிப்பைக் காண பஞ்சபட்சியைப் போகர் உலகறியச் சொல்லியதன்றி பின் குருவா ரத்தின் பகுப்பை யுரைக்கக் கேட்பாயாக எ-று. 14

## வியாழம் பகல்சாமம் 5-க்கும்

### தொழின் முறை

பாகமாய்வியாழமதி னொன்றாங்காலிற்
பகரவேகாகமூண் கோழிசெல்லும்
தோகைமயிலாசதாம் வல்லூறுதூங்கும்
தொல்லுலகிலாந்தையது மரணங்காண
போகமாயிரண்டாங்கா லாந்தையுண்ணும்
புகல்காகம்நடைகோழி யரசதாகும்
வேகமாய்மயில்தூங்கும் வல்லூறுசாகும்
விதமாய்மூன்றாங்கால் விளம்புவேனே.

(இ-ள்.) வியாழம் பகல்சாமம் ஐந்துக்கும் தொழில் முறைமை யைசொல்ல, வியாழம் முதலாங்காலில் காகம் ஊணாகவும், கோழி நடை யாகவும், மயில் அரசாகவும், வல்லூறு தூக்கமாகவும், ஆந்தைமரண மாகவும், இரண்டாங்காலில் ஆந்தைஊணாகவும், காகம் நடையாகவும், கோழி அரசாகவும், மயில் தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும் பொருந்தும் எ-று. 15

விளம்பவேவல்லூறு ணாந்தைசெல்லும்
வீற்றிருக்குங்காகமது வரசதாக
களிஞ்சிப்க்கும்கோழியது தூக்கமாகும்
கானகத்தின்மயிலதுவு மரணமாகும்
திளம்பவேநாலாங்கால் மயில்தானுண்ணும்
கேள்வல்லூறுநடை யாந்தையரசதாகும்
உளமகிழுகாகந்தூங்கும் கோழிசாகும்
உத்தமனேயைந்தாங்கா லுவந்துகேளே.

(இ-ள்.) மூன்றாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை நடை யாகவும்,காகம்அரசாகவும், கோழிதூக்கமாகவும், மயில்மரணமாகவும் நாலாங்காலில் மயில் ஊணாகவும்,வல்லூறு நடையாகவும், ஆந்தை அர

சாகவும், காகம் தூக்கமாகவும், கோழி மாணமாகவும் பொருந்தும் எ-று. 16

உகந்துமே கோழியூண் மயில்நடக்கும்
ஊர்வல்லூறரசதா மாந்தைதூங்கும்
புகழ்ந்துமே காகமது மாணமாகும்
புனிதமாய்ரோமருக்கு யான்போதித்த
வகைப்படியே யவர்பஞ்ச பட்சிபாடி
வையகத்தினூல்செய்தார் வளமதாக
இகந்தனிலே தன்னூலிற் சொன்னூல்சூட்சம்
எள்ளளவும்பிசகாது விளம்பலாமே.

(இ-ள்.) ஐந்தாங்காலில் கோழி ஊணாகவும், மயில் நடையாகவும், வல்லூறு அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், காகம் மாணமாகவும், உரோமரிஷிக்கு போகர் போதித்த வழக்கப்படி அவர் விருடி பஞ்ச பட்சியென வேறோர் நூலியற்றியதில் அந் நூலிற்கு இந் நூல் வெகு சூக்ஷ்மமாய் எள்ளத்தனை பிசகின்றி விளங்குமென் றறிவாயாக எ-று.

## வெள்ளி பகல்சாமம் 5-க்கும்

### தொழின் முறை

இன்பமாய் வெள்ளியதின் பகலிற்கப்பா
லேற்கவேயொன்றாங்கால் பட்சிசொல்ல
தன்மையாய்க் கோழியுண்ணும் மயில்நடக்கும்
சாதகமாய்வல்லூறு வாசதாகும்
கன்மமுள வாந்தையுமே யதுவுந்தூங்கும்
காகமதுசெத்துவிடுங் கணிதமாக
சொன்மயமா யிரண்டாங்கால் காகமுண்ணும்
தோலாதுகோழியது நடக்கும்பாரே.

(இ-ள்.) வெள்ளி பகல்ஜாமம் ஐந்துக்கும் தொழின்முறையைச் சொல்ல, வெள்ளி முதலாங்காலில் கோழி ஊணாகவும், மயில் நடையாகவும், வல்லூறு அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், காகம் மாணமாகவும், இரண்டாங்காலில் காகம் ஊணாகவும், கோழி நடையாகவும் பொருந்தும் எ-று. 18

நடக்கவே மயிலரசாய் வல்லூறுதூங்கும்
நவிலாந்தைமாணமா மூன்றாங்காலில்

கடக்கவே யாந்தையுண்ணும் காகஞ்செல்லும்
காணவேகோழியது வரசாய்நிற்கும்
மடக்கவே மயில்தூங்கும் வல்லூறுசாகும்
வாகாகநாலாங்கால் வலியனுண்ணும்
அடக்கமா யாந்தைநடை காகம்வேந்தாம்
அங்ஙனேகோழியது தூங்கும்பாரே.

(இ-ள்.) மயில் அரசாகவும், வல்லூறு தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும், மூன்றுங்காலில் ஆந்தை யூணாகவும், காகம் நடையாகவும், கோழி அரசாகவும், மயில் தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும், நாலாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை நடையாகவும், காகம் அரசாகவும், கோழி தூக்கமாகவு மிருக்குமென்பதாம் எ-று. 19

தூங்கவே மயில்மரண மைந்தாங்காலில்
தோகைமயிலூண்வல்லூறு நடையதாகும்
தாங்கவே யாந்தைகோன் காகந்தூங்கும்
தனிக்கோழியதுமரணஞ் சாற்றுங்காலை
நீங்கவே பட்சிபலன் கண்டாயானால்
நிகரில்லையுனக்கொருவர் நிபுணநீயே
தேங்கவே நிற்காதே போகர்சொன்ன
தினம்பார்த்துயெத்தொழிலுஞ் செய்துபாரே.

(இ-ள்.) மயில் மரணமாகவும், ஐந்தாங்காலில் மயில் ஊணாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை அரசாகவும், காகம் தூக்கமாகவும், கோழி மரணமாகவும், செல்லுங்கால் இப் பட்சிப்பலனைக் கண்டறிந்தாயானால் உனக்கு நிகரொருவரின்றி நீயே நிபுணனென, போகர் சொல்லிய தினம்பார்த்து எத்தொழிலுஞ் செய்து முடிப்பாயாக எ-று.

## சனி பகல்சாமம் 5-க்கும்

### தொழின் முறை

சீரவே சனிபகலி லொன்றுங்காலில்
செப்பவேமயிலதுவு முண்ணும்பாரு
சீரதாய் வல்லூறு நடக்குமங்கே
தேசமதிலாந்தையது வரசுசெய்யும்
ஆரவே காகமது தூக்கமாகும்
அருங்கோழிமரணமா மிரண்டாங்காலில்
நேரதாய் கோழியது வுண்ணும்பாரு
நிச்சயமாய்மயில்நடக்கும் நிலையீதாமே.

(இ-ள்.) சனிவாரம் பகல்சாமம் ஐந்துக்கும் தொழின் முறைமைச் சொல்ல, சனிபகல் முதலாங்காலில் மயில் ஊணாகவும். வல்லூறு நடையாகவும், ஆந்தை அரசாகவும், காகம் தூக்கமாகவும், கோழி மரணமாகவும், இரண்டாங்காலில் கோழி ஊணாகவும், மயில் நடையாகவும் தெரிந்துக்கொள்ளக்கடவாய் எ-று. 21

நிலையாகவல்லூறு வரசுசெய்யும்
நேராகவாந்தையது தூங்கும்பாரு
தலையானகாகமது மரணமாகும்
தங்கவேமூன்றுங்கால் காகமுண்ணும்
துலேகோழிநடைநடக்கும் தோகைவேந்தாம்
சொல்லவேவல்லூறு தூக்கமாகும்
அலையவேயாந்தையது மரணமாகும்
அப்பாலும்நாலாங்கா லறையக்கேளே.

(இ-ள்.) வல்லூறு அரசாகவும் ஆந்தை தூக்கமாகவும், காகம் மரணமாகவும், மூன்றுங்காலில் காகம் ஊணாகவும், கோழி நடையாகவும், மயில் அரசாகவும், வல்லூறு தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும் எ-று. 22

அறையவேயாந்தையுண்ணும் காகம்செல்லும்
அங்ஙனேகோழியது வரசுசெய்யும்
நிறையவேமயில்தூங்கும் வல்லூறுசாகும்
நேராகவந்தாக்கால் வல்லூறுண்ணும்
துறையாகவாந்தைநடை காகம்வேந்தாம்
சொல்லரியகோழியது தூக்கமாகும்
மறையவேமயில்மரணம் பூர்வபட்சம்
வசனித்தேன்போகர்பட்சி வகையிதாமே.

(இ-ள்.) நாலாங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் நடையாகவும், கோழி அரசாகவும், மயில் தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும் பொருந்தும். ஐந்தாங்காலிற் வல்லூறு ஊணாகவும், ஆந்தை நடையாகவும், காகம் அரசாகவும், கோழி தூக்கமாகவும், மயில் மரணமாகவும், பூர்வ பட்சம் பகல் பட்சியைப் போகருரைத்த தென்பதாம் எ-று.

## ஞாயிறு செவ்வாய் இரவுசாமம் 5-க்கும் தொழின்முறை

வகையாகப்பூர்வபட்ச மிரவிற்கேளு
வாகாகச்செவ்வாயொ டருக்கனுளில்

துகைபாகவொன்றுங்கால் காகமுண்ணும்
சூழவேயாந்தைநடை வல்லூறுவேந்தாம்
பகைபாகமயில்தூங்கும் கோழிமாளும்
பார்க்கவேயிரண்டாங்கால் மயிலுமுண்ணும்
திகைத்திடவேகோழிநடை காகம்வேந்தாம்
தீர்க்கமாயாந்தையது தூக்கஞ்சொல்லே.

(இ-ள்.) பூர்வபட்சம் ஞாயிறு செவ்வாய் இரவுசாமம் ஐந்துக்கும் தொழில் முறைமைச் சொல்ல ஞாயிறு செவ்வாயில் ஒன்றுங்காலில் காகம் ஊணாகவும், ஆந்தை நடையாகவும், வல்லூறு அரசாகவும், மயில் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும். இரண்டாங்காலில் மயில் ஊணாகவும், கோழி நடையாகவும், காகம் அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 24

சொல்லவேவல்லூறு மரணமாகும்
தோன்றவேமூன்றுங்கா லாந்தையுண்ணும்
வெல்வலியநடையாகு மயிலும்வேந்தாம்
வீற்றிருக்கும்கோழியது தூக்கமாகும்
அல்லல்படுங்காகமது மரணமாகும்
அங்ஙனேநாலாங்காற் கோழியுண்ணும்
செல்லவேகாகம்நடை யாந்தைவேந்தாம்
தீரமாய்வல்லூறு தூங்குமென்னே.

(இ-ள்) வல்லூறு மரணமாகவும், மூன்றுங்காலில் ஆந்தை ஊணாகவும், வல்லூறு நடையாகவும், மயில் அரசாகவும், கோழி தூக்கமாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும். நாலாங்காலில் கோழி ஊணாகவும், காகம் நடையாகவும், ஆந்தை அரசாகவும், வல்லூறு தூக்கமாகவும் கண்டுகொள்க எ-று. 25

என்னவேமயிலதுவு மரணமாகும்
இசையவேயைந்தாங்கால் வல்லூறுண்ணும்
பன்னவேமயில்நடக்கும் கோழிவேந்தாம்
பாங்காகக்காகமது தூங்கும்பாரு
அன்னதனிலாந்தையது மரணமாகும்
அங்ஙனே திங்களுக்கும் புதனுக்கப்பா
சொன்னபடியொன்றுங்கால் கோழியுண்ணும்
அடிகாகம்நடையாந்தை யாசமாமே,

(இ-ள்.) மயில் மரணமாகவும் பொருந்தும், ஐந்தாங்காலில் வல்லூறு ஊணாகவும், மயில் நடையாகவும், கோழி அரசாகவும், காகம் தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும். திங்கள் புதனில் முதலாங்காலில் கோழி ஊணாகவும், காகம் நடையாகவும், ஆந்தை அரசாகவும் பொருந்தும் எ-று. 26

## திங்கள் புதன் இரவுசாமம் 5-க்கும்

### தொழின்முறை

அரசனால்வல்லூறு தூங்குமங்கே
அடைவாகமயிலதுவும் மரணமாகும்
பரவவேயிரண்டாங்கால் வல்லூறுண்ணும்
பகர்மயிலும்நடைநடக்கும் கோழிவேந்தாம்
சரபாகக்காகமது தூக்கமாகும்
சார்பாகவாந்தையது மரணமங்கே
வரமாகமூன்றுங்கால் காகமுண்ணும்
மகத்தானவாந்தையது நடக்கும்பாரே.

(இ-ள்.) திங்கள் புதன் இரவுசாமம் ஐந்துக்கும் தொழின்முறையைச்சொல்ல வல்லூறு தூக்கமாகவும், மயில் மரணமாகவும் பொருந்தும். இரண்டாங்காலில் வல்லூறு ஊணாகவும், மயில் நடையாகவும், கோழி அரசாகவும், காகம் தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும். மூன்றுங்காலில் காகம் ஊணாகவும், ஆந்தை நடையாகவும் பொருந்தும் எ-று. 27

பார்க்கவே வல்லூறு வாசுசெய்யும்
பாங்காகமயில்தூங்கும் கோழிசாகும்
சேர்க்கவே நாலாங்கால் மயிலுமுண்ணும்
திகழ்கோழிநடைகாக மரசதாகும்
ஆர்க்கவே யாந்தையது தூங்குமங்கே
அரிதானவல்லூறு மரணமாகும்
போர்க்கவே யைந்தாங்கா லாந்தையுண்ணும்
பிரபலமாய்வல்லூறு நடக்குங்கேளே.

(இ-ள்.) வல்லூறு அரசாகவும், மயில் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும், நாலாங்காலில் மயில் ஊணாகவும், கோழி நடையாகவும், காகம் அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும் பொருந்தும். ஐந்தாங்காலில் ஆந்தை ஊணாகவும், வல்லூறு நடையாகவும் இருக்கும் எ-று. 28

கேளப்பாமயிலரசு கோழிதூக்கம்
  கெட்டியாய்க்காகமது மரணமாகும்
வேளப்பாதிங்கள்புதன் வாரத்தப்பால்
  வியாழத்திலொன்றாங்கால் மயிலூமுண்ணும்
நீளப்பாகோழியது நடைநடக்கும்
  நிகழ்த்தவேகாகமது வாசுசெய்யும்
கேளப்பாவாந்தையது தூக்கமாகும்
  கொல்லவேவல்லூறு மரணமாமே.

(இ-ள்.) மயில் அரசாகவும், கோழிதூக்கமாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும். இவ்வாரங்கட்கப்பால் வியாழம் முதலாங்காலில் மயில் ஊணாகவும், கோழி நடையாகவும், காகம் அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும் பொருந்தும் எ-று. 29

## வியாழம் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறை

மாணம்பின்வியாழத் திரண்டாங்காலில்
  வாகாகவாந்தையது வுண்ணும்பாரு
இரணமாய் வலியானது நடைநடக்கும்
  இருடையாய்மயிலதுவு மரசுசெய்யும்
திரணமாய் கோழியது தூங்கும்பாரு
  சொல்லவேகாகமது மரணமாகும்
பிரபலமாய் மூன்றாங்கால் கோழியுண்ணும்
  பெருங்காகம்நடையாந்தை யரசதாமே.

(இ-ள்.) வியாழம் இரவுசாமம் ஐந்துக்கும் தொழின்முறையைச் சொல்ல வியாழம் இரண்டாங்காலில் ஆந்தை வூணாகவும், வல்லூறு நடையாகவும், மயில் அரசாகவும், கோழி தூக்கமாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும். மூன்றாங்காலில் கோழி யூணாகவும், காகம் நடையாகவும், ஆந்தை அரசென்றறிக எ-று. 30

ஈதாகும் வல்லூறு தூக்கமஞ்ஞை
  இறந்துவிடும்நாலாங்கால் வல்லூறுண்ணும்
போதாகு மயில்நடக்கும் கோழிவேந்தாம்
  புகலவேகாகமது தூக்கமாகும்

தீதாகவார்ந்தையது மரணமாகும்
செப்பவேயைந்தாங்கால் காகமுண்ணும்
சாதாகுமார்ந்தைநடை வல்லூறுவேந்தாம்
தனிமயில்தூங்குங்கோழி மரணஞ்சாற்றே.

(இ-ள்.) வல்லூறு தூக்கமாகவும், மயில் மரணமாகவும் பொருந்தும் நாலாங்காலில் வல்லூறு ஊணாகவும், மயில் நடையாகவும், கோழி அரசாகவும், காகம் தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும் ஐந்தாங்காலில் காகம் ஊணாகவும், ஆந்தை நடையாகவும், வல்லூறு அரசாகவும், மயில் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும் எ-று. 31

## வெள்ளி இரவுசாமம் 5-க்கும்

### தொழின் முறை

சாற்றவேவெள்ளிபதி னொன்றுங்காலில்
தங்கிவந்துவல்லூறு வுண்ணும்பாரு
போற்றவேமயிலதுவும் நடையுமாகும்
புகழாகக்கோழியது வரசுசெய்யும்
ஏற்றவேகாகமது தூக்கங்கொள்ளும்
இசையவேயார்ந்தையது மரணமாகும்
தேற்றவேயிரண்டாங்கால் காகமுண்ணும்
சொல்லவேயார்ந்தை நடைசேதியாமே.

(இ-ள்.) வெள்ளி யிரவுசாமம் ஐந்துக்கும் தொழில் முறையைச் சொல்ல வெள்ளி முதலாங்காலில் வல்லூறு ஊணாகவும், மயில் நடையாகவும், கோழி அரசாகவும், காகம் தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும் இரண்டாங்காலில் காகம் ஊணாகவும், ஆந்தை நடையாகவும் எ-று. 32

சேதிக்கவல்லூறு வரசுசெய்யும்
தீவிரமாய்மயில்தூங்கும் கோழிசாகும்
வேதிக்கமூன்றுங்கால் மயிலுமுண்ணும்
மென்கோழிநடைநடக்கும் காகம்வேந்தாம்

போதிக்கவாந்தைதுயி வல்லூறுசாகும்
புகழாகநாலாங்கா லாந்தையுண்ணும்
போதிக்கவல்லூறு நடையதாகும்
பெருமயிலு மாசதாய்ப்பேசலாமே.

(இ-ள்.) வல்லூறு அரசாகவும் மயில் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும் மூன்றாங்காலில் மயில் ஊணாகவும், கோழி நடையாகவும், காகம் அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும் பொருந்தும் நாலாங்காலில் ஆந்தை ஊணாகவும் வல்லூறு நடையாகவும், மயில் அரசாகவும் எ-று. 33

பேசவேகோழியது தூக்கமாகும்
பிடிக்கக்காகமது மரணமாகும்
நேசமாயைந்தாங்கால் கோழியுண்ணும்
நிலையாகக்காகம்நடை யாந்தைவேந்தாம்
வாசமாய்வல்லூறு தூக்கங்கொள்ளும்
வாடியேமயில்மரணம் வெள்ளிக்கேற்க
பாசமாய்ரோமருக்குப் போகர்சொன்ன
பட்சிநடைகோணாது பலிக்கும்பாரே.

(இ-ள்.) கோழி தூக்கமாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும், ஐந்தாங்காலில் கோழி ஊணாகவும், காகம் நடையாகவும், ஆந்தை அரசாகவும்; வல்லூறு தூக்கமாகவும்; மயில் மரணமாகவும் பொருந்தும், வெள்ளிக்குப்பொருந்த ரோமரிஷிக்கு போகர் கூறியவாறு பட்சி நடை பிசகாது பலிக்குமென்பது திண்ணம் எ-று. 34

## சனி இரவுசாமம் 5-க்கும்

### தொழின் முறை

பலிக்கவேசனிவாரப் பட்சியங்கே
பாங்காகவொன்றாங்கா லாந்தையுண்ணும்
சலிக்கவேவல்லூறு நடையதாகும்
தாட்டியாய்மயிலரசாய் கோழிதூங்கும்
ஒலிக்கவேகாகமது மரணமாகும்
ஒக்கவேயிரண்டாங்கால் கோழியுண்ணும்
கெலிக்கவேகாகம்நடை யாந்தைவேந்தாம்
கேள்வல்லூறு தூக்கமாய்கிடைக்கும்பாரே.

(இ-ள்.) சனி இரவுசாமம் ஐந்துக்கும் தொழில் முறையைச் சொல்ல சனி முதலாங்காலில் ஆந்தை ஊணாகவும், வல்லூறு நடையாகவும் மயில் அரசாகவும், கோழி தூக்கமாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும். இரண்டாங்காலில் கோழி ஊணாகவும், காகம் நடையாகவும், ஆந்தை அரசாகவும் வல்லூறு தூக்கமாகவும் எ-று. 35

கிடக்கவேமயிலது மரணமாகும்
கீர்த்தியாய்மூன்றாங்கால் வல்லூறுண்ணும்
அடக்கவேகோழிநடை மயிலும்வேந்தாம்
ஆனந்தமாகவே காகந்தூங்கும்
தொடக்கமாயாந்தையது மரணமாகும்
சொல்லவேநாலாங்கால் காகமுண்ணும்
மடக்கவேயாந்தைநடை வல்லூறுவேந்தால்
மயில்தூங்கும் கோழியதுமரணந்தானே.

(இ-ள்.) மயில் மரணமாகவும் பொருந்தும். மூன்றாங்காலில் வல்லூறு ஊணாகவும், கோழி நடையாகவும், மயில் அரசாகவும், காகம் தூக்கமாகவும், ஆந்தை மரணமாகவும் பொருந்தும். நாலாங் காலில் காகம் ஊணாகவும், ஆந்தை நடையாகவும், வல்லூறு அரசாகவும், மயில் தூக்கமாகவும், கோழி மரணமாகவும் பொருந்தும் எ-று. 36

காணவேயைந்தாங்கால் மயிலுமுண்ணும்
கணிதமாய்கோழியது நடையுமாகும்
தோணவேகாகமது வரசதாகும்
சூழவேயாந்தையது தூங்குமங்கே
ஊணவேவல்லூறு மரணமாகும்
ஓதவேபூர்வபட்சத் தொழிலிதாகும்
பூணவேயிரவுபக லறுபதுக்கும்
போகர்மொழிந்திட்ட பொருளிதேயாகும்.

(இ-ள்.) ஐந்தாங்காலில் மயில் ஊணாகவும், கோழி நடையாகவும், காகம் அரசாகவும், ஆந்தை தூக்கமாகவும், வல்லூறு மரணமாகவும், பூர்வபட்சம் அமரபட்சம் பகலிரவு தொழின்முறைகளை அந்தந்த வாரங்களின் தினம் அறுபது நாழிகைக்கும் போகர் சொல்லியபடி பொருளாகக் கொள்ளவும் எ-று. 37

# அங்கபட்சிகள்



## ஞாயிறு செவ்வாய் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | அரசு | மரணம் | நடை | நித்ரை |
|---|---|---|---|---|
| 1½ | 1¼ | 2 | ¾ | ⅛ |
| அ வல்லூர் | இ ஆந்தை | உ காகம் | எ கோழி | ஒ மயில் |
| மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி |
| கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் |
| காகம் | கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை |
| ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூர் |

## ஞாயிறு செவ்வாய் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நடை | அரசு | நித்ரை | மரணம் |
|---|---|---|---|---|
| 1¼ | 1 | 1½ | 1¼ | 1 |
| உ காகம் | அ வல்லூர் | எ கோழி | இ ஆந்தை | ஒ மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |



## திங்கள் புதன் பகற் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நடை | அரசு | நித்ரை | மரணம் |
|---|---|---|---|---|
| 1½ | 1¼ | 2 | ¾ | ½ |
| இ ஆந்தை | உ காகம் | எ கோழி | ஒ மயில் | அ வல்லூர் |
| வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
| மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி |
| கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் |
| காகம் | கோழி | பயில் | வல்லூர் | ஆந்தை |

## திங்கள் புதன் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | அரசு | மரணம் | நடை | நித்ரை |
|---|---|---|---|---|
| 1¼ | 1 | 1½ | 1¼ | 1 |
| எ கோழி | இ ஆந்தை | ஒ மயில் | உ காகம் | அ வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |

## வியாழம் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நடை | அரசு | நித்ரை | மரணம் |
|---|---|---|---|---|
| 1½ | 1¼ | 2 | ¾ | ½ |
| உ<br>காகம் | எ<br>கோழி | ஒ<br>மயில் | அ<br>வல்லூர் | இ<br>ஆந்தை |
| ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூர் |
| வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
| மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி |
| கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் |

## வியாழம் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | அரசு | மரணம் | நடை | நித்ரை |
|---|---|---|---|---|
| 1¼ | 1 | 1½ | 1¼ | 1 |
| ஒ<br>மயில் | உ<br>காகம் | அ<br>வல்லூர் | எ<br>கோழி | இ<br>ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |

## வெள்ளி பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நடை | அரசு | நித்திரை | மரணம் |
|---|---|---|---|---|
| 1½ | 1¼ | 2 | ¾ | ½ |
| எ<br>கோழி | ஒ<br>மயில் | அ<br>வல்லூர் | இ<br>ஆந்தை | உ<br>காகம் |
| காகம் | கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை |
| ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூர் |
| வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
| மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி |

## வெள்ளி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | அரசு | மரணம் | நடை | நித்திரை |
|---|---|---|---|---|
| 1¼ | 1 | 1½ | 1¾ | 1 |
| அ<br>வல்லூர் | எ<br>கோழி | இ<br>ஆந்தை | ஒ<br>மயில் | உ<br>காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |

## சனி பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நடை | அரசு | நித்ரை | மரணம் |
|---|---|---|---|---|
| $1\frac{1}{2}$ | $1\frac{1}{4}$ | 2 | $\frac{3}{4}$ | $\frac{1}{2}$ |
| ஒ<br>மயில் | அ<br>வல்லூர் | இ<br>ஆந்தை | உ<br>காகம் | எ<br>கோழி |
| கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை | காகம் |
| காகம் | கோழி | மயில் | வல்லூர் | ஆந்தை |
| ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூர் |
| வல்லூர் | ஆந்தை | காகம் | கோழி | மயில் |

## சனி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | அரசு | மரணம் | நடை | நித்ரை |
|---|---|---|---|---|
| $1\frac{1}{4}$ | 1 | $1\frac{1}{2}$ | $1\frac{1}{4}$ | 1 |
| இ<br>ஆந்தை | ஒ<br>மயில் | உ<br>காகம் | அ<br>வல்லூர் | எ<br>கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |

# அமரபட்சப்படலம்

## அமரபட்சப்பட்சிகள்

அமரபட்சம் அகரமது கோழியாகும்
அங்ஙனே இகரமது வல்லூறாகும்
சரசமாய் உகரமது ஆந்தையாகும்
சாற்றவே எகரமது மயிலதாகும்
குமரவே ஒகரமது காகமாகும்
கோணாது அட்சரத்தை மாறிநீயும்
தமதறிவா னின்றநிலை கவனிக்காதால்
தப்பிவிடும் போகர்பட்சி சரிவராதே.

(இ-ள்.) அமரபட்சம் அக்ஷரபட்சிகளாவன:—அகரம் கோழியாகவும், இகரம் வல்லூறாகவும், உகரம் ஆந்தையாகவும், எகரம் மயிலாகவும், ஒகரம் காகமாகவும், பிசகாது அட்சரங்களை மாறி நீ உன்னுடைய மனதை வேறு வழியிற் செல்லவிடாது ஒருவயப்பட்டு உமதறிவை பட்சிகள் நிற்குநிலையைக் கவனியாவிட்டால் சொல்லுகிற பாவும் பிசகிவிடும் ஆதலால் போகர் திருவாய்மலர்ந்த பஞ்சபக்ஷிசாஸ்திரம் ஒற்றுமைப்படாது இதனால் சாஸ்திரம் பொய்யென்று நூதன விவேகிகள் கூறுவர் எ-று. 38

## வாரங்கள் 7-க்கும் ஊண்பட்சி

சரியாகச்சனியுடனே திங்கள்வாரம்
தங்கியேமயிலுண்ணும் புதனுக்கப்பா
பரிவாகக்காகமுண்ணும் வெள்ளியென்றால்
பார்க்கவேவல்லூறு பாங்காயுண்ணும்
உரியதோர்வியாழத்தி லாந்தையுண்ணும்
உயர்கதிசெவ்வாய்க்குக் கோழியுண்ணும்
பிரியவேபகல்போக விரவுதன்னில்
பிள்ளைமந்தன் திங்கட்குக் கோழியூணே.

(இ-ள்.) வாரங்கள் ஏழுக்கும் ஊண்பட்சிகளாவன:—திங்கள் சனிக்கு மயில் ஊணாகவும், புதனுக்கு காகம் ஊணாகவும், வெள்ளிக்கு வல்லூறு ஊணாகவும், வியாழத்துக்கு ஆந்தை ஊணாகவும், ஞாயிறு செவ்வாய்க்கு கோழி ஊணாகவும், பகல்சாமப் பட்சிகளைச் சொல்வாய் எ-று. 39

ஊணதுவும்புந்தியினி லாந்தையுண்ணும்
உள்ளபடிவியாழத்திற் காகமுண்ணும்
தானதுவும்கதிர்செவ்வாய் வல்லூறுண்ணும்
தப்பாதுவெள்ளிக்கு மயிலுமுண்ணும்
ஆனதுவும்பட்சிபல னெழுத்தறிந்து
அதிலெந்தக்காரியமுஞ் செய்யநன்று
தீனமுடன்போகருந்தான் திருசியத்தில்
செப்பியதும்பொய்யல்ல செம்மையாமே.

(இ-ள்.) இரவு சாமப்பட்சிகளில் திங்கள் சனிக்கு கோழி ஊணாகவும், புதனுக்கு ஆந்தை ஊணாகவும், வியாழத்துக்கு காகம் ஊணாகவும், வெள்ளிக்கு மயில் ஊணாகவும், அந்தந்த பட்சிகளின் எழுத்துகளைக் கண்டறிந்து எந்தக் காரியமுஞ் செய்ய நன்மையாம். எனப் போகர் திருசியத்திற் செப்பியது பொய்யாது செம்மையாம் எ-று. 40

## திங்கள் சனிபகல் சாமம் 5-க்கும்
### தொழின் முறை

செம்மையாயமரபட்சம் பகலைக்கேளு
திங்கள்சனிவாரமொன்றுங் காலிலப்பா
இம்மையிலேமயிலுண்ணுங் கோழிவேந்தாம்
எழிற்காகமரணமா மாந்தைசொல்லும்
அம்மெனவேவல்லூறு தூங்கிவீழும்
அங்கிரண்டாங்கால்முனியுண் வலியன்வேந்தாம்
தம்பிலேமயிலிறக்கும் கோழிசெல்லும்
தனிக்காகமதுவுறங்குந் தடையிலாதே.

(இ-ள்.) திங்கள் சனி பகல்சாமம் ஐந்துக்கும் தொழின் முறையைச் சொல்ல, திங்கள் சனி முதலாங்காலில் மயில் ஊணாகவும், கோழி அரசாகவும், காகம் மரணமாகவும், ஆந்தை நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும், இரண்டாங்காலில் ஆந்தை ஊணாகவும், வல்லூறு அரசாகவும், மயில் மரணமாகவும், கோழி நடையாகவும், காகம் தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 41

தடையறவேமூன்றுங்கால் கோழியுண்ணும்
தரைகாகமரசாளும் ஆந்தைசாகும்
இடையிலேவல்லூறு நடக்குந்தோகை
இதிற்றூங்குநாலாங்கால் வலியனுண்ணும்

கடையிலேமயிலரசாங் கோழிசாகும்
  கருங்காகம்நடையாந்தை யுறங்கும்பாரு
அடையவேவையந்தாங்கால் காகமுண்ணும்
  ஆந்தையரசாம்வல்லூறு சாகுங்காணே.

(இ-ள்.) மூன்றாங்காலில் கோழி யூணாகவும், காகம் அரசாகவும், ஆந்தை மரணமாகவும், வல்லூறு நடையாகவும், மயில் தூக்கமாக வும், நாலாங்காலில் வல்லூறு வூணாகவும், மயில் அரசாகவும், கோழி மரணமாகவும், காகம் நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும் ஐந்தாங் காலில் காகம் ஊணாகவும், ஆந்தை அரசாகவும், வல்லூறு மரணமாக வும் எ-று. 42

காணவேமயினடக்கும் கோழிதூங்கும்
  காயுடனம்புலிக்குச் சொன்னதல்லால்
தோணவேயருக்கன்சே யொன்றாங்காலில்
  சுகமாகக்கோழியூண் காகம்வேந்தாம்
காணவேமுனிமரணம் வல்லூறுசெல்லும்
  கவில்மயிலுந்தூங்கிவிடு மிரண்டாங்காலில்
பூணவேவல்லூறாண் மயிலும்வேந்தாம்
  பகல்கோழிசாங்காகம் நடக்கும்பாரே.

(இ-ள்.) மயில் நடையாகவும், கோழி தூக்கமாகவும், இவ்வாறு திங்கள் சனிக்குச் சொன்னதல்லாது ஞாயிறு செவ்வாய் பகல் ஜாமம் ஐந்துக்கும் தொழில் முறையைச் சொல்ல ஞாயிறு செவ்வாய் முத லாங் காலில் கோழி ஊணாகவும், காகம் அரசாகவும், ஆந்தை மரண மாகவும், வல்லூறு நடையாகவும், மயில் தூக்கமாகவும், இரண்டாங் காலில் வல்லூறு ஊணாகவும், மயில் அரசாகவும், கோழி மரணமாக வும் காகம் நடையாகவும் எ-று. 43

## ஞாயிறு செவ்வாய் பகல் சாமம் 5-க்கும் தொழின் முறை

பாருமேமுனிதூங்கு மூன்றாங்காலில்
  பருங்காகமுணாந்தை யரசதாகும்
ஒருமேவல்லுறுசாம மயில்நடக்கும்
  இதிற்சேவல்துயில் நாலாங்கால்மயிலுண்

ணோருமோகோழியுங்கோன் காகஞ்சாகும்
நீளாந்தை நடை வல்லூறுறங்கும்பாரு
கோருமேயைந்தாங்கா லாந்தையுண்ணும்
கூர்வலியன்கோன் மயிலுமிறக்கும்பாரே.

(இ-ள்.) ஆந்தை தூக்கமாகவும், மூன்றாங்காலில் காகம் ஊணாக வும், ஆந்தை அரசாகவும், வல்லூறு மாணமாகவும், மயில் நடையாக வும், கோழி தூக்கமாகவும், நாலாங்காலில் மயில் ஊணாகவும், கோழி அரசாகவும், காகம் மாணமாகவும் ஆந்தை நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும், ஐந்தாங்காலில் ஆந்தைஊணாகவும், வல்லூறு அரசாக வும் மயில் மாணமாகவும் பொருந்தும் பார்ப்பாராக எ-று. 44

## புதன் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறை

நேரவுங்கோழிநடை காகந்தூங்கும்
நிலையாகப்புதன்பகலி லொன்றாங்காலில்
தேரவுங்காகமூ ணாந்தைவேந்தாம்
திகழ்வல்லூறுசாகுமயில் நடக்குமுன்னே
சேரவுங்கோழியது வுறங்கும்பாரு
செப்பவுமிரண்டாங்கால் மயிலுமூண்ணும்
சோரவுங்கோழியது வரசுசெய்யும்
கொடிகாகஞ்சா மாந்தைநடக்குமங்கே.

(இ-ள்.) கோழி நடையாகவும், காகம்தூக்கமாகவும், புதன்பகல் சாமம் ஐந்துக்கும் தொழின் முறையைச் சொல்ல புதன் முதலாங் காலில் காகம் ஊணாகவும், ஆந்தை அரசாகவும், வல்லூறுமாணமாக வும், மயில் நடையாகவும், கோழி தூக்கமாகவும் இரண்டாங்காலில் மயில் ஊணாகவும், கோழி அரசாகவும், காகம் மாணமாகவும் ஆந்தை நடையாகவும் பொருந்தும் எ-று. 45

அங்கேவல்லூறுறங்கு மூன்றாங்காலில்
அருளாந்தையமுதுண்ணும் வல்லூறுவேந்தாம்
இங்கேமயில்மடிந்துவிழும் கோழிசெல்லும்
எழிற்காகம்தூங்கிவிடும் நாளாங்காலில்
எங்கேயும்வாரண மூண்காகங்கோனும்
இதிலாந்தைசாமம்வல்லூறு வழிநடக்கும்
பொங்காகமயிலுறங்கு மைந்தாங்காலில்
புகல்வலியனுண்ணு மயில்வேந்தனாமே.

(இ-ள்.) வல்லூறு தூக்கமாகவும், மூன்றாங்காலில் ஆந்தையூணாக வும், வல்லூறு அரசாகவும், மயில் மரணமாகவும், கோழி நடையாக வும் காகம் தூக்கமாகவும், நாலாங்காலில் கோழி யூணாகவும், காகம் அரசாகவும், ஆந்தை மரணமாகவும், வல்லூறு நடையாகவும், காகம் தூக்கமாகவும், ஐந்தாங்காலில் வல்லூறு வூணாகவும், மயில் அரசாக வும் பொருந்தும் எ-று. 46

## வியாழம் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறை

வேந்தென்னகோழியது மரணமாகும்
 வெறுங்காகம்நடைநடக்கும் மாந்தைதூங்கும்
ஏந்தலேவியாழத்தி னொன்றாங்காலில்
 இதிலாந்தையூண் வல்லூறரசுசெய்யும்
நீந்தாதுமயில்மரிக்கும் கோழிசெல்லும்
 நேர்காகமுறங்கிவிடு மிரண்டாங்காலில்
நந்திடவேகோழியுண்ணும் காகம்வேந்தாம்
 எழிலாந்தைமரிக்கும்வலி யேகுந்தானே.

(இ-ள்.) கோழி மரணமாகவும், காகம் நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும், வியாழம் பகல் சாமம் ஐந்துக்கும் தொழின்முறை யைச் சொல்ல வியாழம் முதலாங்காலில் ஆந்தை யூணாகவும், வல்லூறு அரசாகவும், மயில் மரணமாகவும், கோழி நடையாகவும், காகம் தூக்கமாகவும், இரண்டாங்காலில் கோழி வூணாகவும், காகம் அர சாகவும், ஆந்தை மரணமாகவும் வல்லூறு நடையாகவும் பொருந் தும் எ-று. 47

ஏகவேமயிலுறங்கு மூன்றாங்காலில்
 இசைவல்லூறுண்ணு மயில்வேந்துமாகும்
சோகமாய்கோழிசாங் காகஞ்செல்லும்
 துடியாந்தைதுயில் நாலாங்காகமூண்
நாகமுனியாசுவலி மரணமஞ்ஞை
 நடைகோழிதுயி லைந்தாங்கால்மயிலுண்
பாகமாய்க்கோழியுங்கோன் காகஞ்சாகும்
 பகராந்தைநடைவலிய னுறங்குந்தானே.

(இ-ள்.) மயில் தூக்கமாகவும் மூன்றாங்காலில் வல்லூறு வூணாக வும் மயில் அரசாகவும், கோழி மரணமாகவும், காகம் நடையாகவும் ஆந்தை தூக்கமாகவும், நாலாங்காலில் காகம் யூணாகவும் ஆந்தை,

அரசாகவும், வல்லூறு மரணமாகவும், மயில் நடையாகவும், கோழி தூக்கமாகவும் ஐந்தாங்காலில் மயில் ஊணாகவும், கோழி அரசாகவும் காகம் மரணமாகவும் ஆந்தை நடையாகவும் வல்லூறு தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 48

## வெள்ளி பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறை

உறங்கவேவெள்ளிபக லொன்றாங்காலில்
உயர்வல்லூறூண் மயிலுமரசதாகும்
இறங்கவேகோழிசாங் காகமேகும்
ஏற்கெனவேயாந்தைதுயி லிரண்டாங்காலில்
மாங்கோழியூண்காக மரசதாகும்
வாழாந்தைமரிக்கும் வல்லூறுவழிநடக்கும்
கரங்குவித்துமயிலுறங்கு மூன்றாங்காலில்
காணவேபோகர்பட்சி கணிதம்பாரே.

(இ-ள்.) வெள்ளி பகல்சாமம் ஐந்துக்கும் தொழின் முறையைச் சொல்ல வெள்ளி முதலாங்காலில் வல்லூறு ஊணாகவும் மயில் அரசாகவும், கோழி மரணமாகவும் காகம் நடையாகவும் ஆந்தை தூக்கமாகவும், இரண்டாங்காலில் கோழி யூணாகவும், காகம் அரசாகவும் ஆந்தை மரணமாகவும் வல்லூறு நடையாகவும் மயில் தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 49

கணிதமாய்மூன்றாங்கால மயிலுமுண்ணும்
கனிவாகவாரணந்தா னரசுசெய்யும்
அணியாகவாந்தை நெடுந்தூரமேகும்
அனந்தல்கொளும் வல்லூறுவேந்தாம்
துணிவாகயாந்தையுண்ணும் வல்லூறுவேந்தாம்
சோதிக்கமயிலிறக்குங் கோசெல்லும்
பணிவாகக்காகமது வுறங்கும்பாரில்
பாங்காகவைந்தாங்கால் பகரக்கேளே.

(இ-ள்.) மூன்றாங்காலில் மயில் ஊணாகவும், கோழி அரசாகவும் ஆந்தை நடையாகவும், வல்லூர் தூக்கமாகவும், நாலாங்காலில் ஆந்தை யூணாகவும், வல்லூர் அரசாகவும் மயில் மரணமாகவும், கோழி நடையாகவும் காகம் தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 50

பகரவேகோழியது வுண்ணும்பாரு
பரிவாகக்கொடியாசா மாந்தையாளும்
நிகரமாய்வல்லூறுவதுவுஞ் சொல்லும்
நோகமயிலுறங்கும் நீதியாக
நகரமதிலமரபட்சம் பகலுக்கப்பா
நடித்தருளும் பஞ்சபட்சிநளினமாக
சிரகமதாற்போகர்சொன்ன சூக்ஷமங்கண்டு
தேர்ந்துசெய்யவல்லவரே சித்தராமே.

(இ-ள்.) ஐந்தாங்காலில் கோழி யூணாகவும் காகம் அரசாகவும் ஆந்தை மாணமாகவும், வல்லூறு நடையாகவும், மயில் தூக்கமாக வும், நீதியாக அமரபட்சம் பகலில் நடிக்கும் பஞ்சபட்சிகளை போகர் சொல்லிய சூக்ஷமங்கண்டு தேர்ந்து செய்யவல்லவரே சித்தராவர் எ-று. 51

## திங்கள் சனி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறை

சித்தனுபமரபக்ஷ மிரவிற்கேளு
செபலாகவிந்துசனி வாரந்தன்னில்
உத்தமரைபொன்றுங்கால் கோழியுண்ணும்
உலகாளும்மயிலரசாய் வலிமரிக்கும்
தொத்தியேயாந்தைசெல்லுங் காகம்ணீங்கும்
தோதாகவிரண்டாங்கால் மயிலுமுண்ணும்
எத்தலமுவலியரசா முனிமரிக்கும்
இதிற்காகஞ்செல்லும் வாரம்படுத்தே.

(இ-ள்.) இனி திங்கள் சனி இரவு சாமம் ஐந்துக்கும் தொழின் முறையைச்சொல்ல திங்கள் சனி முதலாங்காலில கோழி யூணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு மாணமாகவும், ஆந்தை நடையாகவும், காகம் தூக்கமாகவும் இரண்டாங்காலில் மயில் ஊணாகவும் வல்லூறு அரசாகவும், ஆந்தை மாணமாகவும், காகம் நடையாகவும் கோழி தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 52

படுத்துமேமூன்றுங்கால் வல்லூறுண்ணும்
பாராளுமாந்தையது காகஞ்சாகும்
அடுத்துமேவாரணமும் நடக்குமங்கே
ஆனந்தமாய்மயிலுறங்கும் நாலாங்காலில்

எடுத்துமேபாந்தையுண்ணுங் காகம்வேந்தாம்
எழிற்கோழிமரிக்குமயில் வழிநடக்கும்
கடுக்கவேவலியனது வுறங்கும்பாரு
காசினியிலேந்தாங்கால் கழறக்கேளே.

(இ-ள்.) மூன்றாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை அரசாகவும், காகம் மரணமாகவும், கோழி நடையாகவும், மயில் தூக்கமாகவும், நாலாங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் அரசாகவும், கோழி மரணமாகவும், மயில் நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 53

## ஞாயிறு செவ்வாய் இரவு சாமம் 5-க்கும்

### தொழின் முறை

கழறவேயைந்தாங்கால் காகமுண்ணும்
காணவேகோழியுங்கோன் மயிலுஞ்சாகும்
சழக்கறவேவலிநடக்கு மாந்தைதூங்கும்
சாற்றவுஞ்சேயருக்க ஞென்றாங்காலில்
வழக்கமாய்வலியுண்ணு மாந்தைவேந்தாம்
வாயசஞ்சாங்கோழிநடை மயிலுறங்கும்
உழைக்கவேயிரண்டாங்கா லாந்தையுண்ணும்
உலகாளுங்காகமது வுண்மைதானே.

(இ-ள்.) ஐந்தாங்காலில் காகம் ஊணாகவும், கோழி அரசாகவும், மயில் மரணமாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும், ஞாயிறு செவ்வாய் இரவுசாமம் ஐந்துக்கும் தொழில் முறையைச் சொல்ல ஞாயிறு செவ்வாய் முதலாங்காலில் வல்லூறு வூணாகவும், ஆந்தை அரசாகவும், கோழி நடையாகவும், மயில் தூக்கமாகவும், இரண்டாங்காலில் ஆந்தை வூணாகவும், காகம் அரசாகவும், பொருந்தும் எ-று. 54

உண்மையாய்க்கோழிசா மயில்நடக்கும்
உறங்குமதுவல்லூறு மூன்றாங்காலில்
தண்மையாய்க்காகமுண்ணுங் கோழிவேந்தாம்
தனிமயிலும்மரணமாய் வல்லூறுசெல்லும்

எண்மையாய்முனியுறங்கும் நாலாங் காலில்
எழிற்கோழியுண்ணுமயி லரசுசெய்யும்
வண்மையாய்வல்லூறுசா மாந்தைசெல்லும்
வண்காகமதுவுறங்கும் வெளியிற்றானே.

(இ-ள்.) கோழி மாணமாகவும், மயில் நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும், மூன்றாங்காலில் காகம் ஊணாகவும், கோழி அரசாகவும், மயில் மாணமாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும், நாலாங்காலில் கோழி ஊணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும், நாலாங்காலில் கோழி ஊணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு மாணமாகவும், ஆந்தை நடையாகவும் தூக்கமாகவும், பொருந்தும் எ-று. 55

வெளியிலேயைந்தாங்கால் மயிலுமுண்ணும்
வேந்தனும்வல்லூறு மாந்தைமாளும்
களியாதுகாகஞ்செல்லுங் கோழிதூங்கும்
சார்பாகப்புதனிரவி லொன்றாங்காலில்
வெளியிலேயாந்தையுண் காகம்வேந்தாம்
வரைகோழிமாணமஞ்ஞை வழிநடக்கும்
ஒளியாதுவல்லூறு தூங்கும்பாரு
உயர்வாகவிரண்டாங்கா லோதக்கேளே.

(இ-ள்.) ஐந்தாங்காலில் மயில் ஊணாகவும், வல்லூறு அரசாகவும், ஆந்தை மாணமாகவும், காகம் நடையாகவும், கோழி தூக்கமாகவும், புதன் இரவு சாமம் ஐந்துக்கும் தொழில் முறையைச் சொல்ல புதன் முதலாங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் அரசாகவும், கோழி மாணமாகவும், மயில் நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும் பொருந்தும் எ-று. 56

## புதன் இரவு சாமம் 5-க்கும்

### தொழின் முறை

ஓதவேகாகமுண்ணுங் கோழிவேந்தாம்
ஒடுங்கியேவல்லூறுசா மாந்தைசெல்லும்
போதவேமயில்தூங்கு மூன்றாங்காலில்
புகலவேகோழிதா னதுவுமுண்ணும்

தீதறவேமயிலரசாம் வலியன்மாளும்
திகழாந்தைவழிநடக்குங் காகந்தூங்கும்
ஆதரவாய்நாலாங்கால் மயில்தானுண்ணும்
அங்ஙனேவல்லூறு வரசென்பாயே.

(இ-ள்.) இரண்டாங்காலில் காகம் ஊணாகவும், கோழி அரசாக வும், வல்லூறு மரணமாகவும், ஆந்தை நடையாகவும், மயில் தூக்க மாகவும்; மூன்றாங்காலில் கோழி ஊணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு மரணமாகவும், ஆந்தை நடையாகவும், காகம் தூக்கமாக வும், நாலாங்காலில் மயில் ஊணாகவும், வல்லூறு அரசாகவும் பொருந் தும் எ-று. 57

பாயவேயாந்தையது மரணமாகும்
பண்பாகக்காகமது வழிநடக்கும்
ஓயவேகோழியது தூங்கும்பாரு
ஒத்துமையைந்தாங்கால் வல்லூறுண்ணும்
சாயவேயாந்தையது வுலகையாளும்
தங்கவேகாகமது மாண்டுபோகும்
மாயவேகோழியது வழிநடக்கும்
மயில்தூங்கும்போகர்சொன்ன வளமையீதே.

(இ-ள்.) ஆந்தை மரணமாகவும், காகம் நடையாகவும், கோழி தூக்கமாகவும், ஐந்தாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை அரசா கவும், காகம் மரணமாகவும், கோழி நடையாகவும், மயில் தூக்கமா கவும், போகர் சொல்லியபடி பொருந்தும் எ-று. 58

## வியாழம் இரவுசாமம் 5-க்கும்

### தொழின்முறை

வளமையாய்வியாழமிரா வொன்றாங்காலில்
வளர்காகமமுதுண்ணுங் கோழிவேந்தாம்
இளமையால்மயில்மரணம் வல்லூறுசெல்லும்
இயலாந்தையுறங்கிவிடு மிரண்டாங்காலில்
களஞ்சேய்க்குங்கோழியூண் மயிலும்வேந்தாம்
கடும்வல்லூறுமரணமா மாந்தைபோக்காம்
குளரியேகாகமது வுறங்குமங்கே
குறிமூன்றாங்கால்மயிலூண் கூடக்கேளே,

(இ-ள்.) வியாழம் இரவுசாமம் ஐந்துக்கும் தொழின் முறையைச் சொல்ல வியாழம் முதலாங்காலில் காகம் ஊணாகவும், கோழி அரசாகவும், மயில் மரணமாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும்; இரண்டாங்காலில் கோழி ஊணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு மரணமாகவும், ஆந்தை நடையாகவும், காகம் தூக்கமாகவும், பொருந்தும் எ-று. 59

கூடவேமயிலுண்ணும் வல்லூறுவேந்தாம்
  கோராந்தைசெத்துவிடுங் காகஞ்செல்லும்
சாடவேகோழிதுயில் நாலாங்காலில்
  சாதகமாய்வல்லூறு ணாந்தைவேந்தாம்
ஓடவேகாகமது மரிக்குமங்கே
  உயர்கோழிநடைமயில்தா னுறங்கும்பாரு
தேடவேபைந்தாங்கா லாந்தையுண்ணும்
  திரமாகக்காகமது செகமாளும்மே.

(இ-ள்.) மூன்றாங்காலில் மயில் ஊணாகவும், வல்லூறு அரசாகவும், ஆந்தை மரணமாகவும், காகம் நடையாகவும், கோழி தூக்கமாகவும், நாலாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை அரசாகவும்,காகம் மரணமாகவும், கோழி நடையாகவும், பொருந்தும், எ-று. 60

## வெள்ளி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறை

செகமதனிற்கோழியது மாண்டுபோகும்
  செப்பரியமயில்நடக்கும் வலியன் தூங்கும்
இகமதனில்வெள்ளியிர வொன்றாங்காலில்
  எப்போதுமயிலுண்ணும் வல்லூறுவேந்தாம்
அகமெலியவாந்தைசாங் காகமேகும்
  அருங்கோழியதுதுயிலு மிரண்டாங்காலில்
மகிழவேவல்லூறு மிரையுமுண்ணும்
  மண்ணாந்தை யரசுவயசயபிறப்பே.

(இ-ள்.) கோழி மரணமாகவும், மயில் நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும், வெள்ளி இரவுசாமம் ஐந்துக்கும் தொழின்முறையைச் சொல்ல வெள்ளி முதலாங்காலில் மயில் ஊணாகவும், வல்லூறு அர

சாகவும், ஆந்தை மரணமாகவும், காகம் நடையாகவும், கோழி தூக்கமாகவும், இரண்டாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை அரசாகவும், காகம் மரணமாகவும் பொருந்தும் எ-று. 61

மரிக்கவேகோழிசெலு மஞ்ஞைதூங்கும்
வாகாகவிரண்டாங்கால் வலியனுண்ணும்
தரிக்கவேமுனியரசு கொடியிறக்கும்
சார்பாகக்கோழியது நடைநடக்கும்
சரிக்கவேமயில்தூங்கு மூன்றுங்காலில்
தனியாந்தை யூண்காகம் மரசுசெய்யும்
பெருக்கவேகோழிசா மயில்நடக்கும்
பேசாதுவலியுறங்கும் பேதமென்னே.

(இ-ள்.) கோழி நடையாகவும், மயில் தூக்கமாகவும், இரண்டாங்காலில் வல்லூறு ஊணாகவும், ஆந்தை அரசாகவும், காகம் மரணமாகவும், கோழி நடையாகவும், மயில் தூக்கமாகவும், மூன்றுங்காலில் ஆந்தை ஊணாகவும், காகம் அரசாகவும், கோழி மரணமாகவும், மயில் நடையாகவும், வல்லூறு தூக்கமாகவும் எ-று. 62

பேதமாய்நாலாங்கால் காகமுண்ணும்
பெருங்கோழியரசாளு மயில்தான்சாகும்
நீதமாய்வலிநடக்கும் மாந்தைதூங்கும்
நீணிலத்திலைந்தாங்கால் கோழியுண்ணும்
போதமாய்மயிலரசாம் வலியன்சாகும்
யுலகாந்தைவழிநடக்கும் காகம்தூங்கும்
ஏதமாயமரபட்ச விரவெடுத்து
எவர்க்குமேபோகர்மொழிந் திட்டவாறே.

(இ-ள்.) நாலாங்காலில் காகம் ஊணாகவும், கோழி அரசாகவும், மயில் மரணமாகவும், வல்லூறு நடையாகவும், ஆந்தை தூக்கமாகவும், ஐந்தாங்காலில் கோழி ஊணாகவும், மயில் அரசாகவும், வல்லூறு மரணமாகவும், ஆந்தை நடையாகவும், காகம் தூக்கமாகவும், அமரபக்ஷம் இரவு சாமம் ஐந்துக்கும் போகர் எடுத்துரைத்தார் எ-று. 63

## திங்கள் சனி பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறை சக்கரம்.

| ஊண் | மரணம் | நித்திரை | அரசு | நடை | |
|---|---|---|---|---|---|
| 2 | $1\frac{3}{4}$ | $\frac{1}{2}$ | $\frac{3}{4}$ | $1\frac{1}{2}$ | |
| எ மயில் | ஒ காகம் | இ வல்லூர் | அ கோழி | உ ஆந்தை | 8·24. |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி | 10 48 |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | 1.12 |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் | 3 36 |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | 6. |

## திங்கள் சனி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நித்திரை | நடை | மரணம் | அரசு |
|---|---|---|---|---|
| $1\frac{3}{4}$ | $\frac{3}{4}$ | $1\frac{3}{4}$ | 1 | $1\frac{1}{2}$ |
| அ கோழி | ஒ காகம் | உ ஆந்தை | இ வல்லூர் | எ மயில் |
| மயில் | கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் |
| வல்லூர் | மயில் | கோழி | காகம் | ஆந்தை |
| ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி | காகம் |
| காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி |

## வெள்ளி பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | மரணம் | நித்ரை | அரசு | நடை |
|---|---|---|---|---|
| 2 | $1\frac{1}{4}$ | $\frac{1}{2}$ | $\frac{3}{4}$ | $1\frac{1}{2}$ |
| இ வல்லூர் | அ கோழி | உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |

## வெள்ளி இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நித்ரை | நடை | மரணம் | அரசு |
|---|---|---|---|---|
| $1\frac{3}{4}$ | $\frac{1}{2}$ | $1\frac{3}{4}$ | 1 | $\frac{3}{4}$ |
| உ ஆந்தை | எ மயில் | அ கோழி | ஒ காகம் | இ வல்லூர் |
| காகம் | வல்லூர் | மயில் | கோழி | ஆந்தை |
| கோழி | ஆந்தை | வல்லூர் | மயில் | காகம் |
| மயில் | காகம் | ஆந்தை | வல்லூர் | கோழி |
| வல்லூர் | கோழி | காகம் | ஆந்தை | மயில் |

## ஞாயிறு செவ்வாய் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | மரணம் | நித்ரை | அரசு | நடை |
|---|---|---|---|---|
| 2 | $1\frac{1}{4}$ | $\frac{1}{2}$ | $\frac{3}{4}$ | $1\frac{1}{2}$ |
| அ<br>கோழி | உ<br>ஆந்தை | ஒ<br>மயில் | எ<br>காகம் | இ<br>வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |

## ஞாயிறு செவ்வாய் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நித்ரை | நடை | மரணம் | அரசு |
|---|---|---|---|---|
| $1\frac{1}{2}$ | $\frac{1}{2}$ | $1\frac{1}{2}$ | 1 | $\frac{1}{2}$ |
| இ<br>வல்லூர் | எ<br>மயில் | அ<br>கோழி | ஒ<br>காகம் | உ<br>ஆந்தை |
| ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி | காகம் |
| காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி |
| கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் |
| மயில் | கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் |

## புதன் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறை சக்கரம்.

| ஊண் | மரணம் | நித்திரை | அரசு | நடை |
|---|---|---|---|---|
| 2 | 1¾ | ½ | ¾ | 1½ |
| ஒ காசம் | இ வல்லூர் | அ கோழி | உ ஆந்தை | எ மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |
| ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் | கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |

## புதன் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நித்திரை | நடை | மரணம் | அரசு |
|---|---|---|---|---|
| 1¾ | ¾ | 1¾ | 1 | ¾ |
| உ ஆந்தை | இ வல்லூர் | எ மயில் | அ கோழி | ஒ காகம் |
| காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி |
| கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் |
| மயில் | கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் |
| வல்லூர் | மயில் | கோழி | காகம் | ஆந்தை |

## வியாழம் பகல் சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | மரணம் | நித்திரை | அரசு | நடை |
|---|---|---|---|---|
| 2 | $1\frac{1}{4}$ | $\frac{1}{2}$ | $\frac{3}{4}$ | $1\frac{1}{2}$ |
| உ ஆந்தை | எ மயில் | ஒ காகம் | இ வல்லூர் | அ கோழி |
| கோழி | ஆந்தை | மயில் | காகம் | வல்லூர் |
| வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் | காகம் |
| காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை | மயில் |
| மயில் | காகம் | வல்லூர் | கோழி | ஆந்தை |

## வியாழம் இரவு சாமம் 5-க்கும்

### தொழின்முறைச் சக்கரம்

| ஊண் | நித்திரை | நடை | மரணம் | அரசு |
|---|---|---|---|---|
| $1\frac{3}{4}$ | $\frac{3}{4}$ | $1\frac{3}{4}$ | 1 | $\frac{1}{2}$ |
| ஒ காகம் | உ ஆந்தை | இ வல்லூர் | எ மயில் | அ கோழி |
| கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் | மயில் |
| மயில் | கோழி | காகம் | ஆந்தை | வல்லூர் |
| வல்லூர் | மயில் | கோழி | காகம் | ஆந்தை |
| ஆந்தை | வல்லூர் | மயில் | கோழி | காகம் |

# பூர்வபட்ச வாரங்கள் 7-க்கும்

## படுபட்சிகள்

மொழியவேபடுபட்சி நடையைக்கேளு
வுற்றகுருசனிவாரம் வல்லூறாகும்
செழிக்கவேஞாயிறுவெள்ளி யார்ந்தையாகும்
செப்பவுந்திங்களுக்குக் காகமாகும்
பழிக்கவேசெவ்வாய்க்குக் கோழியாகும்
பாங்காகபுதனுக்கு மயிலதாகும்
கழிக்கவேயிந்நடைகள் பொய்யாதென்று
கழறினரோமருக்குப் போகர்தானே.

(இ-ள்.) பூர்வபட்ச வாரங்கள் ஏழுக்கும் படுபட்சிகளைச்சொல்ல அப்படுபட்சிகள் வியாழம் சனிக்கு வல்லூறாகவும், ஞாயிறு வெள்ளிக்கு ஆந்தைமரணமாகவும், திங்களுக்கு காகமாகவும், செவ்வாய்க்கு கோழியாகவும், புதனுக்கு மயிலாகவும், சஞ்சரிக்கும் இந்நடைகள் பொய்க்காதென்று உரோமருக்குபோகர் உரைத்ததென்பதாம் எ-று.

## நட்சத்திர பட்சிகள்

போகரசுவனியுமுத லைந்தும்வல்லூறு
புகழுமாதிரையு முதலாறுமாந்தை
பாகமுத்திரமுமுத லைந்துங்காகம்
பரிவாகவனுஷமுத லைந்துங்கோழி
சோகமாயோணமுத லாறுமஞ்ஞை
சுகமாயப்பூருவத்தின் பட்சிக்கப்பா
ஆகமாய்நிலையுணர்ந்து மாறிநீயும்
அந்தந்தத்தொழில்புரியு மறிந்துதானே.

(இ-ள்.) நட்சத்திரப்பட்சிகளைச் சொல்ல அசுவணி பரணி கிருத்திகை ரோகணி மிருகசீரிடம் ஐந்துக்கும் வல்லூறாகவும், திருவாதிரை புனர்ப்பூசம் பூசம் ஆயிலியம் மகம் பூரம் ஆறுக்கும் ஆந்தையாகவும், உத்திரம் அத்தம் சித்திரை சுவாதி விசாகம் ஐந்துக்கும் காகமாகவும், அனுஷம் கேட்டை மூலம் பூராடம் உத்திராடம் ஐந்துக்கும் கோழியாகவும், திருவோணம் அவிட்டம் சதயம் பூரட்டாதி உத்திரட்டாதி ரேவதி ஆறுக்கும் மயிலாகவும், அப் பூர்வபட்சத்து பட்சிகளின் நிலை யுணர்ந்து மாறி நீயும் அந்தந்தத் தொழில்களை அறிந்து சொல்வாய், எ-று.

## திதி பட்சிகள்

அரியபிரதமைசஷ்டி யேகாதசிக்கு
  ஆகுமேவல்லூறு துதிக்கைசப்தமியோ
டுரியதுந்துவாதசிக்கே யாந்தையாகும்
  உற்றதிரிதிகையஷ்டமி திரயோதசிக்கு
சரியாகுக்காகமது சதுர்த்தியுடனவமி
  சதுர்த்தசிக்குக்கோழி பஞ்சமியுந்தசமி
பெரியதாகப்பூரணைக்கு மயிலதாகும்
  போனபூருவத்தி னிலையிதாமே.

(இ-ள்.) திதிபட்சிகளைச் சொல்ல பிரதமை சஷ்டி ஏகாதசிக்கு வல்லூறாகவும், துவிதிகை சப்தமி துவாதசிக்கு ஆந்தையாகவும், திரிதிகை அஷ்டமி திரயோதசிக்கு காகமாகவும், சதுர்த்தி நவமி சதுர்த்தசிக்கு கோழியாகவும், பஞ்சமி பூரணைக்கு மயிலாகவும், பூர்வ பட்சத்தினிலை இவ்வாறென்பதாம் எ-று. 66

## இராசிப் பட்சிகள்

நிலையாகுமேஷம் விருச்சிகமுஞ்சிங்கம்
  நேர்வல்லூறுயாழ்கடகங் கன்னியாந்தை
கலையாகுந்தனுசதுவு மீனங்காகம்
  காணவேதுலைரிஷபங் கோழியாகும்
வலையறுக்குமகரகும்ப மயிலதாகும்
  வகையாகப்பட்சிநிலை மாறிக்கொண்டு
அலையாதுசெய்தொழிலை முடிப்பையாகில்
  அலட்சியமாய்நிறைவேற்று மாணியாமே.

(இ-ள்.) இராசிபட்சிகளைச் சொல்ல மேஷம் விருச்சிகம் சிங்கம் வல்லூறாகவும், மிதுனம் கடகம் கன்னி ஆந்தையாகவும், தனுசு மீனம் காகமாகவும், துலாம் ரிஷபம் கோழியாகவும், மகரம் கும்பம் மயிலாகவும், இராசிப்பட்சிகளின் நிலையறிந்து மாறிக்கொண்டு தொழில்செய்து மிகு சுலபமாய் ஆணிப்பாக நிறைவேற்றும் எ-று.

## ஆரூடச்சொல்லின் பகுத்தறிவு

ஆணியாய்நாள்பார்த்து ராசிபார்த்து
  ஆனவுடநற்றீமை வேளைபார்த்து
நண்டிடாப்பட்சிகளின் வலிவுபார்த்து
  நற்கோள்கள்குணக்குறிக ளன்றுய்ப்பார்த்து

பேணியேவினவிநின்றோன் பலமும்பார்த்து
பெயர்பார்த்துகொள்கைநிலை பேதம்பார்த்து
ஊணியேசொல்லெழுத் துதிக்கபார்த்து
உள்ளபடிசோதி டாரூடஞ்சொல்வாய்

(இ-ள்.) ஆரூடச்சொல்லின் பகுத்தறிவாவது நல்லநாள்பார்த்து ராசிபார்த்து நட்சத்திரங்கள் பார்த்து நன்மைதுன்மை பார்த்து வேளை பார்த்து பட்சிகளின் வலிவுபார்த்து கிரகங்களைப்பார்த்து குணக்குறிகள்யாவும் கண்டறிந்து ஆரூடங்கேட்பவன் நிற்கும்புலன் பெயர் கொள்கை நெறிபேதம் வாக்கியாட்சரம் தலையெழுத்து திக்கு முதலியதை நன்றாயாராய்ந் துணர்ந்து சோதிட வாரூடஞ் சொல்லு வாய் எ-று. 68

வாயெடுத்துச்சொல்பவர் வாக்கியமுங்கேட்டு
வாகாகச்சத்துரு மித்துருவும்பார்த்து
ஆயவேபட்சிகளின் சூட்சங்கண்டு
அங்கொன்றுக்தவறாது சாமம்பார்த்து
பாயவேபோகர்சொன்னப் படியுணர்ந்து
பாங்காகவைங்கரன் வாலையைப்பூசித்து
சாயவேகிரியைதனை முடிக்கநன்று
தப்பிஞற்பொய்த்துவிடுஞ் சண்டாளர்க்கே.

(இ-ள்.) எதிரியானவன் வாயெடுத்துச்சொல் வாக்கியத்தைக் கேட்டு அதற்குறிப பட்சி சத்துருமித்துருவை பார்த்து அப்பட்சி களின் சூட்சங்கண்டு ஒன்றும்பிசகாது சாமம்பார்த்து போகர்சொல் லியவாறு ஆராய்ந்து ஐங்கரன் வாலையைப் பூசைசெய்து தொழுது எந்த காரியமுஞ்செய்ய நன்று அதிற்றப்பிடிற் பிசகும் எ-று. 69

சண்டாளர்சத்துருநாள் கெடுதிமெத்த
தான்புசிக்கவிடமில்லா தலையச்செய்யும்
அண்டாதுபோமரசு பகையுமாகில்
அருஞ்சத்துருவாயிருந்து கொலைசெய்விக்கும்
கண்டாலுமொருவேளை யிடரிற்றாக்கும்
கலகமாய்மித்துரு சத்துருவதாகும்
விண்டாலும்நொந்தமனம் வேக்காடாதி
வேதனைகள்பட்டுழல்லா வீணுப்த்தானே.

(இ-ள்.) சண்டாளமாகிய சத்துருநாளானது மெத்தவுங் கெடுதி யாதலால் அது புசிப்புக்கிடமின்றி அலையச்செய்யும் அரசு பகையா

இல் அது சத்துருவாயிருந்து கொலைசெய்விக்கும் அல்லதுஒருவேளை யிடர் செய்விக்கும் மித்துருவே சத்துருவாய் கலகஞ் செய்வதுமன்றி மனம்நொந்து வேக்காடாகி வீணாக வேதனைகள் பட்டுழல்வர் எ-று.

## வல்லூரின் சத்துருமித்துரு

வீணாகப்பூர்வபட்சி பகையைச்சொல்ல
வெம்பிடவும்வல்லூறுக்கு காகங்கோழி
தோணுதுமித்துருவு மயிலுமாந்தை
சூட்டுங்காரியத்தில் மித்துருவைச்சேர்த்து
நாணுதுசத்துருவைச் சேர்த்துசெய்தால்
நாயகனேபகைவனுட லழிந்துபோகும்
கோணுதுமித்துருசத் துருவைக்கண்டு
கொள்ளவேவகையறிந்து கிரியைச்செய்யே.

(இ-ள்.) பூர்வபட்சம் பட்சிபகையைச்சொல்ல வல்லூறுக்கு சத்துருவு காகம் கோழியாகவும், அதற்கு மித்துருமயிலும் ஆந்தையாகவும், செய்தொழிலில் மித்துருவைச் சேர்க்கக் கெடுதியில்லை சத்துருவைச் சேர்க்கப் பகைவனுடல் அழிந்துவிடும் ஆகலால் மித்துரு சத்துருவைக் கண்டறிந்து எத்தொழிலுஞ்செய்ய நன்மையாம் எ-று.

## ஆந்தையின் சத்துருமித்துரு

கிரியைதானுந்தைசத் துருவைச்சொல்ல
கேளுமயில்கோழியைக் கூறலாகும்
பரிவாகமித்துருவும் வல்லூறுகாகம்
பாங்காகமித்துருவைச் சேர்க்குங்காலை
பிரியாதுசெய்தொழில்கள் பலிதமாகும்
பிணைபடவேசத்துருவைச் சேர்க்குங்காலை
தரியாதுகொல்லுவிக்கும் கிரியையாகும்
சாற்றவுமஷ்டகர்மம் பலிக்கும்பாரே.

(இ-ள்.) ஆந்தையின் சத்துரு மித்துருவைச்சொல்ல ஆந்தைக்குச் சத்துரு மயில் கோழியாகவும், அதற்கு மித்துரு வல்லூறு காகமாகவும், மித்துருவைச்சேர்க்க செய்தொழில் பலிதமாகும் சத்துருவைச்சேர்க்க எதிரியைக் கொல்விக்குங் கிரியையாகும் இதனால் அஷ்டகர்மங்கள் பலிதமாகும் எ-று.

## காகத்தின் சத்துருமித்துரு

பலிக்கவேகாகசத் துருவைச்சொல்லப்
பற்றவும்வல்லூறு மயிலுமாகும்
கெலிக்கவேமித்துருவைக் கேளுமைந்தா
கெம்பீரமாயாந்தை கோழியாகும்
ஒலிக்கவேசத்துருவைச் சேர்க்கும்போது
ஓங்கிவிடுஞ்சண்டைசில கெடுதிமிஞ்சும்
சலிக்கவேமற்றொருவர் திருப்பொணாது
தாக்கவுஞ்சத்துருவு தானாகாதே.

(இ-ள்.) காகத்தின் சத்துரு மித்துருவைச் சொல்ல, காகத்துக்கு வல்லூறு மயிலாசவும், மித்துரு ஆந்தை கோழியாகவும், மித்துருவைச் சேர்க்க செய்தொழில்கள் பலிதமாகும் சத்துருவைச் சேர்க்க சண்டை சில கெடுதிகள் அதிகரிக்கும் இதை மற்றொருவராற் றிருப்பவொண்ணாது சத்துருவென்பது கிஞ்சிற்றேனுமாகாது எ-று.

## கோழியின் சத்துருமித்துரு

தானுகக்கோழிசத் துருவைச்சொல்ல
சந்ததமும்வல்லூறு மாந்தையாகும்
கோனுகமித்துருவைக் காறுங்காலில்
குணமுள்ளகாகமுடன் மயிலுமாகும்
பானுகமித்துருவைக் கூட்டியங்கு
பாங்காகவவன் றங்கி வாழ்ந்திருப்பன்
ஆனாலுஞ்சத்துருவை கூட்டியங்கு
ஆகாதகிரியைகளனைத்துஞ்செய்யே.

(இ-ள்.) கோழியின் சத்துருமித்துருவைச் சொல்ல கோழிக்கு சத்துருவு வல்லூறு ஆந்தையாகவும், மித்துருவு காகம் மயிலாகவும், மித்துருவை கூட்டிசெய்ய தனது சொந்த தலத்தில் தாங்கி வாழ்ந்திருப்பன் சத்துருவைக் கூட்டிச் செய்ய ஆகாத கிரியைகளனைத்தும் செய்யத் தடையின்றி யாவும் பலிதமாகும் எ-று. 74

## மயிலின் சத்துருமித்துரு

அனைத்துமேமயிலின்சத் துருவைச்சொல்ல
அமையவேயாந்தையுடன் காகமாகும்
நினைத்திடவுமித்துருவைக் கொள்ளுங்காலே
நேரகவல்லூறு கோழியாகும்



கனைத்திடவுங்கூறவில்லை மித்துருவுநன்மை
காணவேபகையொடு சத்துருவுங்கேடாம்
சனித்திடுநற்பட்சிதொழி லறிந்துநீயும்
தாக்கவுஞ்செய்தொழிலைச் சமர்த்தனுமே.

(இ-ள்.) மயிலின் சத்துருமித்துருவைச் சொல்ல, மயிலின் சத்துரு ஆந்தை காகமாகவும், மித்துரு வல்லூறு கோழியாகவும், மித்துருவிற் செய்கருமங்களியாவும் நன்மை சத்துருவிற் செய்கருமங்களியாவும் தீதாக நடக்கும் ஆதலால் அப் பட்சிகளின் தொழிலறிந்து எத்தொழிலையுஞ் செய்யவல்லவன் வெகு சமர்த்தனவன் எ-று. 75

## மித்துருவின் பலன்

சமர்த்தாகமித்துருவைக் கூட்டிநாளும்
தான்செய்வாய்நலமான காரியங்கள்
அமைத்திடுமேகூடிவரு மிதனைப்பா
ஆண்மையாய்ப்புத்தியுமாய் வசியமாகும்
இமைக்குளேசெய்தொழில்கள் நன்மையாகும்
எக்காலும்பலிதமா மின்பமாக
உமைத்தடுக்கயாவருக்கும் பொல்லாங்காக
உறுத்துமடாசெய்தொழில்க ளுணருவாயே.

(இ-ள்.) பட்சிகளின் மித்துருவின் பலனைச் சொல்ல அந்த மித்துருவைச் சேர்ந்து யாதொரு விஷயமுஞ்செய்ய நலமான காரியங்களெல்லாங் கைகூடி வரும் நீ ஆண்மையாய்ச் செய்ய நற்புத்தியும் வசியமுமாகும் சடுதியில் செய்தொழில்கள் பலிதமாகும் உம்மைத்தடுக்க யாவருக்கும் பொல்லாங்காகவே முடியும் ஆதலால் செய்தொழிலைப் புத்திபூர்வமாய்ச் செய்ய உணருவாயாக எ-று. 86

உணரவேமித்துருவு முறவுமாகும்
ஒலமிடுங்கூச்சலில்லை யேச்சமில்லை
புணரவேசம்பத்தாய்ப் பொருள்கைகூடும்
போர்செய்யவெல்வதில்லைப் பொல்லாங்கில்லை
சணமறவேசெய்வதெல்லாந் தடையொன்றில்லை
சந்ததமுநல்லுறவாய் வாழ்ந்திருப்பர்
குணமுறவேசுபகரமாய் மகிழ்ச்சிசெய்துங்
கோனுகவீற்றிருந்து குடையாள்வானே.

(இ-ள்.) பட்சிகளின் மித்துருவைச் சேர்த்துச்செய்ய பகைவ ருறவாவர். ஓலமிடுவதும் கூச்சலும் ஏக்கமில்லாது வெகு சம்பத் தான வாழ்வும் பொருள் கைகூடும் நீ போர்புரிய உன்னை வெல்வா ரில்லை அதினால் ஒரு பொல்லாங்குமில்லை. செய்தொழிலில் யாதொரு தடையுமில்லை. எக்காலும் இன்பசுகமாய் வாழ்வர். யாவும் சுபகர மாய் மகிழ்ச்சியுடன் கோனாய் வீற்றிருந்து குடையாள்வன் எ-று. 78

கொடையாள்வன் மித்துருவுமரசதாகில்
கூறவுமெள்ளளவுந் தாழ்ச்சியில்லை
இடையிலேபலருதவி பிரபுசன்மானம்
ஈந்திடவுமெடுத்த காரியஞ்செயிக்கும்
தடையில்லையவ்வேளை யாதுசெய்தும்
சங்கடமுமழிவில்லை யனுகூலம்பார்
கடையிலேயெக்காலும் நன்மையுண்டாய்
கதிக்கவேமனம்போலக் கனமுமாமே.

(இ-ள்.) பட்சிகளின் மித்துருவின் அரசைச்சொல்ல எள்ளள வுந் தாழ்வின்றி பலருதவியினாற் பிறகு சன்மானம் பெற்று எடுத்த காரியங்களைச் செயிக்கும் வல்லவனாய் தடையின்றி அவ்வேளை யாது செய்தபோதிலும் சங்கடமும் அழிவில்லாததுமாய் அனுகூலப்பட்டு எக்காலும் நன்மையுடன் செழித்து மனம்போலக் கனமடைவர் எ-று.

கனமாகமித்துருவைச் சேர்த்துநீயும்
காரியத்தைப் பலவாறுசெய்யலாகும்
தனமாகப்போனபொருள் கைவந்தேறும்
சண்டாளருறவாடித் தானேசேர்வர்
இனமானநோய்தீரு மிடர்கள்நீங்கும்
இதிற்கெடுதியொன் றுமில்லை யின்பமெய்தும்
மனமாகத்தொடுத்த காரியங்கள்நன்மை
வஞ்சகருமுறவாவர் பகையாகாதே.

(இ-ள்.) பட்சிகளின் மித்துருவைச் சேர்த்து நீ பலவாறு காரி யங்களைச் செய்ய அவைகள் நிறைவேறும். போனபொருள் கையில் வந்து சேரும். பகைவ ருறவாடி தானே சேர்வர், நோய்தீரும், இடர் கள் நீங்கும், கெடுதி யொன்றுமில்லை. இன்பமாகும். தொடுத்த காரி யங்கள் முடியும் வஞ்சகர் உறவாவர் பகையாகாது எ-று. 80

ஆகாதவுறவாகும் பலனுண்டாகும்
அணிவருமேகைதொழுது வடிமையாவர்
போனதுவிரைவீச்சு விதைக்கலாகும்
பொருத்தமாமெத்தொழிலும் புனிதமாகும்
கோகாதுவழக்குவெல்லச் செயிக்கலாகும்
நட்பமாய்மனதுகந்த பொருள்கைகூடும்
வாகாகமித்துருவை யடைந்தகாலம்
வாதில்லைமனத்துயா மகலுந்தானே.

(இ-ள்.) ஆகாத பகைவர் உறவாகி அவரால் பலனுண்டாகும் மற்றவ ரிபாவரும் கைதொழுது அடிமையாவது மன்றி விரைவீச்சு முதலியவை விதைக்கவும் எத்தொழிலைச் செய்யினும் பலிதமாகும் வழக்கு வெல்லச் செயிக்கும் மனதுக்கிசைந்த பொருள் வந்து சேரும் அம்மித்துருவை யடைந்தகாலத்தில் வாதில்லாது மனத்துயரம் நீங்கும் எ-று. 81

சத்துரு பலாபலன்

அகலாதுசத்துருவை யழைத்தாயானல்
அலைச்சலிடர்மனதிற்கு துக்கமெய்தும்
புகலாதுபலகாலுந் துயரமாகும்
பொருந்தச்செய்காரியங்கள் பகையதாகும்
தகலாதுநினைத்ததெல்லாஞ் சத்துருவாகும்
சமர்த்தாகமுடிக்குந்தொழில் தடையுமாகும்
இபலாதுவிடைஞ்சல்பல வேற்கும்பாரு
இடம்விட்டுப்பரதேச மேகுவாரே.

(இ-ள்.) சத்துருவைச் சேர்ப்பையாகில் அலைச்சல் இடர் மனதிற்குத் துக்கம் நேர்வதோடு பலகாலும் துயரமாயும் தான் செய்யும் காரியங்கள் பகையதாயும் நினைத்ததெல்லாம் சத்துருவமாயும் சமர்த்தாக முடிக்குந் தொழில் தடையாயும் இடைஞ்சல் பல வுண்டாவது மன்றி தன்னை இடம்விட்டுப் பரதேசம் போகச்செய்யும் எ-று. 82

ஏகலுணாசு சத்துருவாய்நிற்கில்
இடைஞ்சலாய்க் கூடிவரமாட்டாதங்கே
சோகமாய்நோயுறவும் பகையுமெய்தும்
தொடுத்துநீசெய்வது சத்துருவாய்மேவும்
பாகமாய்மனதிற்குப் பயமுண்டாகும்
பலிதமில்லைகாரிய சந்தோஷமில்லை
ஆகவுமஷ்டகரும மமைத்ததியாவும்
அன்றுகுஞ்சத்துருவை யணுகிடாயே.

(இ-ள்.) அப்பட்சியானது அரசு சத்துருவாய் நிற்கில் யாதொன்றும் இடைஞ்சலாய்க் கூடிவாராமலும் சோகம் நோய் உறவினர் பகை நேர்வதோடு நீ செய்யுந்தொழில் சத்துருவாய் நின்று மனதிற்குப் பயமுண்டாகியும் யாவும் பலிதமில்லாமலும் காரிய சந்தோஷமின்றி அஷ்ட கர்ம மியாவும் நிறைவேற்றுவதால் சத்துருவை யணுகி முடித்தல் வேண்டும் எ-று. 83

## வாரங்கள் 7-க்கும் மரண பட்சி

அணுகவேசனிவியாழங் கோழிசாகும்
அதற்கப்பால்வெள்ளிபுதன் மயிலுஞ்சாகும்
பணியவேஞாயிறுக்கும் காகஞ்சாகும்
பாங்காகத்திங்களுக்கு வாந்தைசாகும்
துணிகரமாய்ச்செவ்வாய்க்கு வல்லூறுசாகும்
சூட்டவும்பொல்லாத நாள்தானப்பா
அணியாகப்போகர்சொன்ன வாக்கைக்கொண்டு
அங்ஙனேவந்துபோம் வலிவுதானே.

(இ-ள்.) வாரங்கள் ஏழுக்கும் மரண பட்சியைச் சொல்ல சனி வியாழத்தில் கோழியாகவும், வெள்ளி புதனில் மயிலாகவும், ஞாயிறில் காகமாகவும், திங்களில் ஆந்தையாகவும், செவ்வாயில் வல்லூருகவும், பட்சிகள் சாகும் இவைகள் பொல்லாத நாள்களென்று போகர் சொல்லும் வாக்கின்படி அத்தினவலிவுகள் அத்துப்போகும் எ-று.

## படுபட்சியின் பலாபலன்

வலுவாகுமூணதனிற் பயனொன்றில்லை
வண்மையாய்மித்துருக்க ளுறவுமில்லை
சிலுகாகச்சத்துருவா யிருந்துசொல்லும்
சேகரமாங்காரியங்கள் தீதேயாகும்
கொலுவாகவருத்துகளுஞ் சேதமாகும்
குண்ணவேயோரிடமுங் தங்கவொட்டா
நலியாகத்தேகமதை நாட்டிக்கொல்லும்
நன்றுகாதிந்தவகை நம்பத்தானே.

(இ-ள்.) படுபட்சிகளின் ஊண்பட்சி என்ன வலிவாகிலும் பயனில்லை அதினால் மித்துருக்களுறவுமில்லை அது சிலுகுள்ளதாய் சத்துருவாயிருந்து கொல்லும் தான் சேகரிக்கும் விஷயங்களைத் தீதாக்கி வருத்துகளையுஞ் சேதமாக்குவிக்கும் ஓரிடமுந் தங்கவொட்டாது நலியாகத் தேகத்தை நசியச்செய்யும் நன்றல்லவென நம்புவாய் எ-று.

கம்பவும்நடையதனில் வலிவுமில்லை
நாடுவிட்டுப்பரதேசம் நாட்டிவைக்கும்
அம்பலமாந்தடையென்று மவர்கள்சொல்வர்
ஆகாதுசண்டாள வேளையாகும்
சம்பிரமாய்ப்படையெடுக்க வெல்லொணாது
தான்பூண்டப்பணிகொள்ளச் சாகும்கஷ்டம்
வம்புமிகவுடையவனாய் மதர்த்தானுந்தான்
வரும்கஷ்டம்பலகஷ்டம் வாய்க்கும்பாரே.

(இ-ள்.) நடைபட்சியானது வலிவில்லாததால் அது நாட்டைவிட்டுப் பரதேசம் போக்குவிக்கும் யாவும் அம்பலமென்றும் நடையென்றும் சொல்வர். இது சண்டாளவேளை எதற்கும் ஆகாது தான் படையெடுக்க வெல்லமுடியாததாம் தான் பண்டம் பாரிதிகொள்ள கஷ்டம் அடையும் என்னதான் வம்புடையனாயும் மதர்த்தனாயுமிருந்த போதிலும் கஷ்டம் பலகஷ்டம் வாய்க்கும் எ-று. 86

வாய்க்கவேயரசதுவும் வலிவுமில்லை
வாகாகமற்றதுகள் வலிவாமோபார்
ஏய்க்கவேயரவின்வாய்த் தேரையாகும்
இதிற்கெடுதிதேகம்நொந்து யேங்கச்செய்யும்
தீய்க்கவேமரணமதில் செல்லுவிக்கும்
தீராதுதேங்கிடுவர் செழிக்கமாட்டார்
சாய்க்கவேகெண்டமது நீங்கிற்றானல்
சண்டாளனீடேறுன் சாற்றக்கேளே.

(இ-ள்.) அரசு பட்சி வலியின்மையால் மற்றப் பட்சிகள் வலிவு தாழ்ந்ததாகையால் அது பாம்பின்வாய்த் தேரையாக்குமாப்போல் கெடுதியாய் தேகம் நொந்து ஏங்கச்செய்வதுமன்றி மரணத்திற் கேதுவாய்ச் செல்லவைக்கும் அம்மரணமாறாது தேங்கியுஞ் செழிக்கமாட்டார் ஆதலால் ஒருவேளை யக்கெண்டம் நீங்குமாகில் அவன் மறுபடியும் ஈடேறுன் எ-று. 87

தாக்கவுந்துக்கஞ்சங்கடஞ் செய்விக்கும்
தப்பாதுமித்துரு சத்துருவுமாவன்
ஏற்றவுஞ்சத்துருவை யெதிர்த்துநிற்பன்
இடிவிழுந்தமரமதுபோ லிடறிவீழ்வன்
ஆற்றவுஞ்சனிபிடித்த வலைச்சல்செய்யும்
அவனிலையும்நெறியுணர்ந்து வனைத்தும்பார்த்து
போற்றவுமுதணர்ந்தோர் வருந்தாமற்றுன்
புரட்டியேமரணமதிற் போக்குந்தானே.

(இ-ள்.) துக்கப்பட்சி வலிவு கொஞ்சமாதலால் மித்துருவுஞ் சத்துருவாகி சங்கடஞ்செய்வதன்றி சத்துருவை யெதிர்த்து நிற்பன் அக்காலையில் இடிவிழுந்த மரம்போல இடறிவீழ்வதுமன்றி சனிபிடித்த வலைச்சலுஞ் செய்விக்கும் அதில் அவனிலையும் நெறியுமாராய்ந்து பெரியோர்களுரைத்தபடி நீங்காகிய மாணத்தில் செல்விக்கும் எ-று.

போக்குமேமாணத்திற் கொல்லுவிக்கும்
புரட்டியேகொடுமைமிகப் புகவேசெய்யும்
நீக்குமேநிலையற்று நெறியுமற்று
நீளுடலுமற்றவுயிர் நினைவுமற்று
தேக்குமேசெயலற்று சிறப்புமற்று
சேகரமாய்பொருளற்று பூமியற்று
வாக்குமேபோகாது பட்சிமார்க்கம்
வையகத்திற்செய்யவது வண்மையாமே.

(இ-ள்.) மாணபட்சியாவது யாதுக்கு முதவாதது கொல்லுவிக்குமாதலால் அவனைப் புரட்டிக் கொடுமையை யதிகரிக்கச்செய்யும் அன்றியும் அவன் நிலையற்று நெறியற்று உடலற்று உயிரற்று நினைவற்று செயலற்று சிறப்பற்று பொருளற்று பூமியற்றுப்போகவும், போகர் சொல்லிய பட்சிமார்க்கமாய் இவ்வுலகின்கண் செய்யதப்பாது நடக்கும் எ-று. 89

## கடைநிலைப்பட்சிகள்

வளமாகப்பூறுவத்தில் மாணமுண்ணும்
வாகாகவிரவினிலே தூக்கமுண்ணும்
கனமாகவமரத்தி லாந்தையுண்ணும்
காணவேபின்னிரவி லரசுமுண்ணும்
தளமாகவட்சரத்தைச் சார்ந்துபார்ப்போர்
தன்னியராமற்றவர்க ளறிவாரோதான்
சனையாதுபொய்சொல்வார் பெரியோர்காண
சாதிப்பரெனபோகர் சாற்றினாரே.

(இ-ள்.) கடைநிலைப் பட்சிகளைச்சொல்ல, பூருவபட்சத்தில் பகலில் மாணமுண்ணுவதாகவும், இரவினிலே தூக்கமுண்ணுவதாகவும், அமரபட்சத்தின் பகலில் ஆந்தையுண்ணுவதாகவும், இரவினிலே அரசுவுண்ணுவதாகவும், அந்தந்த பட்சிகளின் 'அட்சரத்தை ஆராய்ந்து பார்ப்போர் தன்னியராவர், மற்றவர்க ளறியமாட்டார்கள் அவர்கள் பெரியோர்கள் முன்னிலையில் கூசாது பொய்சொல்லி சாதிப்பரென போகருரைத்த தென்பதாம் எ-று. 90

## பூர்வபட்சம் பகலிரவு பட்சிகள்

### தொழின் முறைக்காலவளவு

சாற்றவும்பூருவத்தின் றொழிலினாழி
 தற்பகலுணொன் றரையாம் நடையொன்றேகால்
போற்றவுமரசிரண்டு தூக்கமுக்கால்
 புகல்மரணமரையாகு மிரவிலூணும்
தேற்றவுமொன்றேகா லரசுமொன்று
 செல்மரணமொன்றையே நடையொன்றேகால்
ஏற்றவுந்தூக்கமொன் றிவ்வாறுநாழி
 இயம்பினர்போகரவ ரிசையத்தானே.

(இ-ள்.) பூர்வபட்சம் பகலிரவுபட்சிகளின் தொழின்முறைக்கால அளவைச்சொல்ல பூர்வபட்சத்தின் றொழில்நாழிகையானது பகலில் ஊணுக்கு ஒன்றரையாகவும், நடைக்கு ஒன்றேகாலாகவும், அரசுக்கு இரண்டாகவும், தூக்கத்துக்கு முக்காலாகவும், மரணத்துக்கு அரையாகவும், கொள்வதன்றி இரவினிலே ஊணுக்கு ஒன்றேகாலாகவும், அரசுக்கு ஒன்றாகவும், மரணத்துக்கு ஒண்ணரையாகவும், நடைக்கு ஒன்றேகாலாகவும், தூக்கத்துக்கு ஒன்றாகவும் இவ்வாறு நாழிகைகளைப் பிரித்து போகர் சொல்லியதென்பதாம் என்று. 91

## அமரபட்சம் பகலிரவு பட்சிகளின்

### தொழின்முறை காலவளவு

இசையவேயமரபட்சம் பகலினாழி
 இதினூணுமிரண்டுமடி வதுமொன்றேகால்
அசையவேதூக்கமரை யரசுமுக்கால்
 அதில்நடையுமொன் றரையா மிரவிற்கூற
வசையுமாயூணொன்றே முக்கால்தூக்க
 மதுமுக்கால்நடையொன்றே முக்காலாகும்
திசையிலேமரணமொன் று வரசுமுக்கால்
 செப்பவுந்தொழின்முறையின் சேதிதானே.

(இ-ள்.) அமரபட்சம் பகலிரவு பக்ஷிகளின் தொழின்முறைக் கால அளவைச்சொல்ல அமரபக்ஷத்தின் தொழில் நாழிகையானது பகலில் ஊணுக்கு இரண்டாகவும், மரணத்துக்கு ஒன்றேகாலாகவும், தூக்கத்துக்கு அரையாகவும், அரசுக்கு முக்காலாகவும், நடைக்கு ஒன்றரையாகவும், கொள்வதன்றி இரவினிலே ஊணுக்கு ஒன்றேமுக்காலாகவும் தூக்கத்துக்கு முக்காலாகவும், நடைக்கு ஒன்றேமுக்காலாகவும், மரண

த்துக்கு ஒன்றாகவும், அரசுக்கு முக்காலாகவும் இவ்வாறு நாழிகைகளை பிரித்து விவரித்தெனபதாம் எ-று. 92

## நட்சத்திரப் பட்சிகள்

மேதியாயமரபட்சப் பட்சிகேளு
செழிக்கவேயசுவனிநே ரைந்துமஞ்ஞை
ஆதிரைநேர்கூறவு மாறுங்கோழி
அதிலுமுத்திரமும்நே ரைந்துங்காகம்
ஓதிடவுமனுஷம் நேராறும்வல்லூறு
ஓணமதுநேரைந்து மாந்தையாகும்
சோதிக்கப்பட்சிநிலை யறியவேண்டி
சொல்லியதும்நட்சத்திர தொடர்பிதாமே.

(இ-ள்.) நட்சத்திரப்பட்சியைச் சொல்ல அமரபட்சத்தின் பட்சிகளாவது-அசுவனி முதலைந்துக்கும் மயிலாகவும், திருவாதிரைமுதலாறுக்கும் கோழியாகவும், உத்திரமுதலைந்துக்கும் காகமாகவும், அனுஷமுதலாறுக்கும் வல்லூறாகவும், திருவோணமுதலைந்துக்கும் ஆந்தையாகவும் பட்சிநிலை யறியவேண்டி நட்சத்திரங்களுக் குரைத்தனராம் எ-று. 93

## திதிப்பட்சிகள்

தொடர்பாகப்பிரதமை சஷ்டியேகாதசியும்
தோகைதுதிகைசப்தமி துவாதசிகோழி
படர்திரிதிகையஷ்டமி திரயோதசிகாகம்
பன்னுஞ்சதுர்த்திநவமி சதுர்த்தசியுமாந்தை
அடர்பஞ்சமிதசமி யமாவாசிவல்லூறு
ஆகவமரபட்ச மமைந்ததிதிப்பட்சி
இடரறவேவாரங்க ளேழுக்குங்காண
இசையவேபோகரு மியம்பினதுமாமே.

(இ-ள்.) திதிப்பட்சிகளைச்சொல்ல பிரதமை சஷ்டி ஏகாதசிக்கு மயிலாகவும், துதிகை சப்தமி துவாதசிக்கு கோழியாகவும், திரிதிகை அஷ்டமி திரயோதசிக்கு காகமாகவும், சதுர்த்தி நவமிசதுர்த்தசிக்கு ஆந்தையாகவும், பஞ்சமி தசமி அமாவாசைக்கு வல்லூறாகவும், அமரபட்சத்திற்குரிய திதிப்பட்சிகள் வாரங்களேழுக்கும் கண்டறிய போகர் நாயனருரைத்ததெனபதாம் எ-று. 94

## இராசிப்பட்சிகள்

இபம்பின துமிடபங் கர்க்கடகமயிலாகும்
எண்ணரியமேஷ விருச்சிகமுங்கோழியதாம்
நயம்படவுங்கன்னிசிங்க மகரங்காகம்
நனிமாய்த்தனுசு கும்பமிதுனமாந்தை
செயம்படவேதுலைமீனஞ் சேரும்வல்லூரு
செழிக்கவேயமரபட்சச் செயலீதென்று
வயம்படவேபோகருந்தான் வளமதாக
மகிதலத்துள்ளவர்க்கா யுரைத்தார்பாரே.

(இ-ள்.) இராசிபட்சிகளைச் சொல்ல ரிஷபம் கடகம் மயிலாகவும் மேஷம் விருச்சிகம் கோழியாகவும், கன்னி சிங்கம் மகரம் காகமாக வும், தனுசு கும்பம் மிதுனம் ஆந்தையாகவும், துலாம் மீனம் வல்லூ ருகவும், அமரபட்சத்துக்குரிய இராசிகளென்று போகரெடுத்து உல கத்துள்ளவர்க்குரைத்தன ரென்பதாம் எ-று. 95

## மயிலின் சத்துரு மித்துரு

உரைக்கவேயமரபட்சத்தின் பகையதுவும்
உள்ளதுமயிலுக்கு வயராந்தையாகும்
விரைக்கவேமித்துரு வல்லூருக்குகோழியதாம்
மேவிடவுமித்துருக்கு வேறோர்பகையுமில்லை
கரைக்கவேபகையுள்ளோ ருறவதாவர்
காணவேயெக்காலஞ் சத்துருவைக்கூறத்
தரைக்குள்ளேசத்துருவைத் தள்ளிவிடுமென்றே
சாற்றினர்போகருமே தடையிலாமலுமே.

(இ-ள்.) மயிலின் சத்துரு மித்துருவைச்சொல்ல அமரபட்சத் தின் சத்துருவு, மயிலுக்கு ஆந்தையாகவும், மித்துருவு வல்லூர்க்கு கோழியாகவும், அம்மித்துருவுக்கு வேறொன்றும் பகையுள்ளோர் களும் உறவாவர் எக்காலுஞ் சத்துரு மித்துருவையுரைக்க அச்சத் துருவைத் தள்ளிவிடுமென்று போகர் தடையிலாது கூறியதென்ப தாம் எ-று. 96

## கோழியின் சத்துரு மித்துரு

தடையறக்கோழிக்குச் சத்துருவுரைக்கச்
சந்ததங்காகமுடன் வல்லூருசாகும்
இடாறவுமித்துருவைச் சொல்லவுங்கேளு
எக்காலுமயிலுடனே யாந்தையாகும்

திடமுறவுமித்துறவி னுறவுதானன்று
 செகமதிற்சத்துருவி னுறவுமாகாது
உடனேவெகுகொடுமையது வொக்கவேசூழும்
 ஒதுக்கவுமொருவரால் முடியாதாமே.

(இ-ள்.) கோழியின் சத்துரு மித்துருவைச்சொல்ல அமரபட்சத்திற் கோழிசத்துரு, காகம் வல்லூறுகவும், மித்துருவு மயில் ஆந்தையாகவும், அமித்துருவினுறவு நன்மையாதலால் சத்துருவினுறவு ஆகாது வெகு கொடுமை யுள்ளது அதைத்தடுக்க ஒருவரால் முடியாதென வுரைத்ததென்பதாம் எ-று. 97

## ஆந்தையின் சத்துருமித்துரு

முடியாதுவாந்தைக்குச் சத்துருவின் கோரம்
 முன்னமேவல்லூறு மயிலதுவுமாகும்
படிவாகமித்துருவைச் சொல்லிடவுமக்கால்
 பாங்காகக்கோழியுடன் காகமதுவாகும்
துடியாகமித்துருவைச் சேர்ந்திடுங்காலம்
 சுகமாகவாழ்ந்திடுவார் பகையொன்றுமில்லை
குடியாகச்சத்துருவைச் சேர்க்கவுமொண்ணாது
 கோகனகநஷ்டமுடன் பழிபகையுமாமே.

(இ-ள்.) ஆந்தையின்சத்துரு மித்துருவைச்சொல்ல அமரபட்சத்தில் ஆந்தைக்குச்சத்துரு வல்லூறு மயிலாகவும், மித்துரு கோழி-காகமாகவும், அம்மித்துருவைச் சேர்க்குங்காலத்தில் சுகமாகவாழ்வடைவர் பகையொன்றுராது அச் சத்துருவைச் சேர்க்கில் பசவும் பொன்னும் கஷ்டமுடன் பழிபகையாவும் நேருமென்பதாம் எ-று.

## காகத்தின் சத்துருமித்துரு

பகையாகக்காகத்தின் சத்துருவைச்சொல்ல
 பாங்குடனேமஞ்ஞையுடன் கோழியதுவாகும்
தொகையாகமித்துருவைச் சொல்லவுமக்கால்
 உழவேயாந்தை வல்லூறுமுறவாகும்
நகையாகவெத்தொழிற்கு மித்துருவும்வேண்டும்
 நகஞ்சதையும்போலவே நன்றாகவாழும்
வகையாகவிருக்கவுஞ் சத்துருவாகாது
 வாட்டமாய்ச்சத்துரு பகையுங்கூடாதே.

(இ-ள்.) காகத்தின் சத்துருமித்துருவைச்சொல்ல அமரபட்சத்தில் காலத்துக்குச் சத்துரு மயில் கோழியாகவும், மித்துரு ஆந்தை வல்லூறாகவும், அம்மித்துருவு எத்தொழிற்கும் வேண்டுவதாதலால் அது நகமுஞ் சதையும்போல ஒத்திருந்து நன்றாகவாழ்வர். இதிற் சத்துருவாகாது அச்சத்துருவின் பகையுங்கூடாது என்பதாம் எ-று.

## வல்லூறின் சத்துருமித்துரு

கூடாதுவல்லூரு சத்துருவுதற்கு
  கூறவுங்கோழியுட னந்தையதுவாகும்
வாடாதுமித்துருவைச் சொல்லவுங்கேளு
  வாகாகமயிலுடன் காகமதுவாகும்
வீடாதுமித்துருவால் வீற்றிருப்பார்வெகுபேர்
  வீணராய்ச்சத்துருவாற் கெட்டோர்கள்கோடி
நாடானதில்மித்துரு வுறவதாச்சு
  நம்பவுஞ்சத்துருவாற் பகையுண்டாச்சே.

(இ-ள்.) வல்லூறின் சத்துரு மித்துருவைச்சொல்ல அமரபட்சத்தில் வல்லூருக்குச் சத்துரு கோழி ஆந்தையாகவும், மித்துரு மயில் காகமாகவும், அமித்துருவையடைய வெகுபெயர்கள் சுகமாய் வாழ்ந்திருப்பார் சத்துருவையடைய வீணராய் வெகுபெயர்கள் கெட்டலைவர் அம்மித்துருவி னுறவாகவும் சத்துருவிற் பகையாகவுங் கொள்க எ-று. 100

## மித்துருவின் பலாபலன்

உண்டாகுமித்துருவா லுறுதியாக
  ஒருவனைத்தானடுத்து வூடூழிவாழ்வன்
பண்டாகக்கிளை கோடிப் பாங்குபெற்று
  பலகாலுமிருந்துவுற வாடிவாழ்வர்
கொண்டாடவுறவினரைக் கூடிநாளும்
  குறையறவேசுகிப்பா மித்துருவைச்சேர
தொண்டாக மித்துருவையடைந்தகாலம்
  சுகுணமாய்வாழ்ந்திடுவார் பதியிற்றானே.

(இ-ள்.) மித்துருவின் பலாபலனாவது இம்மித்துருவின்வலியால் ஒருவனையடுத்து சுகசீவியாய் நீடூழிவாழ்வான் அன்றியும் கிளைசுற்ற முதலிய செல்வமுற்று எந்நாளும் உறவாடி வீற்றிருப்பன் அம்மித்துருவைச் சேர யாவருங் கொண்டாட உறவினரைக் கூடி வாழ்வன் தான் மித்துருவையடைய தன்னில்லங்களை பலர் தொண்டுபுரிய சுகுணமாய் வாழ்ந்திடுவர். எ-று. 101

பதிவாக மித்துருவா யிருக்கும்வேளை
பலதொழிலுஞ்செய்யவெகு பலனுதிக்கும்
ததியாக வியாபாரக் கிருஷிசெய்ய
தனஞ்சேருமித்துருவிற் செய்யநன்று
கதியாக வெவ்வகையுங் கைகூடும்
கனகபொருள்மிகும்பந்து வுறவுமாவர்
மதியாலே சத்துருவி னேர்மைகாண
மனமகிழ்வர்போகரது வாக்கினாலே.

(இ-ள்.) மித்துருவாயிருக்கும் வேளையில் பலதொழிலுஞ் செய்ய வெகு பலனுண்டாகும் வியாபாரகிருஷித் தொழில் புரிய தனக்கு சேரும் மித்துருவிற்செய்ய எவ்வகையுங் கைகூடும் இன்னும் பொன் பொருள் அதிகரித்து பந்துக்கள் உறவாவர். சத்துருவின் பலனைக் காண யாவும் பொல்லாதென்பதாய் போகர் சொல்லியதால் யாவரு மனமகிழ்வர் எ-று. 102

வாக்கறியப் பகைபோச்சுப் புகழுண்டாச்சு
மகிதனிலேசெய்தொழில்கள் பலிதமாச்சு
நோக்கரியப் பொருட்சேர்க்கை தனமுண்டாச்சு
நுட்பமாய்மங்களசோ பனவாழாச்சு
தாக்கரிய கிரியையங்கே செய்யும்வேளை
சார்பாக மித்துருவா யிருக்கவேண்டும்
போக்கரிய வொன்றில்லா தெல்லாமாகும்
பொல்லாதசத்துருவைப் பூட்டிடாதே.

(இ-ள்.) முற்கூறியவர் வாக்கறியுங்கால் பகையானது நீங்கி புகழான துண்டாகி செய்தொழில்களெல்லாம் பலிதமாம் பொருட்சேர்க்கையும் தனவருத்துமுண்டாகி மங்கள சோபன சுபகாரமாய் வாழ்வு பெருகுவதுடன் மித்துருவா யிருக்கும் வேளையில் அந்தக் கிரியைகளைச் செய்தபோதிலும் ஒன்றேனுங் குறைபடாது யாவும் பலன் றருமாதலால் சத்துருவைச் சேர்க்காது முடிக்கவும் எ-று. 103

## சத்துருவின் பலாபலன்

பூட்டிடவுஞ் சத்துருமித் துருவுமொன்றாய்ப்
பொருந்தவேசந்தோஷ மில்லைத்துக்கம்
நாட்டிடவு மதுபோலே நீருக்கவேண்டும்
நல்வினையுந்தீவினையும் நளினமாக
காட்டிடவு முள்ளவர்க்கு விரண்டுபோச்சே
கன்மவினையணுகாது வற்றிப்போச்சே
ஓட்டிடவு மீய்ப்புகுந்த வாறுபோல
உள்ளதுதான் சுகதுக்க முற்றுப்பாரே.

(இ-ள்.) சத்துருவின் பலாபலனைது சத்துருமித்துருவு மொன்ருயின் சந்தோஷமின்றி, சுகதுக்க மொன்ருய் நினைப்பதுபோல, நல்வினை தீவினையுஞ் சமனகக் கொள்பவர்க்கு இவ் விரண்டும் நீங்குமோ அவர்களை கன்மவினை யணுகாது அற்றுப்போகுமோ இது புண்ணிய மொய்த்தவாறுபோல இன்பதுன்ப மிரண்டும் ஒன்ருகக்கொள்ளல வேண்டு மென்பதாம் எ-று. 104

உற்றுப்பார் மித்துரு சத்துருவுமொன்று
உள்ளதுவுஞ்சந்தோஷங் கோபமொன்று
சற்றுமே நலம்பொலனும் வலமிடமும்
சாற்றவும்நன்மைதுன்மை யிரண்டுமொன்று
சுற்றில்பஞ்ச கர்த்தருள்ள தலமுமொன்று
தொடர்ந்துதிக்கும்வாசிநிலை சுவாசமொன்று
பற்றிடவும் பலசெந்தைப் படைப்போனென்று
படிந்திருந்தவிடத்திலல்லோ யிடருண்டாச்சே.

(இ-ள்.) உற்றுப்பார்க்குமிடத்தில் மித்துரு சத்துருவுமொன்று சந்தோஷம் கோபமொன்று நலம்பொலனும் வலமிடமும் நன்மை துன்மை இரண்டுமொன்று பஞ்சகர்த்தருள்ள தலமுமொன்று வாசிநிலையாகிய சுவாசமும் ஒன்று பலவித ஜீவ ஜெந்தைப் படைத்தவனென்று யாவும் பற்றியவிடத்தில் இடரான துண்டாயிற் றென்பதாம் எ-று. 105

உண்டாகச் சத்துருவின் பகைபொல்லாது
ஊதாரிக்காரியங்கை கூடொணது
தெண்டமாம் பொருட்சேதம் பகையுமுற்றூர்
திரவியம்போம்சத்துருவின் பலனீதாகும்
பண்டான மங்களசோ பனமாகாது
படிவாகமுடிந்திடினும் பாழதாகும்
கொண்டாலுந் தனநஷ்டம் சோரமாகும்
கொடியவழக்கிட்டாலும் வெல்லார்பாரே.

(இ-ள்.) பட்சிகளின் சத்துருப்பகை பொல்லாதாகையால் ஊதாரியாகச் செய்யுங் காரியங்களெல்லாங் கைகூடாது பொருட்சேதம் திரவியநாசம் உறவினர் பகையாவும் சத்துருவின் பகையென்பதாம். இதில் சுபமங்கள சோபனங்களொன்றேனு மாகாது முடிந்த விஷயங்களெல்லாம் பாழாகும் தனநஷ்டம் சோரபய முண்டாவதுடன் வழக்குகள் வெல்ல மாட்டார்காண் எ-று. 106

வெல்லவேசத்துருவால் முடியாதென்றும்
வீணாகும்நன்மையில்லை வினையுதிக்கும்
செல்லவேசிவன்செயலென் றெவருஞ்சொல்வர்
தீதாகும்வேளையென் றறியமாட்டார்
வல்லமையாய்வேளையது வுணர்ந்தோரெல்லாம்
வகையானவேளையென்ன மகிழ்ந்துரைப்பர்
அல்லல்படமனமிடைஞ்சல் வாராமற்றான்
அனுதினமும்நேரமதை யறிவார்பாரே.

(இ-ள்.) வெல்வதற்கு யாதொரு காரியமும் சத்துருவால் முடியாததாய் வீணாகி நன்மையில்லாது வினையுதிப்பதை சிவன்செயலென்றெவர்களுஞ்சொல்வது சகஜம் வேளையென் றறியமாட்டார்கள் வல்லமையுள்ள வேளை மித்துருவென் றுணர்ந்தவர்கள் அல்லல்படாது மனமிடைஞ்சல்வாராது எக்காலும் இதை நல்வேளையென மகிழ்ந்துரைப்பர் மற்றவர்கள் இவ்வேளையைக் கண்டறிவது கடினம் எ-று.

அறியவுஞ்சத்துருவைச் சேர்வாராகில்
அங்கனையறுபத்து நாலுமாகும்
குறியதுதானெதிரியின் பட்சியோடு
கூட்டிடுவாய்சத்துருவைக் கொண்டுமற்றும்
நெறியுடனேசெய்கின்ற பட்சிக்கப்பா
நிலைமையுள்ளமித்துருவைச் சேர்ப்பாயானால்
வறிஞனுஞ்செய்தொழில்கள் பலிதமாகும்
மறந்திதனைவிட்டாலும் பலியாதென்னே.

(இ-ள்.) சத்துருவைச் சேர்க்குங்கால் அறுபத்துநாலு சித்துகளுமாகும் எதிரியுடைய பட்சியோடு சத்துருவைச் சேர்த்து செய்கின்ற பட்சிக்கு மித்துருவைச் சேர்க்குங்காலில் செய்தொழில்கள் யாவும் தடையின்றி பலிதமாகும் யாதொருவரும் இவ்வாறு மறந்து தாறுமாறாகச் செய்யின் அக்காரியங்கள் முழுதும் பயன்படாதென்பதாம். என்றவாறு.

108

என்னவேசத்துருவைச் சேர்க்காவிட்டால்
இன்பமுறுமங்கத்திற் பழுதொன்றில்லை
முன்னமேமித்துருவைச் சேர்த்துச்செய்ய
முற்றுமேநினைத்தபடி முடியாதங்கே
பன்னவேநூலிதனைப் பழுதென்றெண்ணி
பலர்நினைத்தபடிசெய்யப் பலியாதங்கே
வின்னமுறக்கைபாகஞ் செய்பாகத்தை
வேறாகமறந்துசெய்ய வீணாகும்மே.

(இ-ள்.) எதிரிக்குச் சத்துருவைச் சேர்க்காவிடின் அவன் இன்ப முற்று அங்கத்தில் யாதொரு பழுதிராதிருப்பன் மித்துருவைச் சேர்த்துச்செய்ய தானினைந்தபடி முடியாததாகும் இப்பட்சி நூலைப் பழுதென் றெண்ணிப் பலர் நினைத்து செய்யுங் காரியமெல்லாம் பலித மாகாவாம் இதிற் கைபாகஞ் செய்பாகத்தைக்கண்டு அதை மறந்து செய்ய வீணாகும் எ-று. 109

வேறுகுமன திற்கு வின்பமில்லை
மேவிடவுமிருந்தவிடம் விலகித்தள்ளும்
மாறுதுகருக்குருவு மறியாவிட்டால்
மாம்போலேசாய்ந்துவிழு மாணிப்பில்லை
நேறுகக்குனியாது நிமிறுதியாவும்
நிர்க்குண மாகாது சத்துருவைவிட்டால்
கூறுகாதஷ்டகர்ம வித்தையெல்லாங்
குணமாகமாட்டாது கோணுமங்கே.

(இ-ள்.) முற்கூறியபடி மறந்துசெய்ய மன திற்கு இன்பமில்லாது தானிருக்குமிடத்தையும் விட்டு விலகச்செய்யும் இதோடு கருக்குரு வும் அறியாவிடின் ஓராதாரமில்லாது மாம்போலச் சாய்ந்து விழும் அது குனியாது நிமிறுது யாவும் நிர்க்குணமு மாகாவாம் அச் சத் துருவை விட்டால் இஷ்டகர்ம வித்தையெல்லாம் ஒன்றேனுமுடியாது கோணுமென்பதாம் எ-று. 110

கோணிவிடும்பட்சிவித்தைப் பலிதமில்லை
கூறிடவுமித்துரு சத்துருவைவிட்டால்
ஆணிபோலெத்தொழிலும் நிறைவேறுது
ஆடிவாப்போரதில்லை யறியாவிட்டால்
ஊணிடவும்நன்மையினில் நன்மைசெய்யும்
ஒத்துமேதீமைதனிற் றீமைசெய்யும்
காணிடவும் நோமங்கே முன்பின்னாக்க
நஷ்டமாய்ப்போகாது நலமாய்ச்செய்யே.

(இ-ள்.) இப்பட்சி வித்தை கோணி விடுவதற்குக் காரணம் பலி தமிரா திருப்பதாம். அதினும் மித்துரு சத்துருவைவிட ஆணிபோல எத்தொழிலும் நிறைவேறுது அதையறியாவிடினும் யாதேனும் ஆடி வரப்போகிறதில்லை அதை ஊன்றிடுங்கால் நன்மையினில் நன்மையா கவும் தீமையினில் தீமையாகவும் செய்விக்கும் அப்பட்சி காலங்களை முன்பின்னாக்கி நஷ்டமாய்ப் போகாது நன்றாகச் செய்யுமென்பதாம் என்றவாறு. 111

# பிணிப்படலம்

## ஊண்காலப்பிணியின் பலன்

எக்காலுமூண தினிற் பிணியுதித்தால்
என்மகனே மூவைந்து நாளிற்றீரும்
அக்காலிலிங்கர்க்கு வபிஷேகித்து
அதிற்றூபதீபமிட்டுத் தொழுதுபோற்றி
முக்காலுமருந்தீயச் சொல்லுங்காலை
யுயர்மறையோர்க்கன்ன தானமுங்கொடுத்து
சிக்காலுஞ்சிலுகற்றே மருந்துட்கொள்ள
தீவிரமாயுள்ளபிணி சொல்லும்பாரே.

(இ-ள்.) பிணியானது ஊண் காலவேளையி லுதிக்குமாகில் அது பதினைந்து நாளையிற்றீரும் அப்படித் தீராதாகில் விநாயகர்க்கு அபிஷேகஞ் செய்வித்து தூபதீபங் கொடுத்து தொழுது வணங்கி மருந்தீயும்போது பிராமணர்களுக்கு அன்னதானஞ் செய்வித்து அந்த நோயகலத்தக்க மருந்துகளை உட்கொள்ளச் சீக்கிரத்தில் அந்நோயானது நீங்கிவிடும் எ-று. 112

## நடைகாலப்பிணியின் பலன்

செல்லவும்நடைதனிற் பிணியுதித்தால்
சீழ்வுரணமிகுதியுண்டாந் திங்களொன்றில்
அல்லலறும்வேலவற்கு வபிஷேகித்து
அங்கனைகன்னியர்க்குக் களபம்பூசி
எல்லையினிலன்னமது வன்பாய்ச்செய்து
இதிற்பண்டிதற்கு வுபசாரம்பண்ணி
கல்லறமருந்தீயச் செய்வாயாகில்
கண்டதொறுபிணியகலுங் கணக்காய்த்தானே.

(இ-ள்.) பிணியானது நடை காலவேளையிலுதிக்குமாகில் அது சீழ் இரணம் செந்நீர் மிகுதியாய் ஒரு மாதத்திற்றீரும் அப்படித் தீராதாகில் சுப்பிரமணியருக்கு அபிஷேகஞ் செய்து கன்னிகைகட்கு களபகஸ்தூரி குங்குமமஞ்சள் தாம்பூலந்தரிக்கச்செய்து அவர்கட்கன்னம் பரிமாறி மருந்தளிக்கும் வைத்தியர்க்கு உபசாரஞ்செய்து மருந்தீயுங்கள் அப்பிணியானது உடனே தீரும் எ-று. 113

## அரசுகாலப் பிணியின்பலன்

கணக்காகவரசதனிற் பிணியுதித்தால்
கண்டிடவும்நாளெட்டிச் தீரும்பாரு
பிணிக்காகச்சிவனுக்கு வபிஷேகித்து
பின்னரசுமரம்பிரதட் சணமுஞ்செய்து
வணக்கமாய்நோயாளிப் பீடைநீங்க
வாகாகவோமங்கள் வளர்த்திபிய
இணக்கமாயக்கினியில் வந்தநோயும்
இடர்செய்யாதகன்றுவிடு மெளிதிற்றானே.

(இ-ள்.) பிணியானது அரசுகால வேளையி லுதிக்குமாகில் எட்டு நாளையிற்றீரும் அப்படித் தீராதாகில் சிவலிங்கத்துக்கு அபிஷேகஞ் செய்து வணங்குவதுடன் அரசமரமுஞ் சுற்றிப் பிரதட்சணஞ் செய்து நோயாளியின் பீடை நீங்க ஓமங்கள் வளர்த்தி மருந்தளிக்க அழலால் வந்த நோய் இடர் செய்யாது அகன்றுவிடும் எ-று. 114

## துயில்கலப்பிணியின் பலன்

எளிதாகவுறக்கத்திப் பிணியுதித்தால்
ஏகுவது மாதமது மூன்றுக்குள்ளே
வெளியாகவுடலதனை நோகச்செய்யும்
மேவிடவுங்காளிக்கு வபிஷேகித்து
வளியாகவாயுவினால் வந்தநோய்க்கு
வடமாலைவடுகனுக்கு வணங்கிச்சாத்தி
ஒளியாதுபிடகன்கை மருந்துமீந்தால்
உத்தமனேயந்நோயுந் திரும்பாரே.

(இ-ள்.) பிணியானது துயில்கால வேளையிலுதித்தால் மூன்று மாதத்திற்றீரும் அப்படித் தீராதாகில் அது தேகத்தை வருத்தி நோகச்செய்யும் அதற்குக் காளிகாதேவிக்கு அபிஷேகஞ் செய்து வாயுவினால்வந்த நோய்க்கு பூமாலையை வடுகனுக்குச் சாத்தி வைத்தி யன்கை மருந்தளிக்க அந்நோயானது நீங்கிவிடும் எ-று. 115

## மரணகாலப்பிணியின் பலன்

திறவே மரணத்திற் பிணியுதித்தால்
செல்லுவதும்வெகுவருத்த மாதமாறில்
தேறலேவேதேறாதோ வென்பார்பாரு
செய்வினையுந்தீவினையு மென்பார்பாரு

கூறவேவன்செயலு மிருக்குமாகில்
குணமாகுமரசுபகை யானுலில்லை
ஆறவேபரிகாரஞ் சனியனுக்கு
அபிஷேகஞ்செய்திடவு மதமாய்ப்போமே;

(இ-ள்.) பிணியானது மரணகால வேளையி லுதிக்குமாகில் அது வெகு வருத்தமாய் ஆறுமாதத்தில் தீரும். அப்படித் தீராதாகில் யாவரும் தேறுமோ தேருதோவென்றும் செய்வினையோவென்றும் பலர் கூறுவதுடன் வேல்தாங்கிய முருகர் கிருபை யிருக்குமாகில் குணமாகி விடும்; அதிலும் அரசு பகையா யிருக்குமாகில் நோய் நீங்காது நீடிக்கும். இதற்குப் பரிகாரம் நவக்கிரகங்களின் சனியனுக்கு அபிஷேகஞ் செய்து நவதானியம் தானஞ்செய்து நெய்விளக்குவைத்துவர அந்நலி வருத்தமின்றி நீங்கும் எ-று. 116

அதமாகுமாகாச வெளியதாகும்
அங்ஙனே வூணரசு பகையாகாது
சதமாகச்சத்துருவின் கொடுமைமெத்த
தள்ளிடவுமித்துருவே யிருக்கவேண்டும்
பதமாகக்கூற்றன்றன் மரணநாளும்
பற்றிடவுமில்லாம லிருக்கவேண்டும்
இதமாகவிவைகளுக்கோர் பகையாகாது
இருந்திடிலோவுயிர்ச்சேத மிசையுந்தானே.

(இ-ள்.) பிணிகாலப்பகுப்பை யுரைக்குங்கால் ஆகாசமென்பது வெளி அதில் ஊணரசு பகையாயிருக்கின் சத்துருகளினுற் கொடுமை யதிகரிக்கும் அதை நீக்கி மித்துருவா யிருக்குமாகில் வெகு நன்மையாம் சத்துருவாகில் அது இயமனது மரணநாளாகும் அவை நீக்கவும் பகையாயிருக்கின் உயிர்ச்சேதமுண்டாகும். எ-று. 117

ஊண்காலம் பிணியின் 1-ம் விநாடி

இசையவேபிணியுதித்தோன் முதலாம்விநாடி
இனிற்கண்டநோயதுநாளிருபதிற்போம்
தசையிலேநோயதுதான் பலமேயில்லை
தான்வெற்றியாமரசு பகைகூடாது
அசையவேதன்பகையிற் பிணிதான்மெத்த
ஐங்கரற்குவபிஷேகஞ் செய்துபோற்றி
விசையனுய்த்தொழுதுநிற்கத் தேகத்துள்ள
வினைதீரும்பயமில்லை விளம்புங்காலே.

(இ-ள்.) ஊண்காலப் பிணியின் க-ம் விநாடியைச் சொல்ல இதி லுதித்த நோயானது இருபதுநாளிற்றீரும் அந்நோயானது பல மின்றி வெற்றியடையும் அதி அரசு பகையாயிருக்கின் பிணியானது அதிகரிக்கும் அதற்கு விநாயகர்க்கபிஷேகஞ்செய்து தொழுதேற்ற அவ்வினையானது யாதொரு விக்கினமின்றி தீரும் எ-று. 118

## ஊண்காலப் பிணியின் 2-ம் விநாடி

விளம்பவேநோயுதித்தோ னிரண்டாம்விநாடி
மேவிடவுந்தேகபிணி யேழுநாளில்
வளம்படவேநோய்தீரும் தீராதாகில்
வாகாகவைங்கரற் கபிஷேகித்து
உளமகிழவருச்சனைசெய் தடிவணங்க
ஒதுங்கிவிடும்நோயரசுபகை யில்லாவிட்டால்
தளமாகப்பயமில்லை வலிவிராது
சடுதியிலேநோய்தீருந் தடையிராதே.

(இ-ள்.) ஊண்காலப்பிணியின் 2-ம் விநாடியைச் சொல்ல இதி லுதித்த நோயானது ஏழு நாளையில் தீரும். அப்படித் தீராதாகில் கணபதிக்கு அபிஷேகஞ்செய்து அருச்சனைபுரிந்து அவரை தொழுது போற்ற அப்பிணியான தகலும் அதிலரசு பகையாகில் யாதொரு பகையுமின்றி விரைவினிலே அந்நோயானது வலிவு செய்யாது நீங்கி விடும் எ-று. 119

## ஊண்காலப் பிணியின் 3-ம் விநாடி

தடையுறவேநோயுதித்தோன் மூன்றும்விநாடி
தனிலுதித்தநோய்நவ நாளினிலேதீரும்
இடையினிற்றீராதேல் விஞபகற்கு
ஏற்றியேபூசிக்க வேகும்நோய்தான்
கடையினிலேயரசுபகை யிருந்தாலுந்தான்
கலிவுமெத்தவில்லையதி லரசும்பாதி
கடையரசுபகையூணில் வலிவுமில்லை
கண்டிதமாய்நோயகலும் காலப்பாரே.

(இ-ள்.) ஊண்காலப்பிணியின் 3-ம் விநாடியைச் சொல்ல இதி லுதித்த நோயானது ஒன்பது நாளையிற்றீரும். அப்படித் தீராதாகில் விக்கினேஸ்வரருக்கு அபிஷேகஞ்செய்து பூசித்துப்போற்ற அந் நோயான தகலும். அரசுபகையா யிருந்தாலும் பயமில்லை. அவ்வரசும் பாதி பலனைத் தரும். ஊணில் அரசுபகையாகில் அது வலிவு செய் யாது நோயை யகற்றி வைக்கும் எ-று. 120

### ஊண்காலப்பிணியின் 4-ம் விநாடி

காலமதில்நோயுதித்தோ நாலாம்விநாடி
கண்டபிணிபதின்மூன்று நாளில்தீரும்
ஞாலமதில்தீராதே லங்கரற்கு
நற்கடலைப்பழந்தேங்காய் நாட்டிவைத்து
சாலவேயடிபணிந்து தொழுதுபோற்றி
தான்பிராமணபோசனங்கள்செய்ய
மேலவன்பகையாயிருக்கில் வலிவுசெய்யாது
வினைதீரும்பிருதிவிக்கூறு மேவுங்காலே.

(இ-ள்.) ஊண்காலப்பிணியின் 4-ம் விநாடியைச் சொல்லி இதி லுதித்த நோயானது பதின்மூன்று நாளையில் தீரும் அப்படித் தீரா தாகில் விநாயகற்கு அவல்கடலை சுண்டல் பழம் தேங்காய் வைத்து வணங்கி தொழுதேற்றி பிராமணபோசனஞ் செய்துவர அரசு பகையா யிருக்கினும் வலிவுசெய்யாது பிருதிவியின் கூறுகிய அந் நோயானது நீங்கிவிடும் எ-று. 121

### ஊண்காலப்பிணியின் 5-ம் விநாடி

மேவவேநோயுதித்தோ ஐந்தாம்விநாடி
வேதனைநோய்பதினைந்து நாளில்தீரும்
தாதவேயரசுபகை வினையுஞ்செய்யும்
சார்பாகக்கணபதிக்கு வபிஷேகித்து
பாவவேமறையவர்க்கு வன்னதானம்
பாங்காகச்செய்திடவும் பாரில்தீரும்
ஆவதுவுமூணதிலே வந்தநோயும்
அன்னதுவும்பிருதிவியி லுதித்ததாமே.

(இ-ள்.) ஊண்காலப்பிணியின் 5-ம் விநாடியைச் சொல்ல இதி லுதித்த நோயானது பதினைந்து நாளையில் தீரும் அப்படித் தீராதா கில் அரசு பகையால் வேதனைசெய்யும் அதற்கு கணநாயகர்க்கு அபி ஷேகஞ் செய்து வேதியர்க்கு அன்னதானமளித்து சோடசோபசா ரஞ் செய்ய அப்பிணியான தகலும் அது ஊணதிலே வந்தநோய் பிரு திவியி லுதித்தால் நீங்கிவிடும் எ-று. 122

### நடைகாலப்பிணியின் 1-ம் விநாடி

உதிக்கவேநடைக்கால முதலாம்விநாடி
உள்ளதினிற்பிணிவர நாட்பத்தில்தீரும்
கதிக்கவேதீராது நோய்மிருக்கில்
கனக்கவேனுண்டவரைத் தொழுதுபோற்ற

மதிக்கவேந்தன்பகையால் வருத்தமில்லை
வாகாகநோய்தீரும் வையகத்தில்
விதிக்கவேபட்சிதொழி லறிந்துநீயும்
வேளையும்பார்த்தெவர்கட்குஞ் சாந்திசெய்யே.

(இ-ள்.) நடைகாலப்பிணியின் முதலாம் விநாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானது பத்துநாளையில் தீரும் அப்படித் தீராவிடில் கனகவேலுடைய வள்ளலுக்கு அபிஷேகஞ்செய்து தொழுதுபோற்ற அரச பகையா யிருந்திடினும் வருத்தமின்றி தீராத நோயும் தீர்ந்து விடும் நீ நன்றாய்ப் பட்சி தொழிலை யறிந்து வேளையைப் பார்த்து எவர்கட்கும் சாந்திசெய்யக் கடவாய் எ-று. 123

## நடைகாலப்பிணியின் 2-ம் விநாடி

சாந்தியாம்நடைகால மிரண்டாம்விநாடி
தான்தீரும்பதினைந்து நாளிலப்பா
காந்தியாய்த்தணிகைவாழ் முருகருக்கு
கனமாகப்பிரார்த்திக்கக் குறையொன்றில்லை
வேந்தனின்கிருபையினு லிடர்கள்நீங்கும்
என்மக்களரசுபகை பெரிதாயெண்ணி
ஈந்திடவுமருந்தினையே மீறிடாது
எளிதினில்தீர்ந்துவிடு மிடரிராதே.

(இ-ள்.) நடைகாலப்பிணியின் இரண்டாம் விநாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானது பதினைந்து நாளையில்தீரும் அப்படித் தீரா விடின் தணிக்கைமலையினில் எழுந்தருளியிருக்கும் சிவ சுப்பிரமணிய ருக்கு பிரார்த்தனை செய்துகொள்ள அவர் கிருபையால் யாதொரு குறையின்றி பிணி நீங்கிவிடும். இதில் அரசுபகை பெரிதாக வெண்ணி காலமறிந்து மருந்தளிக்க அதுமீறாது இலேசாய் நீங்கிவிடும் எ-று.

## நடைகாலப்பிணியின் 3-ம் விநாடி

இடாறவேநடைகால மூன்றாம்விநாடி
யிதிலுதித்தபிணியதுவும் நாளிருபதிற்குள்
அடாரவேதீராது வருத்தமிஞ்சில்
அறுமுகனைப்பூசிக்கி லந்நோய்தீரும்
தொடரவேசத்துருவு ணாசாகாது
தொல்லைபடமனதையுந்தான் துயரஞ்செய்யும்
சடமதனிலப்புவினுல் வந்தநோயும்
தான்தீருந்தாமதத்தில் தங்காதென்னே.

(இ-ள்.) நடைகாலப்பிணியின் மூன்றும் விநாடியைச் சொல்ல அதிலுதித்த நோயானது இருபதுநாளையில் தீரும் அப்படித் தீராதாகில் வருத்தமதிகப்படின் அறுமுகக்கடவுளைப் பூசிக்க அந்நோயானது தீரும் அதிலும் சத்துரு வூணாசாகாது அது தொல்லைவிட மனதுக்குத் துயரஞ்செய்யும் தேகத்தில் அப்புவினால் ஜனித்தநோய் தாமதத்தில் தங்காது நீங்கிவிடும். எ-று. 125

## நடைகாலப்பிணியின் 4-ம் விநாடி

தங்காதுநடைக்கால நாலாம்விநாடி
சனித்தநோய்நாளிருபத் தைந்தில்தீரும்
சங்காதுநோய்மிகுக்கின் சண்முகற்கு
சந்ததமும்பிரார்த்திக்கத் தானேதீரும்
பொங்காதுவந்ததுவுந் தரித்தவேளை
பொருமியேநவக்கிரகத் தோஷத்தாலே
மங்காதுவந்தநோ யப்புகூறும்
வதைக்குமேசத்துருபகை வந்ததாலே.

(இ-ள்.) நடைக்காலப்பிணின் நாலாம் விநாடியைச்சொல்ல அதிலுதித்தநோயானது இருபத்தைந்து நாளையில் தீரும் அப்படித் தீராதாகில் சண்முகதேவனைத் தொழுது பிரார்த்திக்க அந்நோயானது தானே தீரும் இது சுக்கிலசுரோணித பேதத்தாலும் நவக்கிரகத் தோஷத்தாலும் அப்புவியின் கூறாய்வந்த பிணியகலும் அது சத்துரு பகையா யிருக்கின்ற வரைக்கும் எ-று. 126

## நடைகாலப்பிணியின் 5-ம் விநாடி

வந்ததுவும்நடைக்கால வைந்தாம்விநாடி
மாறுதுமாதமது வொன்றில்தீரும்
நொந்ததுவும் தீராதேல் வேலவற்கு
நுட்பமாயபி ஷகஞ் செய்யுங்காலை
தந்ததுவுமரசுபகை சாற்றொணாது
சார்பாகவூண்பகையும் பொல்லாதப்பா
வெந்ததுவுமநீரால் தேகவாதை
மேலாகிநின்றுவிடும் விரும்பிச்செய்யே.

(இ-ள்.) நடைகாலப்பிணியின் ஐந்தாம் விநாடியைச்சொல்ல அதிலுதித்த நோயானது ஒரு மாதத்தில் தீரும் அப்படி தீராதாகில் வேலவர்க்கு அபிஷேகஞ் செய்யுங்காலையில் சொல்லப்படாத அரசுபகையும் பொல்லாத வூண்பகையும் நீரதின்கூறாய் வெந்து வெம்பிய தேகவாதையானது நின்றுவிடும்படி விரும்பிச்செய்யும். எ-று. 127

### அரசுகாலப்பிணியின் 1-ம் விநாடி

விரும்பவுமரசகால முதலாம்விநாடி
வேறுகநாளதுவு மூன்றில்தீரும்
திரும்பவஃக்கினியாற் மூன்றில்தீரும்
தேகமதில்வந்தபிணி செல்வதற்கு
கரும்புனலைச்சிரமணிந்த சிவன்றனக்கு
கன்றுகவபிஷேகஞ் செய்வராகில்
இரும்பிடுநோயதிகரித்து யாவுந்தீரும்
இடரதுமேயக்காலி லேகும்பாரே.

(இ-ள்.) அரசுகாலப் பிணியின் முதலாம் விநாடியைச்சொல்ல அதிலுதித்த நோயானது மூன்றுநாளையில்தீரும் அப்படித் தீராதா இல் கங்கையைச் சடையிற்றரித்த பரமேஸ்வரனுக்கு அபிஷேகஞ் செய்து பிரார்த்திப்பாராகில் அக்கினியின் கூறும் சூடதிகரித்து இரும்பிடு நோயானது அக்காலில் இடரானதென்றிராது சகலநோய் களுந் தீரும் எ-று. 128

### அரசுகாலப்பிணியின் 2-ம் விநாடி

ஏருமரசக்கால விரண்டாம்நாடி
இனிலுதித்தநோயைந்து நாளில்தீரும்
போருமோசனிபிடித்த தோஷத்தாலே
புறட்டிவிடுமக்கினியிற் பொறுக்கொணாது
வாருடனேசிவன் கிருபை வைத்ததாலே
மாறிவிடுமத்தோஷம் மற்றும்பீடை
ஆருமதுவளராது விலகியோடும்
அங்ஙனயரசுபகை யகலாதென்னே.

(இ-ள்.) அரசுகாலப்பிணியின் இரண்டாம் விநாடியைச்சொல்ல இதிலுதித்த நோயானது ஐந்துநாளையில் தீரும் அப்படித் தீராதா இல் சனிபிடித்த தோஷத்தாலும் அக்கினியின்கூறாலும் அதிகரித் ததை சிவன் கிருபை வைப்பாராயின் அந்நோயகலும் மற்றுமுள்ள பீடையானது ஓங்காது விலகிவிடும் அதிலும் அரசுபகை யிருக்குமா யின் அகலாதென்பதாம். எ-று. 129

### அரசுகாலப்பிணியின் 3-ம் விநாடி

என்னவேயரசகால மூன்றாம்விநாடி
ஏகவேயெட்டுநாளையினிற்றீரும்
பன்னவேபரமனுக்க பிஷேகித்து
பணிந்திடவேபற்றில்லா தகலும்பாரு

முன்னமேதொல்லையென்று நினைத்திடாதே
ஊனதனில்வந்தபிணி யொதுங்கிப்போகும்
சொன்னபடியக்கினியால் வந்ததோஷம்
சொல்லாதுவணமேகுஞ் சூட்டுங்காலே.

(இ-ள்.) அரசுகாலப்பிணியின் மூன்றும் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது எட்டு நாளையில் தீரும் அப்படித் தீராதாகில் பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்து அவரைப் பணிந்துபோற்ற யாதொன்றும் பற்றில்லா தகலும் இது தொல்லையென்று நினைக்க வேண்டாம் தேகத்தி லுதித்த பிணியான தொதுங்கிவிடும் அதில் அக்கினியால் வந்த பீடையும் சொல்லாது வணமேகும் எ-று. 130

## அரசுகாலப்பிணியின் 4-ம் விநாடி

சூட்டவேயரசுகால நாலாம்விநாடி
தொல்லைநோய் பத்துநாளையினிற்றீரும்
நாட்டவேதீராதேல் சிவன்றனக்கு
நன்றாகவபிஷேகஞ் செய்யும்போது
பூட்டகமாய்ச்சனிபிடித்த தோஷந்தீரும்
பொல்லாதநோயகலும் வினையில்லாது
காட்டவேயாதேனும் பகையொன்றில்லை
கழறவுமிப்பலனைக் கருத்தில்வையே.

(இ-ள்.) அரசுகாலப்பிணியின் நாலாம் விநாடியைச்சொல்ல இதிலுதித்த நோயானது பத்து நாளையில் தீரும் அப்படித் தீராதாகில் சிவனுக்குக் குளிர அபிஷேகஞ் செய்துவர அதிற் சனிபிடித்த தோஷந் தீருவதன்றி பொல்லாத நோய்களு மகலும் வினையென்பது பற்றறும் யாதேனுமோர் பகையிராது இப் பலனைக் கருத்தில் வைத்துச் செய்வாய் எ-று. 131

## அரசுகாலப்பிணியின் 5-ம் விநாடி

கருத்திலரசுக்கால வைந்தாம்விநாடி
கதித்தநோய்ப்பனிரெண்டு நாளையிற்றீரும்
வருத்தமாய்த்தீராதேல் வலிசெய்யாது
மனமகிழ்ச்சியில்லாது வியாதிகொண்டு
திருத்தமாயக்கினியா லுதித்தகூடு
செப்பவுமையாள்கிருபை செயலாற்றீரும்
நிருத்தமாநோயற்றுச் சௌக்கியமாகும்
நோக்கவுமரசுபகை நோட்டம்பாரே.

(இ-ள்.) அரசுகாலப்பிணியின் ஐந்தாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பனிரெண்டு நாளையிற்றீரும் அப்படித் தீராதாகில் அது வலிவு செய்யாமலும் மனமகிழ்ச்சி யில்லாமலும் வியாதி யுற்பவித்து அக்கினியிலுதித்த அழல் உமையவளின் கிருபை யால் தீரும் •தேக நோயற்று சௌக்கியமாகும் இதில் அரசு பகை யாகா தென்பதாம் எ-று. 132

## நித்திரைகாலப்பிணியின் 1-ம் விநாடி

கோட்டமாயுறக்கத்தில் முதலாம்விநாடி
நுவலும்நோயெட்டு நாளையினிற்றீரும்
காட்டமாய்க்காளிக்கு வபிஷேகித்து
நன்முகமாருதிக்கு வணக்கஞ்செய்து
வாட்டமாய்ப்பிரார்த்திக்க வாயுவினாலே
வந்ததொருபிணிதீரும் வளமதாக
நீட்டமாயரசுபகை யாகாதங்கே
நிற்றமப்பிணிதா னீங்கும்பாரே.

(இ-ள்.) நித்திரைகாலப்பிணியின் முதலாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது எட்டுநாளையிற்றீரும் அப்படித் தீராதாகில் காளிக்கு அபிஷேகஞ்செய்து அனுமனையும் வணங்கி தோத்தரித்துப் பிரார்த்திக்க வாயுவினாலுதித்த பிணியானது வதை செய்யாது அகன்றுவிடும் இதில் அரசு பகையா யிருந்திடலாகாது இல்லாவிடின் பிணியானது நீங்கிவிடும் எ-று. 133

## நித்திரைகாலப்பிணியின் 2-ம் விநாடி

நீங்கவேயுறக்கத்தி லிரண்டாம்விநாடி
நேரும்நோய்பதினைந்து நாளிற்றீரும்
பாங்கதாய்த்தீராதே லாங்களிக்கும்
பண்பாகவபிஷேகஞ் செய்துதீர
ஓங்கவேநோய்தீர்த லரிதேயாகும்
உள்ளநோய்லகுவாகி யுபருப்பின்னும்
சேங்கவேயனத்துயரங் கொடுத்துமப்பால்
தொலைந்துவிடுமெப்பிணியுஞ் சுகுணமாமே.

(இ-ள்.) நித்திரைகாலப் பிணியின் இரண்டாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது பதினைந்து நாளையிற்றீரும் அப் படித் தீராதாகில் காளிகாதேவிக்கு அபிஷேகஞ் செய்து வைக்க அந் நோய் தீருவ தரிதாயினும் அவ்வேளையி லகுவாகி மறுபடியும் அந் நோயதிகரித்து அதினால் மனத்துயரங்கொண்டு மீண்டும் விலகிவிக் கும் தேகமுஞ் சுகமாகும் எ-று. 134

### நித்திரைகாலப்பிணியின் 3-ம் விநாடி

குணமாகவுறக்கத்தில் மூன்றும்விநாடி
 கூடியேநோயதுவிருப தினிலேதீரும்
சணமாகத்தீராதேல் காளிக்குந்தான்
 தக்காலிபொங்கலிட்டு வைரவற்கு
மணமாகவடமாலை மகிழ்ந்துசாத்தி
 வணங்கவேதகநோய் வலிவுகுன்றி
தணலாகவாயுவினுற் சனித்ததோஷம்
 தான்றிரும்பண்டிதன்கை மருந்துமீயே.

(இ-ள்.) நித்திரை காலப்பிணியின் மூன்றும் விநாடியைச் சொல்ல இதினுதிக்கும் நோயானது இருபது நாளிற்றீரும் அப்படி தீராதேல் காளிகாதேவிக்குப் பொங்கலிட்டு பலிகொடுத்து வைரவற்கு வடமாலைசாத்தி வணக்கஞ்செய்ய அந்நோய் வலிவுகுன்றி வாயுவினுதித்த தோஷமாற வைத்தியன்கை மருந்தளிக்க உடனே நீங்கிவிடுமென்பதாம் எ-று. 135

### நித்திரைகாலப்பிணியின் 4-ம் விநாடி

மருந்தளிக்கவுறக்கத்தில் நாலாம்விநாடி
 வந்துதித்தநோய்மாத மூன்றிற்றீரும்
வருந்தவேகாளிக்கு வபிஷேகித்து
 வணங்கவேயரசுபகை வாய்த்திட்டாலும்
பொருந்தவேவெகுகொடுமை செய்யும்நோய்கள்
 புரண்டேகுமக்கணமே பொல்லாங்கெல்லாம்
அருந்தவேமருந்ததனை யுண்ணும்போது
 அகலுமேயுள்ளநோ யதமாய்த்தானே.

(இ-ள்.) நித்திரைகாலப் பிணியின் நாலாம் விநாடியைச் சொல்ல இதினுதித்த நோயானது மூன்றுமாதத்திற்றீரும் அப்படித் தீராதாகில் காளிக்கு அபிஷேகஞ்செய்து வணங்க அரசு பகையாயிருக்கினும் வெகுகொடுமை செய்யும் நோய்கள் தீரும் பொல்லாங்காகிய தோஷத்துக்கும் தக்கமருந்தளிக்க யாவும் விலகிவிடும் எ-று. 136

### நித்திரைகாலப்பிணியின் 5-ம் விநாடி

அதமாகவுறக்கத்தி லைந்தாம்விநாடி
 அடுத்தநோயைம்பது நாளையிற்றீரும்
பதமாகத்தீராதேல் மரணமெய்தும்
 படியவேயரசுபகை யிருந்ததாகில்

வதைபாகவதைக்குமடா க்ஷணத்துக்குள்ளே
   வாகாகவாசமித்துரு சொல்லொணாது
சதமாகநோயனைத்துந் தீருந்தீரும்
   சந்தேகமில்லையிது போகர்வாக்கே.

(இ-ள்.) நித்திரைகாலப் பிணியின் ஐந்தாம் விநாடியைச்சொல்ல இதிலுதித்த நோயானது ஐம்பதுநாளையிற்றீரும் அப்படித்தீராதேல் மரணஞ்செய்யும் அதிலும் அரசு பகையாயிருக்கின் க்ஷணத்துக்குள்ளே வதைத்துவிடும் அரசு மித்துருவாயிருக்கின் ஆவசிய மில்லையாதலால் தக்கபடி சாந்தியுஞ்செய்து அவிழ்தப் பிரயோகஞ் செய்ய அந்நவியானது உடனே நீங்கிவிடும் எ-று. 137

## மரணகாலப்பிணியின் 1-ம் விநாடி

வாக்கதுவுமரணத்தில் முதலாம்விநாடி
   வந்தநோயதுமாத மிரண்டிற்றீரும்
போக்கதுவாய்த்தீராதேல் மரணமெய்தும்
   புகலவேயரசுபகை யானாலுந்தான்
ஏக்கமுறபிடறுவான் பழிகாரன்றன்
   ஏகுவானுகாச வெளியின்றோஷம்
நோக்கமுறத்தப்பிடிலோ மாதமாறில்
   நோய்தீரும்பயமில்லை நுட்பங்காணே.

(இ-ள்.) மரணகாலப் பிணியின் முதலாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது இரண்டுமாதத்திற்றீரும் அப்படித் தீராதேல் மரணஞ் செய்யும் அரசு பகையா யிருக்கின் இடறிற் பழிகாரனுவான் இது ஆகாசவெளியின் றோஷமாதலால் ஒருவேளை தப்புமாகில் ஆறுமாதத்தில் அந்நோய் எளிதிற்றீரும் யாதொரு பயமில்லை எ-று. 138

## மரணகாலப்பிணியின் 2-ம் விநாடி

காணவேமரணத்தி னிரண்டாம்விநாடி
   கண்டநோயொருவருஷத் தினிலேதீரும்
தோணவேயரசுபகை தொடர்ந்ததப்பா
   தொல்லைமெத்ததேகம்விட்டு வுயிரைத்தாக்கும்
பூணவேகுனியத்திற் சேர்ந்ததோஷம்
   பொல்லாதுமறலிவந்து புறட்டித்தள்ளி
நாணவேதன்னுலகங் கொண்டுபோவான்
   நன்றாகச்சாந்திபிரார்த் தனையுஞ்செய்யே.

(இ-ள்.) மரணகாலப்பணியின் இரண்டாம் விநாடியைச் சொல்ல இதிலுதித்த நோயானது ஒருவருஷத்திற்றீரும் அப்படித்தீராதாகில்

அரசுபகை பொல்லாதாகையால் அது மெத்தவும் வருத்தப்பட தேகத்தை விட்டு உயிரை நீக்கிவைக்கும் அக்காலத்திற் சூனியத்தை சேர்ந்ததோஷம் பொல்லாததால் இயமன்வந்து புறட்டித்தள்ளி தன் னுலகிற் கொண்டுபோய்ச் சேர்ப்பான் அதற்கு தக்கபடி ஓமசாந்தி களும் தேவதாப் பிரார்த்தனைகளுஞ்செய்ய நலிநீங்கும் எ-று. 139

### மரணகாலப்பிணியின் 3-ம் விநாடி

செய்யவேமரணத்தின் மூன்றும்விநாடி
　செனித்தநோய்வதைத்துவிடுந் தீராதப்பா
மெய்யதுதானுகாச வெளியின்றோஷம்
　விலகாதுவூணரசு பகையாகாது
பொய்யல்லசூனியத்திற் சேர்ந்தநோயும்
　போகாதுகங்கையுட சாபமீறி
பையவேதேகம்விட் டுயிரைமாய்க்கும்
　பண்படவுந்தீராது பழியாகும்மே.

(இ-ம்.) மரணகாலப்பிணியின் மூன்றும் விநாடியைச் சொல்ல தேகத்திலுதித்த நோயானது மாறாது மாய்த்துவிடும் இது ஆகாச வெளியின் கூறானதாலும் ஊணரசுபகை யாகாததினாலும் சூனியத் திற்சேர்ந்த நோயானதாலும் கங்கையின் சாபமீறியதாலும் நீங்காது பழிபாவமாய் தேகத்தைவிட்டு உயிரைமாய்த்துவிடும் இதற்கு எவ் விதப்பரிகாரங்கள் செய்தபோதிலும் தேறாது எ-று. 140

### மரணகாலப்பிணியின் 4-ம் விநாடி

மாய்க்குமேமரணத்தி னாலாம்விநாடி
　வந்தபிணியுடலழிய வாட்டும்நோயாம்
ஏய்க்குமேசத்துருநாள் மரணவேளை
　இன்பமறவரசுபகை யானகாலம்
சாய்க்குமேசூனியத்திற் சேர்ந்ததோஷம்
　சடமழியுமரணமது சாருந்திண்ணம்
வாய்க்குமேமரணமது குணமாகாது
　வருத்தமாஞ்சாந்திசெய்ய மாறாதாமே.

(இ-ன்.) மரணகாலப்பிணியி நாலாம் விநாடியைச்சொல்ல தேகத் திலுதித்த நோயானது உடலழியச்செய் நோயாகவும் சத்துரு நாள் மரணவேளையாகவும் அரசுபகையான காலமாகவும் சூனியத்திற் சேர்ந்த தோஷமாகவுமிருப்பதால் அது சடமழிய மரணத்தை யுண் டாக்குவது திண்ணம் இது விருத்தமாய் எவ்வித சாந்தி செய்தபோ திலும் மாறாது மரிக்கும் எ-று. 141

## மரணகாலப்பிணியின் 5-ம் விநாடி

மாறுமரணத்தி னைந்தாம்விநாடி
 வாய்த்தநோயுடலழிய வந்தநோயாம்
தீராதுபிரமன்விதி முடிந்தகாலம்
 சென்றிடுவர்தொகைசரிதான் செனித்தவேளை
கூறுமறலிவிடான் கொண்டுபோவான்
 கூடழியுமுயிர்போகுங் குறிதானிங்கே
தாராதுபெப்பலனுஞ் சாந்திசெய்ய
 தங்காதுயேகிடுவன் சண்டனூர்க்கே.

(இ-ள்.) மரணகாலப்பிணியி னைந்தாம்விநாடியைச்சொல்லதேகத் துதித்த நோயானது உடலழிய வந்தநோயாகவும் பிரமன்விதி முடிந்த காலமாகவும் பிறந்தவேளையின் றொகைசரியாய்ப் போனதாகவு மிருப்பதால் மறலியானவன் உயிரைவிடாமற் கொண்டுபோவானென் பதுண்மை இதற் கெவ்விதசாந்தி செய்தபோதிலும் தப்பாமலேகிடு வன் எ-று. 142

## பிணிகால அளவு

சண்டனென்றவூணதற்கு மாதமொன்று
 சார்பாகநடையதற்கு மாதமாறு
கண்டதொருவரசதற்குப் பஞ்சமொன்று
 கருதவேதுயிலதற்கு வருஷமொன்று
விண்டமரணமதற்கு வருஷமூன்று
 விதித்திடவும்பிணிக்காண காலமீது
கொண்டரசுபகைக்கென்று பத்தாயேதுங்
 குறிகாணப்போகருமே கூறினேரே.

(இ-ள்.) பிணிகால அளவைச்சொல்ல ஊண்பட்சிக்கு மாதம் ஒன்றாகவும் நடைபட்சிக்கு மாதம் ஆறாகவும் அரசுபட்சிக்கு பட்சம் ஒன்றாகவும் துயில்பட்சிக்கு வருஷம் ஒன்றாகவும் மரணபட்சிக்கு வருஷம் மூன்றாகவும் பிணிக்காக விதித்திருப்பதால் அரசுபகைக்கு ஒன்று பத்தாயேதும் தினக்குறிகளை போகர் திருவாய் மலர்ந்தரு ளிய தென்பதாம் எ.று. 143

கூறிடவுஞ்சூனிய முற்றிருப்பதாலே
 குணவுறவேசாந்தி பிரார்த்தனைகள்செய்ய
மீறிடவுமீறாது வந்தநோய்கள்
 விண்டதுவேநீங்கிவிடுஞ் சௌக்கியமாகும்

நேரிடுங்காரியஞ்செய்விக்கும் பலிதமாகும்
நினைத்தபடியஷ்டகன்மம் நெறியாயாடும்
சீறிடவேயோடிடவுஞ் சாந்திகேளு
செப்புவேன்வேளைகண்டு முடித்திடாயே.

(இ-ள்.) முற் கூறியதிற் சூனிய மிதித்திருப்பதாலே அதற்குத் தக்கசாந்தி பிரார்த்தனைகள்செய்ய அந்த நோய்கள் மீறிடாது நீங்கி தேகஞ் சௌக்கியமாகும் தானினைத்த காரியம் செயிக்கும் செய்வினைகள் பலிதமாகும் அஷ்டகருமகிரியையனைத்துமாடும் இவைகட்குற்ற சாந்தி சொல்வதைக் கேட்டு யாதும் பிசகாது காலவேளை யறிந்து செய்யக்கடவாய் எ-று. 144

## சாந்திப் பொதுவிதி

முடிக்கவேசாந்தியது வுரைக்கக்கேளும்
உற்றதொருநோயனைத்தும் விலகுதற்கு
தடிக்கவேசாந்திசெய்யத் திருமங்கே
சண்டாளபீடையது நீங்காதாகில்
நடிக்கவேபாறையினிற் பாசிபற்றி
நாட்டிடல்போல்சுருங்கியது தேகம்நொந்து
துடிக்கவேநோய்மிகுத்த கன்மபீடை
துய்யவேயூணதற்குச் சொல்லக்கேளே.

(இ-ள்.) முடிக்குங்காரியங்கட்குச் சாந்தியானது வுரைக்கக்கேட்பாயாக. அதாவது யாதொரு நோய்கட்கும் விலகும்படியான சாந்தி செய்வாராகில் அந்நோய் நீங்கிவிடும். மீறியும் அச்சண்டாளப் பீடையானது நீங்காவிடின் அது பாறைமீது பாசிபற்றிய வாறுபோலச் சுருங்கி அத்தேகம் நோக்காடாகி துடிக்கும்படியான நோய் அதிகரித்த கன்மபீடை நீங்க ஊண்பட்சிக்கு சொல்லக்கேட்பாய் எ-று.

## ஊண்காலப்பிணிக்குச் சாந்தி

சொல்லவூண்பட்சியினால் வரும்நோய்தீரச்
சுத்தமாய்க்கணபதியை நிறுத்திவைத்து
அல்லலர்தவெண்மலரா லர்ச்சித்தேதான்
அங்கவுபசாரமுட னடிவணங்கி
வெல்ல(ஓம்றீம்ஹரிங் ரீம்சங்உச்ஜயும்)
மௌன(கிலீம்கணபதி சரவசாப)
மல்லறவே(மசிநசி)யென வுமோத
வாயிரத்தெட்டுருவுதான் செபித்திடாயே.

(இ-ள்.) உண்பட்சியினால் வரும் நோய் தீருவதற்குச் சாந்திய வது சுத்தமுள்ளவிடத்தில் ஓர் கணபதியை நிறுத்தி அதற்கு வெள்ளைப் புஷ்பங்களால் அருச்சனை புரிந்து சோடசோபசாரமுடன் பிரார்த்தித்து அடிதொழுது (ஓம்றீம்ஹரிங்ரீம் சங்உங் ஐயும் கிலீம் கணபதி சர்வசாப மசிநசி) என்று 1008 உரு செபித்து மூன்று நாள் இவ்வாறு செய்து வரத் தீரும் எ-று. 146

செபிக்கவேயதன்பின்பு கும்பம்வைத்து
சோபடிநெல்பரப்பி யறுகோணத்தில்
லபிக்ககாரணபஞ்சாட் சரமுங்கீறி
கவில்காரியபஞ்சாட் சரமுங்கூட்டி
தபிக்கவச்சக்கரத்திற் சூலமிட்டு
தான் ஓம் அம் உம் சிங்கி வாசிவென்றேற்றி
சபிக்கவேகும்பத்தில் சலம்நிரைத்து
தண்ணீர்மேல்மாவிலையைத் தங்கவையே.

(இ-ள்.) செபித்தபின் ஓர் கும்பம் வைத்து ஒருபடி நெல்பரப்பி அதில் அறுகோணமிட்டு காரணபஞ்சாட்சரங்கீறி பின்னும் காரிய பஞ்சாட்சரமுஞ் சேர்த்து அச்சக்கரத்திற் சூலங்களிட்டு (ஓம் அம் உம் சிவ சிவா) என்று அக்கும்பத்துள் மாவிலையைச் சொருகிவைத்து தண்ணீரில் நிற்கும்படிச் செய்வாய் எ-று. 147

தங்கவேயதன்மேலும் தேங்காய்வைத்து
சார்பாகநூல்சுற்றி யாடைசாத்தி
அங்ஙனகும்பத்தின் முன்னேயப்பா
அடைவாகவஸ்து சுற்றியுமமைத்து
இங்கிதமாய்ப்பூசைவர்க்க மிகப்படைத்து
இயற்றவே(ஓம்ஐயும் கிலியும்சௌவும்)
பொங்கமாயுருத்தவே (அங்உங்) கென்று
புகல்வர்வபீடைமசிநசியென்றேதே.

(இ-ள்.) அம்மாவிலையின்மேல் ஒரு தேங்காயைவைத்து அதற்கு நூல்சுற்றி ஆடைசாத்தி அக்கும்பத்தின்முன்னே வஸ்துசுற்றி வடை பாயசம் பரமான்னம் பலகாரவர்க்க முதலியதை வைத்து (ஓம்ஐயுங் கிலியும் சௌவும் அங்உங் சர்வபீடைமசிநசி) யென்று செபித்துத் தியானஞ் செய்யவும் எ-று. 148

ஓதவேபாயிரத்தெட் டுருவும்போட்டு
ஓமகுண்டந்தனித்தனியே யிரண்டுவெட்டி
போதவேசமித்துவகை வன்னிமுன்னுளில்
புழைாசதாபனம்நெல்லு தீவளர்த்தி

நீதமாயாவினெய் யாகுதிகள்செய்து
நோாகக்குண்டத்திற் குபாரஞ்செய்
தோதமாயட்சரத்தைச் சொல்லக்கேளு
சுகுணமாய்முதலுரைத்த துருவுபோடே.

(இ-ள்.) பிற்கூறிய மந்திரத்தை 1008-உரு செபித்து ஓமகுண்டம் இரண்டு வெட்டித் தீவளர்த்தி அதற்குச் சமித்துவகை வன்னி முள்ளி தர்ப்பை தானிய மிவைகளைச் சொரிந்து நெய்யினு லாகுதி செய்து மேற்படி குண்டத்திற் குபசாரஞ்செய்து முதலிற் செப்பிய மந்திரத்தை செபிக்கவும் எ-று. 149

கேளப்பாவுருவையா யிரமுமானல்
கெணிதமுடன்பொங்கலிட்டுப் பலியுந்தந்து
ஆளப்பாயெல்லாமக் குடத்திற்போட்டு
அந்நிரையவங்சிரசில் விடுத்துப்பின்பு
வீளப்பாசிவசிவா யெனப்பணிந்து
மீளவுமபிஷேகஞ் செய்யுமப்பால்
வாளப்பாநாளதுதான் பதினென்றுனல்
வாங்கிவிடும்பீடையெல்லா மாறிப்போமே.

(இ-ள்.) முதல் மந்திரம் 5000-ம் உருச் செபித்து அதன் பின் பொங்கலிட்டு பலிதந்து அதையெல்லாம் அக்குடத்திற் போட்டு ள்ந்த சவத்தை அந்நோயாளி சிரசில் விடுத்து அங்கு சிவசிவா யெனப் பணிந்து மீண்டும் அபிஷேக முதலியதைச் செய்து அப்பால் பதினொருநாள் இவ்வாறே முடித்துவா அப்பீடை யனைத்துமாறி தேகம் சௌக்கியமாய்ச் சுகுணப்படுவர் எ-று. 150

மாறிவிடும்வெள்ளியினுற் றகடுசெய்து
மதிலுச்சாடனவெழுத்தை மாறிநீயும்
கோரியேவாலையென்ற தேவிபூசை
குறையவேதப்பாம லியாவும்தீர்த்து
தேறிடவுமுன்றகட்டை யெதிரில்வைத்து
செபியுச்சாட்டனமுருவா யிரத்தெட்டானல்
மீறிடாதங்குதித்த பீடைநீங்கும்
மெத்தவுபசாரஞ்செய் கன்னிகைக்கே.

(இ-ள்.) ஓர்தகடு வெள்ளியினுற் செய்து அதில் உற்சாட்டன வெழுத்தைமாறி யெழுதி வாலிக்கு தேவிபூசை யாவும்வைத்து வகை தப்பாம லியாவுஞ்செய்து அத்தகட்டை தேவிக்கு முன்வைத்து உச்

சாட்டன வெழுத்தை 1008-உருச் செபித்துத் தீர்க்க அங்குறித்த பீடையானவை யனைத்தும் நீங்கிவிடும் அதன்பின்பு ஓர் கன்னிகைக்கு மனம் புளகிக்க உபசாரஞ் செய்யக்கடவாய் எ-று. 151

## நடைகாலப்பிணிக்குச் சாந்தி

கன்னிநடைப்பட்சியினில் வரும்நோய்தீரக்
கணபதியைத்தாபித்துக் குண்டங்கொண்டு
முன்னமேகும்பம்வைத்துச் சமித்துதானும்
ஓதாசுவன்னியுட னுருவிதர்ப்பை
இன்னமுங்கருங்காலி பலாவிளாவும்
இதின்சுப்பல்நெற்பொரியுங் கடலைமொச்சை
சொன்னதுதானொன்றாகக் கலந்துகொண்டு
சூட்டுமேகுண்டத்திற் புகவுந்தானே.

(இ-ள்) நடைப்பட்சியினால் வரும் நோய் தீர்வதற்குச் சாந்தி யாவது ஓர் ஸ்தானத்தில் கணபதியைத் தாபிதஞ்செய்து இரண்டு குண்டம் வைத்து அதில் கும்பத்தைவைத்து சமித்துகளான அரசு வன்னி உருவி தர்ப்பை கருங்காலி பலாவிளாவின் சுப்பல் நெற்பொரி கடலை மொச்சை யாவு மொன்றாய்க் கலந்து அக்குண்டங்களிற் போடவும் எ-று. 152

புகவதிலாவினெய் யிலுப்பைநெய்யும்
புனிதமாயிரண்டொன்றாய்க் கலந்துகொண்டு
அகமகிழவெக்கியத் தாகுதிகள்செய்ய
அங்ஙனேயட்சரத்தைச் சொல்லக்கேளு
மகிழவே (ஓம்றீம்ரீங் அங்உங்ஐயும்)
வதிற் (கிலியுங்கணபதி சர்வபீடை)
நெகிழமசிநசி பதினாயிரஞ்செபித்து
நேர்பொங்கல்பலியுட னுபசரித்தே.

(இ-ள்.) அதில் ஆவினெய் இலுப்பைநெய் இரண்டுமொன்றாய்க் கலந்துகொண்டு அவ்வெக்கியத்தில் ஆகுதி செய்யவும் அதற்கட்சரத்தை வுரைக்குங்கால் (ஓம் றீம் ரீங் அங் உங் ஐயுங்கிலியும் கணபதி சர்வபீடை மசி நசி) என்று 10000-உருவு செபித்து பொங்கலிட்டு பலி முதலியதுங் கொடுத்து உபசரித்து யூகித்திடவும் எ-று. 153

சரிக்கவேகுண்டத்திற் சாம்பலெல்லாம்
தான்வாரிக்கும்பத்திற் போட்டுவிட்டு
தரிக்கநீர்குளிப்பாட்டி சிவசிவாவென்
றங்ஙனேசிவன்பாதந் தொழுதுபோற்றி

விரிக்கவேவிரித்தகடு வடித்துமங்கே
விசிதமாய்த்தம்பனத்தை யெழுதிவிட்டு
பரிக்கவேநடைபீடை பறப்பதற்குப்
பதினொருநாள்செய்துவாப் பணிந்திடாயே.,

(இ-ள்.) அக்குண்டத்தில் அச்சாம்பலெல்லாம் வாறிப்போட்ட பின் அந்நீரை அவாள் சிரசில்விட்டுக் குளிப்பாட்டி சிவசிவாவென்று அச்சிவனது பாதத்தைத் தொழுது வணங்கி ஓர்செப்புத்தகட்டில் நல்லவேளை பார்த்து தம்பன சக்காத்தை வரைந்து அதைப்பூசித்துக் கட்டிவிட நடையின் பீடையானது பற்றுந்து விடும் இப்படிப் பதினொருநாள் செய்யக்கடவாய் எ-று. 154

## அரசுகாலப்பிணிக்குச் சாந்தி

பணிக்கரசுபட்சியினில் வரும்நோய்தீரப்
பாங்காகக்கணபதியை வைத்துப்போற்றி
அணியவேகும்பத்தை வைத்துமுன்னம்
அதன்முகமாய்க்குவாலைதனைப் பூசித்தேதான்
துணிகாமாய்க்குண்டமது விரண்டுவெட்டி
சொல்லவுஞ்சமித்வேகை சுப்பலப்பா
தணியவுமாசுசந் தனமுமாகும்
தன்மையாய் நெற்பொரி காராவினெய்யே.

(இ-ள்.) அரசு பட்சியுனால்வரும் நோய்தீர்வதற்குச் சாந்தியாவது ஓரிடத்தில் கணபதியை நிறுத்திவைத்து எதிரில் கும்பத்தைத் தாபிதஞ்செய்து அவனெதிர்முகமாய் வாலையை ஆவாகனம்பண்ணிப் பூசித்து குண்டம் இரண்டுவெட்டி சமித்துவகைச் சுப்பல்களில் அரசு சந்தனம் நெற்பொரியோடு காராவினெய் சொரிந்து ஓமம் வளர்த்திடவும். எ-று. 155

நெய்யதனிலாகுதியுஞ் செய்தபின்பு
நேராகவுருவையா யிரஞ்செபித்து
வையதனிற்பலிகொடுத்துத் தூபங்காட்டி
வாறியச்சாம்பலெல்லாம் கும்பத்தேற்றி
உய்யவும்நோயாளிச் சிரசில்விட்டு
உருக்கமாய்ச்சிவன்பதத்தைத் தொழுதுபோற்றில்
எய்யவும்வதைக்கின்ற நலிகள் தீரும்
இயல்பாகச்சுவர்னதக டடித்திடாயே.

(இ-ள்.) முற்கூறிய நெய்யில் ஆகுதிசெய்தபின் முன்மந்திரத்தை 5000 உருசெபித்து பலியுங்கொடுத்து தூபதீப நைவேத்தியங் காட்டி அச் சாம்பலையெல்லாம் வாறி அக்கும்பத்திற் போட்டுவிட்டு

அக்கோபாளியின் சிரசில்விட்டு சிவனது பாதத்தைத் தொழுது போற்றிடவும், வதைசெய்யும் கலியானது தீரும் அதன்பின் சுவர்ணத்தடதிடுவாய் எ-று. 159

அடித்தொழுதுமசியெழுத்தை வரைந்துநீயும்
அன்பாகவேழுநாள் பூசித்தேதான்
முடித்திடவும்பீடையெலலாம் நீங்கும்பாரு
முக்கியமாய்ச்சிவன்கிருபை யிருக்கவேண்டும்
கடித்திடவுமவர்பதத்தைத் தொழுதுபோற்றி
காளுமேவிற்றிருப்பர் நன்மையாக
தடித்திடுமப்பீடையது நீங்குமங்கே
சாற்றினர்போகருமே சார்பாய்த்தானே.

(இ-ள்.) அச் சொர்ணதகட்டை யடித்ததில் மசியென்னுமெழுத்தை நீயெழுதி அன்புடன் முறையே ஏழுநாள் பூசித்து முடிந்தவுடனே பற்றியிருந்த பீடையெல்லாம் நீங்கும் காணக்கடவாய் முக்கியமாய் சிவனது கிருபாகடாக்ஷம் இருக்கவேண்டும் ஆகையால்நெஞ்சம் நெக்குருகி பரமசிவனது பாதாரவிந்தத்தை யேந்தித்தொழ உண்டான பீடையும் தொலைந்து எந்நாளும் நன்மையாக வாழ்வார்களென்று போகரும் அநுகூலமாகவே சொல்லியருளினர் எ-று. 157

## துயில்கணப்பிணிக்குச் சாந்தி

சாருதுயில்பட்சியினில் வரும்நோய்தீரச்
சாந்தியுரைத்திடக்கேளீங் கானைவைத்து
கேரிலங்குவைப்படிநல்லாம் வைத்துவங்கே
நிலவரமாய்வாலையின்முன் கும்பம்வைத்து
ஓரிடமாயோமகுண்ட மழுவும்வெட்டி
யொக்கவுஞ்சமித்துவகை யுரைக்கக்கேட்டு
தேரிடவுமாசுவத்தி யித்திவன்னி
திகழ்புன்னைபலாயுருவி சுள்ளியாமே.

(இ-ள்.) துயில்பட்சியினால்வரும் நோய்தீர்வதற்குச் சாந்தியாவது ஓரறையில் ஐங்கரனைத் தாபிதஞ்செய்து அதற்கு வைக்கும்படியான பூசை நைவேத்தியம் வைத்து அதன்முன் வாலையை நிருத்தி நேர்முகமாய்க் கும்பம்வைத்து அங்ஙனே ஓமகுண்டம்வெட்டி சமித்துகளாகிய அரசு அத்தி இத்தி வன்னி புன்னை பலா நாயுருவி சுள்ளிகளென்பதாம்!எ-று. 158

ஆமதுவும்நவதான்யம் பொரியுங்கூட்டி
நன்மையாமாவினெய் யிலுப்பைநெய்யும்
நேமமுடன்றேங்காய்நெய் கலந்துமூன்றும்
நெருப்பில்விடுந்தர்ப்பையின லுருவாமட்டும்

நாமதுவ் (ஓம்ரீம்கிலியும் ஐயும்சௌவும்)
நாட்டிடு (ஹரீம் அங்உங்சிவாயா) வென்று
தாமதில் (சுவர்பீடைமசிநசி) யெனவும்
தானெழுபதினாயிர முருவுமேற்றே.

(இ-ள்.) அச்சுள்ளிகளோடு நவதானியமும் நெற்பொரியுங்கூட்டி ஆவினெய், இலுப்பைநெய், தேங்காய்நெய் மூன்றுங் கலந்து நெருப்பில் தர்ப்பையினால் உருவுபோடுமளவும்ஆகுதிசெய்துவரவும் இதற்கு மந்திரம்: ஓம் ரீம் கிலியும் ஐயும் சௌவும் ரீம் ஹரீம் அங் உங் சிவாயா சர்வபீடை நசி மசி என்று 7000-உரு செபஞ்செய்துவரவும் எ-று.

ஏற்றுமேகுண்டமொன்றில் தம்பனத்தால்
ஈதன்றிமற்றொன்றிற் பேதனத்தால்
போற்றியேவித்துவே ஷணத்தால்மூன்றில்
பொல்லாதுநான்கிலிடு பேதனந்தான்
சாற்றவும்பலியுடனே தூபங்காட்டித்
தலமானகுண்டத்தில் சாம்பல்வாறி
நாற்றிசையிற்கும்பத்திற் போட்டுமூழ்க
நற்சிவனுக்கபிஷேகம் நாட்டிச்செய்யே;

(இ-ள்.) ஒரு குண்டத்தில் தம்பன மந்திரமும் மற்றொரு குண்டத்தில் பேதனமந்திரமும் வேறொரு குண்டத்தில் வித்துவேஷண மந்திரமும் நாலாவது குண்டத்தில் வேண்டும் பேதன மந்திரமும் செபித்து தூபதீப நைவேத்தியந்தந்து அக்குண்டங்களில் அச்சாம்பலெல்லாம் வாறிப்போட்டு அக்கும்பத்தில் விடுத்து அந்நோயாளியை குளிப்பாட்டி சிவனுக்கு அபிஷேக அர்ச்சனைகள்புரிந்து தொழுதேற்றவும் எ-று. 160

நாட்டியேரவிமதியுஞ் சேர்த்திடித்து
நற்றகட்டிற் கீறுமுச்சாடனத்தை
தாட்டியாய்ப்பிணியாளன் தனக்குக்கட்ட
தாண்டிவிடும்பீடையெல்லாம் தோஷம்நீங்கும்
பூட்டிடவும்கன்னிகைக் குபசரித்து
புகழ்பெரியமறையவருக் குபசாரஞ்செய்து
கேட்டிடவும்போகர்சொல்லும் வாறுபோலக்
கெணிதமாய்மண்டலந்தா னியற்றுவாயே.

(இ-ள்.) வெள்ளியும் செம்பும் ஒன்றாகச் சேர்த்துருக்கித் தகடடித்து உச்சாடன சக்கரத்தையெழுதி அவ்வியாதியஸ்தனுக்குக் கட்டவும் அவனது பீடைநோய் தோஷமியாவும் வொழிந்துவிடும் அங்குவோர் கன்னிகைக்கு உபசாரஞ்செய்வதோடு பிராமணருக்கும் உபசாரம் செய்யும்படியாய் போகர் சொல்லியவாறு ஓர் மண்டலம் செய்துவரக் கடவாய் எ-று. 161

## மரணகாலப்பிணிக்குச் சாந்தி

இயல்மரணப்பட்சியினில் வரும்நோய்தீர
இதில்வருத்தமெத்தசிவன் கிருபைவேண்டும்
செயலாகக்கணபதியை நிருத்திப்போற்றி
சேரவேவாலையிடங் கும்பம்வைத்து
மயலாகவோமகுண்ட மெட்டும்போட்டு
வாகாச்சமித்துவகை சொல்லக்கேளு
சுயமாகவத்தியித்தி யுருவிவன்னி
தொடர்கருங்காலிமாவின் சுப்பல்சேரே.

(இ-ள்.) மரணப்பட்சியினால் வரும்நோய் தீர்வதற்குச் சாந்தி யாவது இந்நோய் தீர்வது வெகு கடினமாதலால் சிவனது கிருபை யிருக்கவேண்டியது. அன்றியும் ஓரிடத்தில் கணபதியை ஸ்தாபித்து கொண்டாடித் தொழுதுபோற்றி அதினருகில் வாலையிடங் கும்பம் வைத்து எட்டு ஓமகுண்டம் வெட்டி சமித்து வகைகளான அரசு அத்தி இத்தி நாயுருவி வன்னி கருங்காலி மா முதலிய சுப்பல்கள் சேர்த்திடுவாய் எ-று. 162

சேர்க்கவே நெல்லிசுப்பல் பூவரசன்சுப்பல்
செயவாக நெற்பொரியும் நவதான்யங்கள்
ஏர்க்கவே செம்மறிநெய் மேதைநெய்யும்
இலுப்பைநெய்யும் புன்னைபுங்கன் வேம்பினெய்யும்
தீர்க்கவே வேசரிநெய் யன்றிநெய்யும்
திரமாக வெக்கியத்திற் செலுத்திப்பின்பு
ஆர்க்கவே கும்பமெட்டு கன்மமெட்டு
ஐம்பதினுயிரஞ்செபமு முருவும்போடே.

(இ-ள்.) முற்கூறிய சுப்பல்களோடு நெல்லிசுப்பல் பூவரசன் சுப்பல் நெற்பொறி நவதானியம் சேர்த்து செம்மறியாட்டு நெய் எருமை நெய், இலுப்பைநெய், புன்னைநெய், புங்கநெய், கழுதைநெய், பன்றி நெய் ஆக எட்டு அவ்வெக்கியங்களிற் செலுத்தி அக்கும்பங்கள் எட்டுக்கும் கன்மங்கள் எட்டாதலால் ஐம்பதினுயிரம் உரு செபஞ் செய்யவும் எ-று. 103

உருவாகப் பொங்கலிட்டுப் பலியுந்தந்து
உள்ளேரிந்த தாம்பரைக் கும்பத்திலிட்டு
தருவாகநின்று சிவனடிபணிந்து
தண்ணீரை யவன்சிரசிற் றளாவிட்டு

மருவாயோர்மண்டல மிவ்வாறுசெய்ய
 மாறிவிடுந்தோஷமெலாம் பறந்துபோகும்
குருவாகப்போகர்சொன்னப் படியேசெய்ய
 குணமாகும்பீடைநோய் குறைவிலாதே.

(இ-ள்.) அதன்பின் பொங்கலிட்டு பலி முதலியதுந் தந்து அதிலெரிந்த சாம்பலை வாரிக் கும்பத்திற்போட்டு சிவனைத் தியானித்து அவன் சிரசில் அத் தண்ணீரைப் புரோக்ஷித்து இவ்வாறொரு மண்டலஞ்செய்ய எல்லாத் தோஷங்களும் அற்று மாறிவிடும் குருமுகூர்த்தமா யெழுந்தருளிய போகர் சொல்லியபடி செய்ய சர்வ பீடை நோய்களும் நீங்கும் எ-று. 164

---

# ஆரூட சிந்தனைப்படலம்

## அசுவணியின் பலன்

குறைவறவே யசுவணிதா னுதயமாகில்
 கோகனக பொருள்வருத்துஞ் சனவருத்தாம்
நிறையவே நினைத்தபொருள் கையிற்சேரும்
 நீங்கியதோர் பகைஞருமே வுறவுமாவர்
அறையவே மங்களசோ பனங்கள்கூடும்
 அங்குள சிந்தனைமஞ்சள் நிறமுமாகும்
இறையவனுப் பட்சிபகை யில்லாவிட்டால்
 எட்டுநாளையில் சிக்குமின்பமாமே.

(இ-ள்.) ஒருவர் ஆரூடங் கேட்டுவந்த தினத்தில் அசுவனி நட்சத்திர முதயமா யிருக்கின் போனபொருள் கையில் வந்து சேரும் நினைத்தபொருள் கைகூடும் நீங்கியது பகைஞர் உறவாவர் சனவருதது முண்டாம் சுப மங்கள சோபனமுங் கூடும் போன பொருள் மஞ்சள் நிறத்தை யுடையதாகும் அதிலும் பட்சிபகை யில்லாவிடின் அப்பொருள் எட்டு நாளையில் சிக்கும் உத்தமமென்பதாம் எ-று. 165

இன்பமறவுண்பகையே யாகுமாயின்
 ஏற்கவேவிலைதாழ்ந்த சொத்துமாகும்
வன்மமறக்கிழங்குவகை யதனைக்கூறு
 மக்களுடன்பிறர்வருவார் செலவுமாகும்
தன்மையாய்ப்பின் னுதவி கிஞ்சிற்றில்லை
 சஞ்சலங்கள்மனதிற்குத் தோன்றுமங்கே

அன்புடனேயிப்பலனுட் பதினேந்திற்குள்
அகப்படவும்நன்மைதன்மை யறிகுவாயே.

(இ-ள்.) அப்போது பட்சியானது ஊண்பகையா யிருக்குமாகின் அது விலைதாழ்ந்த பொருளாகும் அதினும் கிழங்குவகை யென்று சொல்லப்படும் மக்கள் சுற்றம் பிறர்வந்து சேர்வர் செல வதிகரிக்கும் பின்னு முதவி சற்றேனுமில்லை மனதிற்குச் சஞ்சலங்கள் தோன்றும் இப் பலன் பதினேந்து நாளினில் அகப்படும் பொருள் நன்மை அறியப்படும் எ-று. 166

அறியவேயரசுபகை யானலங்கு
ஆனகைப்பொருட்செலவாம் வருத்தொன்றில்லை
குறியதுவுங்கிளைஞர்களுஞ் சேதமுண்டாம்
கோபமுடன்பிரபுபகை பெரிதாம்பாரு
முறியவேபெண்டுபிள்ளை பகையதாகும்
முற்றுமேவிலையிலாப் பொருளுமாகும்
நெறியதாயிருபதுநா ளதனிற்குள்ளே
நீங்கியதும்வந்தணுகும் நேரிற்றானே.

(இ-ள்.) அவ்வேளைப் பட்சியானது அரசு பகையதானல் தன் கைப்பொருள் செலவாகும் வருத்து யாதொன்றுமில்லை பிள்ளைகள் சேதமாகும் பிரபுக்கள் பெரும் பகையதாவர் தனது இரண்டு பிள்ளைகளும் பகையாவர் அது விலையிலாப் பொருளாகும் அப் பலன் இருபது நாளிற்குள் கைவிட்டு நீங்கிய சொத்து கிடைக்கும் எ-று. 167

நேரினிலூணரசு பகையதாகில்
நினைத்தபொருளொன்றில்லை நீளுதற்கு
கூறியவப்பொருள்கைக்குச் சிக்கொணுது
கூடுவதுவருத்தில்லைச் சேதமாகும்
கூறியதுர்நோய்மிகும்பின் பகையுமுண்டாம்
தீதாகும்பலிதமில்லை செப்பிடுங்கால்
கோரியதிமுப்பதுநா ளதனிற்குள்ளே
கூடிடாநன்மையில்லை துன்பமாமே.

(இ-ள்.) அப்பட்சி ஊணரசு பகையதாகில் நினைத்தபொருளொன்றேனு மில்லையாதலால் அப்பொருள் கைக்குட் சிக்குவது கடினம் கூடிவரும் வருத்தில்லை சேதமுண்டாகும் துர்நோ யதிகரிக்கும் அதோடு பகை பொல்லாங்காய் யாவும் பலித மாகாது இதை யெடுத்துரைக்க நினைத்த விஷயமானது முப்பது நாளையிற்குள் நன்மை தன்மை கூடும் கூடாதென்று தெரியவரும் எ-று. 168

ஆமப்பாவொன் றுமில்லை பகையில்லாவிட்டால்
ஐந்துதினத்தினில் வருத்துமதிகமுண்டாம்
நாமப்பா நினைத்ததெல்லாங் கையேகூடும்
நன்றானகாரியங்கள் செய்யவாய்க்கும்
ஏமப்பாதங்கமென்றுஞ் சொல்லலாகும்
இன்பமனமகிழ்ச்சி சோபனங்களெய்தும்
தாமப்பாவென்னலர்க ளுறவுமாவர்
சந்ததமுமுறிவின்பலன் சாற்றொணாதே.

(இ-ள்.) ஆம் யாதொன் றுமின்றி பட்சிவகை இல்லாவிடின் ஐந்து தினத்தில் அதிகவருத்துண்டாய் நினைத்ததெல்லாங்கைகூடும் நற்காரியங்களுஞ் செய்யவாய்க்கும் அப்படிபோனபொருள் தங்கமென்றுஞ் சொல்லப்படும் இதில் இன்பம் மனமகிழ்ச்சி சோபன முதலிய நேரும் பகைவருறவாவர் ஆதலால் உறவின்பலனைச் சொல்லவொண்ணாது எ-று. 169

பரணியின் பலன்

சாற்றவும்பரணிதா னுதயமாகில்
தன்மையாய்க்கருஞ்சிவப்பு நிறமுமாகும்
ஏற்றவும்நிலங்கள்வரு முறவோர்சேர்வர்
இதில்வருவர்தூரதேசம் போனோர்மீண்டு
ஆற்றவும்மன்னருற வரவரங்கு
அறிவையருங்கர்ப்பணியு மாவர்பாரு
போற்றவும்மங்கள சோபனங்கள்கூடும்
பொருட்சேதிதினம்பத்திற் கேட்கலாமே.

(இ-ள்.) பரணி நட்சத்திர முதயமாயிருக்கின் போனபொருளானது கருஞ்சிவப்பு நிறமானது நிலங்கள் சேரும் உறவினர் வருவர் தூரதேசம்போனவர் மீண்டுவந்து சேர்வர் அரசர் உறவாவர் தன் மனைவியர் கர்ப்பணியாவர் மங்களசோபன சுபமுகூர்த்தங்கள்கூடும் இச்சேதி பத்து தினத்திற்குள் கிடைக்குங் கிடைக்காதென்று தெரியவரும் எ-று. 170

கேட்கவேயூண்பகையு மாகாதங்கே
கேள்சிவந்தகறுப்புவிலை யதிகமாகும்
வாட்கைசோபனக்குறைவு மானபங்கம்
வந்தெய்தும்பூமியினில் வருத்துங்கொஞ்சம்
வேட்கையாயிருந்தாலும் பகையதாவர்
வீடுவிட்டுபோனவர்க ளிடரில்நிற்பர்
மீட்கவேபசிக்குதவும் புசிப்புமில்லை
மிகவரும்பார்நாள்மூன்று வஞ்சிற்குள்ளே.

(இ-ள்.) பட்சியானது ஊண்பகையா யிருக்கிலாகாவாம் போன பொருள் சிவந்தது அல்லது கறுப்பாய் விலையுயர்ந்ததாயிருக்கும் சோபன சுபகாரியங்களில் குறைவுபட்டு மானபங்கமடைவர் பூமியில் விளைவு வருமூனங் கொஞ்சமாய் தான்சும்மா யிருக்கினும் பகைப்படு வர் வீடுவிட்டுப் போனவர்கள் சங்கடத்திலிருப்பர் தன்பசிக்குதவும் புசிப்பு கிடைப்பதில்லை இது மூன்று அல்லது ஐந்து நாளையில் வந்து சேரும். எ-று. 171

உள்ளதுவுமரசுபகை யானலங்கு
  ஒக்கவேநினைத்தபொருள் கிடைப்பதில்லை
கள்ளமறப்பொருள்வரவு முறவுமில்லை
  காசினியில்மன்னருற வாவதில்லை
எள்ளளவுந்தூரவழிப் போனார்மீண்டு
  எப்பொழுதும்வருகுவது மில்லையில்லை
கொள்ளவேபொருட்சேத மாகுமங்கே
  குவிந்துவரவிருபதுநாட் கூறிடாயே.

(இ-ள்.) அரசுபகையாகிய பட்சியாயிருக்கின் தானினைத்த பொருள் கிடைக்கமாட்டாது உறவுமுதலிய சுற்றங்களு மற்றுப்போம் நெடுந்தூரம் போனவர்கள் மீண்டும் எக்காலத்திலும் வரமாட்டார்கள் திரவியச்சேதமாகும் இவை வந்து சேர்வதற்கு இருபதுநாட் செல்லும் என்று சொல்லக்கடவாய் எ-று. 172

கூறவுமூணரசுபகை யில்லாவிட்டால்
  கொற்றவனேபலனுண்டா யாவுஞ்சேரும்
நேரவுஞ்சோபனங்கள் சுபமுங்கூடும்
  நெறியாகத்தன்புதல்வன் றாணியாள்வன்
தேறவும்வினைசனிப்ப தில்லையங்கு
  தினமகிழ்ச்சிசந்தோஷ மதுவுஞ்சேரும்
கோரவேநாளேழிற் கூடும்பின்பு
  குணம்பெருஞ் செல்வமெனக் கொண்டுதேரே.

(இ-ள்.) ஊணரசுபகையான தில்லாவிடின் வெகு பலனுண்டாய் பசுவுஞ்சேரும் சோபனமுதலிய சுபகாரியங்களும் நேரும் தனக்குப் பிறந்த பிள்ளையானவன் இத்தரணியையாள்வன் யாதொருவினை வியாதிகளும் சனிக்கமாட்டாது அனுதினமும் அகமகிழ்ச்சி சந்தோஷத்தை படைவன் அப்பொருள் ஏழுநாளில் கூடிவரும் குணம் பெருகி செல்வத்தைபடைவன எ-று. 173

கொண்டுமே வூணாசுப்பகையதாகில்
 கூடிவரமாட்டாது பகையதாகும்
அண்டியேமனம்போல வருவதில்லை
 அதிற்கனவுகண்ட காட்சிபோலாகும்
விண்டுமேபோனவர்கள் மீளமாட்டார்
 மேல்நினைத்தகாரியமு மணங்கூடாது
துண்டிடவேமரித்துவிடும் பிறந்தபிள்ளை
 தொலையுமேநாளைந்திற் றுடுக்காய்த்தானே.

(இ-ள்.) முன் வூணாசு பகையுள்ளதாகில் யாதொன்றுங்கூடி வரமாட்டாது. பகையதிகரிக்கும், தன்மனம்போல நினைத்தது வர மாட்டாது யாவுங் கனவுகண்ட காட்சியைப்போலாகும். தூரதேசம் போனவர்கள் மீண்டும் வரமாட்டார்கள் நினைத்தகாரியம் முடியாது. சுபகாரியமணமும் நிறைவேறாது வயிற்றிற்பிறந்த பிள்ளையானது ஐந்துநாளிற்குள் மரித்துவிடும் எ-று. 174

## கிருத்திகையின் பலன்

துடுக்காககிருத்திகைதா னுதிக்குமாகில்
 சூழவேநினைத்தபொருள் கறுப்பதாகும்
அடுக்காகப்பெண்பெருவள் செலவுநேரும்
 அங்ஙனேபொருள்வருத்த மில்லைப்பாரு
தொடுத்துமேவுடலில்வந்த பிணிதீராது
 சொல்லவும்பிரபுவுற வாகாதங்கே
விடுத்திடவேநட்பாவார் போலேசுற்றம்
 விலகுவர்நாட்பத்தில் வெறுப்பாய்த்தானே.

(இ-ள்.) கிருத்திகைநட்சத்திரமுதயமாயிருக்கின் தான்நினைத்த பொருள் கறுப்புநிறமாகயிருக்கும் பெண்பிள்ளைகளைப் பெறுவள் செலவுநேரிடும் பொருள்வருத்த யாதேனுமில்லை தனக்குவந்த நலி தீரமாட்டாது. பிரபுக்கள் உறவு நீங்காது சுற்றங்களானவர் நட்புள்ள வர்போலிருந்து பத்துநாளிற்குள் வெறுப்பாகி விலகிவிடுவர் எ-று.

வெறுப்பாயாகயூண்பகையு முற்றிருக்கில்
 மேவியேநினைத்தபொருள் கல்மண்ணென்பாய்
அறுப்பாகவுடலுயிரு மிளைக்குந்தேகம்
 அன்னமுண்பதில்லை பகையணுகும்பாரு
முறப்பாகப்பிறந்தபிள்ளை யிறந்துபோகும்
 முற்றுமேயகன்றவர்கள் மீள்வதில்லை
சிறப்பாகப்பதினைந்து நாளிற்குள்ளே
 தியங்காதமணங்கூடத் தியங்கும்பாரே.

(இ-ள்.) ஊண்பகையிருக்குமாகில் தானினைத்த பொருள் கல் அல்லது மண்ணென்று சொல்லுவாய் உடலுயிர்பதைக்கும் தேக மிளைக்கும் உண்பதற்கு அன்னமறிதாகும் பகையானதணுகும் பிற ந்தபிள்ளையான்து மாண்டுவிடும் தூரவழிபோனவர்கள் மீண்டு வர மாட்டார் பதினைந்துநாளிற்குள் தேங்கிக் கலங்காத திடசித்தர்மனங் கூடத் தியங்கிச் சஞ்சலப்படுவது திண்ணம் எ-று. 176

திபங்கவேயரசுபகை யாயிருக்கின்
சென்றபொருள்கரியெருவு செப்பலாகும்
பயங்கொளவேயூர்வழிப் போனோரங்கே
பரிந்துமேவரமாட்டார் பகருங்காலில்
நயங்கொளவேநித்தபொருள் கைகூடாது
நம்பவுமனதுதுக்க மகிழ்ச்சியில்லை
மயங்கவேநாளெட்டிற் பலிதமாகும்
மாறுதுவரசுபகை வாட்டுமென்னே.

(இ-ள்.) அரசு பகையாயிருக்குமாகில் சென்றுவிட்ட பொருளா னது கரி அல்லது எருவென்று சொல்லவும் வெளியிற் போனவர்கள் அவர் மறுபடியும் வரமாட்டார்கள் நினைத்தபொருள்கைகூடாது மன தில் துக்கமுண்டாகும் அகமகிழ்ச்சியிராது இவைகள் எட்டுநாளிற் குள் பலிதமாகும் இவ்வரசு பகைவாட்டிவிடு மென்பதாம் எ-று. 177

வாட்டிடுமூணரசு பகையுமாகில்
மனதினிலேநினைத்தபொருள் பொற்கறுப்பாம்
தாட்டியாய்ச்சோபனங்கள் நிறைவேறாது
தானினைத்தகாரியமுங் கைகூடாது
ஓட்டியேகொல்லுவிக்கு முயிரைத்தானும்
உறவுவருத்தொன்றுமில்லை செலவுமெத்த
கூட்டியேபகையாவர் நாளைந்திற்குள்
குணமில்லையிவன்பிழைப்ப தரிதாம்பாரே.

(இ-ள்.) ஊணரசுபகையா யிருக்குமாகில் தன்மனதில் நினைத்த பொருள் மஞ்சள்நிறம் அல்லது கருப்புநிறமென்று சொல்லவும் சுப காரிய சோபனங்கள் நிறைவேறமாட்டாது நினைத்தகாரியங்கள் கை கூடவுமாட்டாது தன்னுயிரை மாய்த்துவிடும் உறவுகளும் ஒன்றேனு மில்லை செலவதிகரிக்கும் யாவரும் பகையால் ஐந்துநாளிற்குள் இக் குணம் வாய்க்கும் இவன் பிழைப்பதரிதாம். 178

பிழைப்பதுவுமரசுபகை யில்லாவிட்டால்
பேசவுங்கறுப்புவிலை யுயர்ந்ததாகும்
அழைக்கவேபோனவர்கள் வந்துசேர்வர்
அதில்நட்புமில்லை மனத்துயரமில்லை



உழைக்கவேமணங்கூடும் வருத்தமுண்டாம்
உடன்கூடியிருப்பர்பின்பு பிரிந்துபோவர்
தழைக்கவேநாளைந்திற் பலிதமாகும்
தானினைத்தபடியாகா தடையுண்டாமே.

(இ-ள்.) அரசுபகையில்லாவிடின் தானினைத்தது விலையுயர்ந்த தாயும் கறுப்புநிறமாயு முள்ளவை தூரவழி சென்றவர்கள் துரிதத்தில் வந்து சேர்வர் நட்டானதுமில்லை மனத்துயரமுமில்லை கலியாணங்கூடும் வருத்தமிகரிக்கும் தன்னோடு சிநேகித்திருந்தவர்கள் பகையாகிப் பிரிந்து போவர் இது ஐந்துநாளையிற் பலிதமாகும் தான்நினைத்த காரியங்கள் தடையாகிவிடும் எ-று. 179

## உரோகணியின் பலன்

தடையாகாது ரோகணிதானுதயமாகில்
தானினைத்தபொருள் வெள்ளைப்பூவுமாகும்
இடையிலேமணஞ்செய்ய நன்மையுண்டாம்
இடைந்தோடிப்போனவர்கள் வருவாரிங்கே
அடைவாகப்போனது கைவசமேயாகும்
அங்ஙனேமனத்துயர மணுவுமில்லை
கடையிலேநாளேழில் நினைத்ததியாவுங்
கைகூடுமோலைவருஞ் சேதியென்னே.

(இ-ள்.) உரோகணி நட்சத்திரம் உதயமாயிருக்கின் தானினைத்த பொருளாது வெண்ணிறமாகிய புஷ்பமென்னவும் மணம்புரிய வெகு நன்மையுண்டாகும் இடைஞ்சலாய் ஓடிப்போனவர்கள் வந்துசேர்வர் கைவிட்டுப்போனபொருள் கிடைக்கும் மனத்துயரமானது அணுவேனு மில்லாதிருக்கும் இவையனைத்தும் ஏழுநாளையில் நினைத்தபடி கைகூடும் தூரத்திலிருந்து சேதியுரைக்க ஓலையும்வரும் எ-று. 180

சோதிக்கவூண்பகையா யிருக்குமாகில்
சென்றபொருளழுக்கு வெள்ளையாயிருக்கும்
சோதிக்கமணங்கூடு முறவுஞ்சேரும்
தொடுவழக்குமுண்டாகும் துயரமில்லை
வாதிக்கத்தேகத்திற் பீடையுண்டாம்
வருத்தபலனில்லையென வழுத்தலாகும்
பாதிக்கப்பெண்பெறுவள் வாலையுண்டாம்
பயமில்லைமனமகிழ்ச்சி யற்றுப்போமே,

(இ-ள்.) ஊண் பகையா யிருக்குமாயின் கைசோர்ந்த பொருள் அழுக்குள்ளதாய் வெண்மையாக யிருக்கும் கல்யாணங் கைகூடும் உறவின் முறையார் சேர்வர் தொடுவழக்குகள் நேரிடும் அதிற் துயர மில்லாதிருக்கும் தேகத்திற் பீடையுண்டாகும் அது வருத்தமும் பலனற்றனவாம் பெண்ணைப் பெறுவள் மாலை சேரும் பயமில்லை மன மகிழ்ச்சி யற்றுவிடும் எ-று. 181

அற்றிடவேயரசுபகை யாயிருக்கின்
அதினினைத்தபொருள் கறுப்புவெண்மையாகும்
பற்றிடவேகூடிவரப் போவதில்லை
பலதுன்பவினைசூழ்ந்து துயரஞ்செய்யும்
உற்றிடவேபொருட்சேத மதிகரிக்கும்
உறவில்லைபகையுண்டா யொடுங்கச்செய்யும்
சுற்றிடவேயரசுபகை பொல்லாதங்கே
சூழவொன்றும்வருவதில்லைப் பிணியுமாமே.

(இ-ள்.) அரசு பகையா யிருக்குமாயின் அதில்நினைத்த பொரு ளானது கறுப்பும் வெண்மையா யிருக்கும் யாதொன்றுங் கூடிவர மாட்டாது துன்பவினை யதிகரித்துத் துயர முண்டாக்கும் பொருட் சேத மிகுதியாகும் உறவினர்கள் விலகுவர் பகையான துண்டாகி யொடுக்கி வைக்கும் இவ்வரசு பகையானது பொல்லாதாதலால் வருத் தொன்றுமில்லது பிணி யுண்டாக்கும் எ-று. 182

பிணியாகுமுணரசு பகையுமாகில்
பேசவும்நினைத்தபொருள் சரியேயாகும்
அணியாகப்பலனென்று மில்லையங்கே
அடுத்தவினைதீராது பழிசெய்விக்கும்
தணிவாகப்பிறருதவி யொன்றுமில்லை
சடமலைந்துபோவதல்லால் பலனுமில்லை
துணிவாகபகைத்தபேர் வெல்வர்முன்பு
துடியாகப்போகர்சொன்ன துறையிதாமே.

(இ-ள்.) ஊணரசு பகையாயிருக்குமாயின் நினைத்தபொருள் சரி யாக விருக்கும் யாதொரு பலனுமில்லை வினையானது தீராதுபழியை வருவிக்கும் பிறருதவியில்லை வீணாய்த் தேகமான தலைந்துபோவதல் லாது வேறொரு பலனுமில்லை பகையாளர் வெல்வர் இவ்வாறு போகர் சொல்லிய வாக்கு ஈதென்பதாம் எ-று. 183

துரையாகவூணரசு பகையில்லாவிட்டால்
சொல்லும்பொருள்விலையுயர்ந்த வெண்மையாகும்
விரைவாகமணஞ்செய்ய நன்மையாகும்
வெகுதூரம்போனவர்கள் வந்துசேரும்

தரையாகச்சென்றபொருள் தானேசேரும்
 தன்பகைஞுருறவாமுட் பகையும்போச்சு
திரையாகநாளேழிற் பலிதமாகும்
 சீராகநினைத்தபடி முடியுந்தானே.

(இ-ள்) ஊணரசு பகையொன்று மில்லாவிடின் போனபொருளா னது விலையுயர்ந்த வெண்மை நிறமானது விவாகஞ்செய்ய வெகு நன் மையுண்டாகும் வெளியிற் [illegible]ரதேசம் போனவர்கள் மீண்டு வந்து சேர்வர் பூமியிற் கைசோர்ந்துபோனபொருள் தானேகிட்டும் பகைஞு ருறவாவது மன்றி உட்பகை யாவு மற்றுவிடும் இது ஏழு நாளிற் பலிதமாகும் யாவும் நினைத்தபடி நிறைவேறும் எ-று. 184

## மிருகசீரிடத்தின் பலன்

முடிக்கவேமிருகசீ ரிடமுதிக்கின்
 முன்னினைத்தபொருளிலையின் பச்சையாகும்
தடிக்கவேநினைத்தபடி முடியாதங்கே
 தப்பிவழிப்போனவர் சஞ்சலத்தால்மாள்வர்
நடிக்கவேமணங்கூடா தூண்பகையால்
 நாடோறும்வரும்பயனு மொன்றுமில்லை
மடிக்கவேநாட்பத்தில் தீங்குமுண்டா
 மபஜெயமேவந்தெய்துந் தீமையாமே.

(இ-ள்.) மிருகசீரிட நட்சத்திர முதயமாயிருக்கின் தானினைத்த பொருள் இலைப்பச்சை நிறமாயிருக்கும் யாதொன்றும் நினைத்தபடி முடியாததாம் வழிப்பிரயாணம் போனவர்கள் சஞ்சலத்தால் மாள்வர் மணமானது கூடாவாம் ஊண் பகையா யிருக்கின் தினந்தோறும் வரும்பலன்க ளொன்றேனும் வராது பத்து நாளையில் தீங்கானதுண் டாகி அபஜெயப்பட்டு தீமையே யணுகும் எ-று. 184

தீமையேயரசுபகை யிருக்குமாயின்
 செயமென்பதொன்றுமில்லை வருத்துமில்லை
தாமதத்திலோலைவரும் பொருளுஞ்சேரும்
 சங்கடமேவந்தெய்து தவிர்ப்பனங்கே
ஊமைபோலூணரசு பகையில்லாவிட்டால்
 ஓதுமனத்துயரம்வெகு கொடுமையில்லை
சேமமாய்நாள்பத்திற் பலனைக்காட்டும்
 செய்யவும்நன்மையில்லை துன்பமாமே.

(இ-ள்.) அரசு பகையா யிருக்குமாயின் செயமான தொன்று மில்லாது பொருள் வருத்துமில்லையாம் தூரத்திலிருந்து தூதோலை

சேதிவரும் தனஞ் சேதமாகும் சங்கட மதிகரித்து தவிர்க்கச் செய்யும் ஊணரசு பகையில்லாவிடின் மனத்துயரம் கொடுமை யென்பதொன்றுமில்லை இது பத்து நாளையிற் பலனைக் காட்டும் இதில் நன்மையின்றி துன்பமே யதிகரிக்கும் எ-று. 186

## திருவாதிரையின் பலன்

துன்பமறவாதிரையு முதிக்குமாயின்
சூழவேநினைத்தபொருள் நீலவர்ணம்
இன்பமாய்ப்பொருளது கைவசமேயாகும்
என்மக்காளூண்பகைதா னிருக்கக்கூடா
வன்மமுறவூர்ப்பயணம் போனார்மீண்டு
வாரார்களரசு பகையாயிருக்கில்
தன்பொருட்சேதமுறவு பகையுமாகும்
தனஞ்சயனேயிருவர்பகை யதுகூடாதே.

(இ-ள்.) திருவாதிரை நட்சத்திர முதன்மையா யிருக்கின் தான் நினைத்த பொருளானது நீலநிறமானவை அப் பொருளானது கை வசப்படும் அப்பட்சி ஊண் பகையாதிருக்கில் வெகுநன்மை அவ் வூண்பகை யுதித்திருக்கில் ஊர்ப்பயணம் போனவர்கள் மீண்டும் வந்து சேர்வது கடினம் அரசு பகையா யிருக்கில் பொருட் சேதம் உறவு பகையாம் எ-று. 187

கூடாதூணரசுமித் துருவாய்நிற்கில்
கொடுமையாம்வருமரணங் குறைவுமாகும்
நாடார்களுறவினர்கள் சேர்வாங்கு
நன்மையாய்ப் பிறவுபகாரஞ்செய்வன்
வாடாதபரதேசம் போகநன்று
மணஞ்செய்தல்சோபனங்கள் வந்துகூடும்
தேடாதுசேதமில்லை யாவும்நன்மை
செய்கருமம்பலிதமாய்ச் செழிக்குந்தானே.

(இ-ள்.) அப் பட்சியானது ஊண் அரசு மித்துருவா யிருக்கின் கொடுமை செய்யும்படியாக வரும் மரணம் குறைவுபடும் உறவினர் கள் வந்து சேர்வர் நன்மையாகப் பிறவுபகாரஞ் செய்வன் தான் அய லூரிற் போயிருக்க நன்மையாம் மணஞ் செய்யும்படியாகவும் சோபன மானது வந்து கூடும் சேதமில்லை யாவும் நன்மையாம் செய்கருமம் பலிதமாகும் எ-று. 188

## புநர்பூசத்தின்பலன்

செழிக்கவேபுநர்ப்பூச முதிக்குமாயின்
சேதமாய்நினைத்தபொருள் சிவப்பதாகும்
விழிக்கவேவூர்ப்பயணம் போனபேர்கள்
சுவர்ணபொருள்பணிநிதிகொண்டு வருவாங்கு
கழிக்கவேவூண்பகையா யிருக்கொணாது
கால்வரிசைவருமானங் குறையும்பாரு
பழிக்கவேயரசுபகை யதுவுமானால்
படுங்கஷ்டம்பொருளுடைமை பாழாகும்மே.

(இ-ள்.) புநர்பூச நட்சத்திர முதிக்குமாயின் சேதமாகிய பொருளானது சிவந்த நிறத்தையுடையது ஊர்பயணம் போனவர்கள் சுவர்ணமாகிய பொருள் பநிதிகள் கொண்டுவருவர் ஊண்பகையில் இருக்கவொட்டாது கால்வரிசைவரும்படிகள் குறைவுபடும் அரசுபகையாயிருக்கில் பொல்லாதகஷ்டத்துடன்பொருட்பணிநிதிகளும்பாழாகும்.

பாழானவூணரசு பகையில்லாவிட்டால்
பலமானகாரியங்கள் முடியுமங்கே
தோழனாய்த்தொட்டதெலாஞ் சுவர்ணமாகும்
தூதேதாலைசுபமங்கள காமாய்ச்சேரும்
வாழவுமரிவைதுணை யணுகும்பாரு
மைந்தனே சிவனருளும் வந்துகூடும்
வீழவும்நாளிருப திநிலேவாய்க்கும்
மேலாகநிலங்கொள்ள விதிக்கும்பாரே.

(இ-ள்.) ஊணரசு பகையில்லாவிடில் பலத்தகாரியங்களெல்லா முடியும் தான்தொட்டதெல்லாம் சுவர்ணமாகவிளையும் தூரதேசத்து தூதோலைச் சுபகரமாய்ச் சேரும் சுமங்கலியின் துணையான தணுகும் பரமசிவ அர்ச்சனைகள் செய்யவைக்கும் இதில் சிவனருளுங் கைகூட வைக்கும் இது இருபதுநாளில் வாய்க்கும் இதோடு செய்தால் நிலங்களையும் வாங்கும்படிச் செய்விக்கும் எ-று. 190

## பூசத்தின் பலன்

விதிக்கவேபூசமு முதயமாயின்
மேவியேநினைத்தபொருள் கறுத்தவெண்மை
பதிக்கவேசஞ்சலமுஞ் சிலுகுமுண்டாம்
பரிந்துமேபோனபொருள் கைக்குட்சிக்கா.

உதிக்கவேயூண்டபகைதா னதிகசல்லியம்
ஒருக்காலுகரசுபகை யதுவுங்கூடா
மதிக்கவேயூணரசின் பகையுமோசம்
வந்துவிடும்வாழ்வுகுன்று மட்டிடாதே.

(இ-ள்.) பூசநட்சத்திர முதயமாயிருக்கின் நினைத்த பொருள் கறுப்பு வெண்மையாக அதினால் சஞ்சலம் சிலுகுண்டாகும் தப்பிக் கைசோர்ந்து போனபொருள் சிக்கமாட்டாது பட்சியானது ஊண் பகையா யிருக்கின் அதிக சல்லியமாம் அரசு பகையாயிருக்குமாயின் அதுவும் கூடாவாம் ஊணரசு பகையுள்ளதாயிருக்கின் அது பெரு மோசம் வரும் வாழ்வுகுன்றி மட்டுபடா தென்பதாம் எ-று. 191

மட்டிடாதுணரசுபகை யில்லாவிட்டால்
மறந்துமேபோனபொருள் பாதிகிட்டும்
சொட்டிடவுமணங்கூடு மலைச்சலாகும்
கொடும்பகையுமுறவும் பிடிக்காதென்றும்
அட்டியின்றிஅயல்மனுஷர் வருவர்பாரு
அவர்களாற்பொருட்சேத முறவுபகையாம்
கொட்டிடவும்நாளைந்திற் பலனைக்காட்டும்
நெடுந்துயரகலகமிகும் நேசம்போமே.

(இ-ள்.) ஊணரசு பகை யில்லாவிடின் மறந்து நெடுநாளான பொருளில் பாதிகிட்டும் மணமகனதுகூடும் அலைச்சலுண்டாகும் பகையுறவு பிடிக்கா தகன்றுவிடும் அயல்மனிதர்கள் வருவார்கள் அவர்களாற் பொருட்சேதமும் உறவு பகையாம் இது ஐந்து நாளிற் பலனைக் காட்டும் துயரமும் கலகமுமதிகரிக்கும் நேச மகன்றுவிடும்.

## ஆயிலியத்தின் பலன்

நேசமாயாயிலிய முதிக்குமாயின்
நினைத்தபொருளதுகறுப்பு வெள்ளையாகும்
பாசமாய்ப்போனவுயிர் திரும்பாதங்கே
பாயினிற்படுப்பவர்நோய் தீர்வதில்லை
வாசமாய்சோபனங்கள் மணமுங்கெட்டு
வழக்கிடவுமொருக்காலும் நடப்பதில்லை
நாசமாயூண்பகைதா னிருந்தால்மோசம்
நம்பியதும்நடப்பதில்லை நட்டமாமே.

(இ-ள்.) ஆயில்ய நட்சத்திர முதயமாயிருக்கின் நினைத்தபொருளானது கறுப்பு வெளுப்பாக யிருக்கும் நலியாய்ப்போன உயிர் திரும்பிவரமாட்டாது பாயிற் படுப்பவர் நோயானது தீரவே தீராது சுபசோபன மணமுதலிய கெட்டு வழக்கினால் ஒருக்காலும் நடக்க மாட்டாது ஊண்பகையா யிருக்கின் வெகு மோசமாய் நம்பியபடி யாவும் நடக்காது நட்டமாகும் எ-று. 193

நட்டமாயூணரசுபகை யில்லாவிட்டால்
நலமாகநினைத்தபடி வாய்க்குங்கொஞ்சம்
திட்டமாய்ப்பயிரிடவும் பலனுண்டாகும்
சேயிழையைமணஞ்செய்யில் வாழ்வதில்லை.
முட்டவேயொருபொழுதுஞ் செய்யொணாது
முடிப்பதெல்லாங்கூடிவர மாட்டாதங்கே
கிட்டுமிருபத்தைந்து நாளிற்குள்ளே
கேடாகியேங்குவர்பார் கீர்த்தியற்றே.

(இ-ள்.) ஊணரசு பகையான தில்லாவிடின் தானினைத்தபடி கொஞ்சமாகிலும் வாய்க்கும்பயிரானது பலனுண்டாகும்ஓர்பெண்ணை மணஞ்செய்ய வாழ்வுகுன்றும் ஆகலால் ஓர்பொழுதும் செய்யக்கூடா வாம் முயன்றகாரியம் கூடிவரமாட்டாது இது இருபத்தைந்து நாளிற் குள் நேரிட்டு கீர்த்தியற்றுப் பெருங்கேடாகி ஏங்குவார் எ-று. 194

மகத்தின் பலன்

கீர்த்தியாய்மகமதுவு முதிக்குமாகின்
கேட்டபொருள்குங்குமத்தின் மரணமாகும்
பூர்த்தியாய்ப்போனபொருள் கைக்குட்சிக்கும்
புறம்போக்காய்ப்போனவர்கள் வருவரிங்கு
நேர்த்தியாய்ப்பெண்கொள்ள பலனுண்டாகும்
நேராகமணஞ்செய்ய நன்மையாகும்
சேர்த்தியாயூண்பகைதா னுகாதியார்க்கும்
செப்பவுமரசுபகை தீதாகும்மே.

(இ-ள்) மகநக்ஷத்திர முதயமாயிருக்கின் தான் கேட்டபொருள் குங்குமவர்னமாக விருக்கும் போனபொருள் கைக்குள் வந்துதிக்கும் புறம்போக்காய்த் தூரஞ்சென்றவர்கள் வருவர். ஓர் பெண்ணைகொள் வதனல் பலனுண்டாகும் அதை மணம்புரிய நன்மையதிகரிக்கும் ஊண்பகையானது அரசுபகை அதிககெடுதியாம் எ-று. 195

தீதாகவரசுபகை யில்லாவிட்டால்
செப்பவுமுறவுபகை யாகாதங்கே
தேதாகநினைத்தபொருள் கையேகூடும்
சேர்ந்துமேபோனவர்கள் சுகமாய்வாழ்வர்
வாதாகமணஞ்செய்ய நன்மையாகும்
மாநிலத்திற்பிறருதவி யதிகரிக்கும்
சூதாகநாள்பத்திற் பலன்கைக்கிட்டும்
தோகையவளுற்றவர்கள் சொல்லுங்காலே.

(இ-ள்.) பக்ஷி யரசுபகை யில்லாவிடில் உறவினர்கள் பகையா ளார்கள் நினைத்தபொருள் கைகூடும் சேர்ந்து வெளியிற் போனவர் கள் சுகமாக வாழ்ந்திடுவர் மணஞ்செய்ய நன்மையுண்டாகும் உலகிற் பிறருதவி கிடைக்கும் இது பத்துநாளிற்குள் பலிதமாகும் மாதான வள் உறவாவள் எ-று. 196

## பூரத்தின் பலன்

சொல்லவேபூரமது வுதிக்குமாயின்
  சூழவேநினைத்தபொருள் பச்சையாகும்
செல்லவேவூர்பயணம் போனபேர்கள்
  சேரவேமாட்டார்கள் மணமுமில்லை
அல்லல்படபொருள்பணிதி யமைவதில்லை
  அகமகிழ்ச்சிசொல்லவில்லை யுறவுமில்லை
கல்லல்படவூண்பகையு மாருங்காலம்
  காணவேயெப்பொருளுங் கடக்கப்போமே.

(இ-ள்.) பூரநக்ஷத்திர முதயமாயிருக்கின் நினைத்தபொருள் பச் சைநிறமாக விருக்கும் ஊர்பயணம்போனவர்கள் திரும்பியும் வரமாட் டார்கள் மணமுங்கூடாது யாதொரு பொருள்பணிதி கிடைப்பது மரிது மன்று சந்தோஷமுமில்லை உறவினர்கள் சேரமாட்டார்கள் ஊண்பகையதாகில் எவ்விதபொருளும் கடக்கப்போய் நிற்கும் எ-று.

கடக்கவோரரசுபகை சுகித்திருக்கின்
  காணவேநினைத்தபொருள் கைகூடாது
நடக்கவேவூணரசுபகை யில்லாவிட்டால்
  நலமாகநினைத்தபொருள் சிறிதுகூடும்
மடக்கவேவுயிர்ச்சேதம் வருகுமங்கே
  மணமில்லைவுறவில்லை மகிழ்ச்சியில்லை
அடக்கவேமுப்பதுநா ளதனிற்குள்ளே
  அகன்றுவிடும்பீடையது வணுகாதென்னே.

(இ-ள்.) அரசுபகையா யிருக்குமாயின் நினைத்தபொருள் கைகூ டாது ஊணரசு பகையானதில்லாவிடின் நினைத்தபொருளிற் சிறிது சேரும் உயிர்ச்சேதமும் வாய்க்கும் மணமானது கூடாவாம் உறவு செல்லாதனவாம் மகிழ்ச்சியில்லாதனவாம் இது முப்பது நாளிற்குள் பலிதமாகும் பீடையானது அகன்றுவிடும் எ-று. 198

## உத்திரத்தின் பலன்

எண்ணவேவுத்திரந்தா னுதிக்குமாயின்
  இழந்தபொருள்கருஞ்சிவப்பு விரைவித்தாகும்

பன்னவேபோனபொருள் பார்க்கக்கிட்டும்
பழகியவர்வருத்துபகை யுறவதாகும்
சொன்னபடிசம்பந்தஞ் செய்யவாய்க்கும்
தோஷமாயூண்பகைதா னிருக்கொணாது
அன்னதனிலரசுபகை யிருந்திட்டாலே
அழுந்துவரன்சஞ்சலத்தி லக்காலத்தே.

(இ-ள்.) உத்திர நக்ஷத்திரமான துதிக்குங்கால் இழந்துவிட்ட பொருள் கறுப்பு சிவப்பாகிய விரைவித்தென்று சொல்லலாம் போன பொருள் மீண்டும் பார்க்கும்படியாய்கிட்டும் பழகியவர் வந்து சேர்வர் பகைஞர் உறவாவர் சம்பந்தஞ் செய்யவாய்க்கும் ஊண்பகையான திருக்கக்கூடாது அரசு பகையானதிருக்கில் சஞ்சலத்தில் அழுந்தி வருந்துவர் எ-று. 199

அக்காலத்தூணரசுபகை யில்லாவிட்டால்
அகன்றபொருளடுத்தவனு லணுகும்பாரு
தற்காலத்தூர்ப்பயணம் போனூர்மீள்வர்
தானினைத்தகருமம் பொருட்சேதமாகும்
எக்காலும்நினைத்தபடி முடியாதங்கே
ஏந்திழையாற்சங்கடங் கோபமுமேவாய்க்கும்
முக்காலும்பலிதமூ வைந்துநாளி
லுடல்நொந்துமனம்புண்ணு யொடுங்குவானே.

(இ-ள்.) ஊணரசுபகையான தில்லாவிடின் கைசோர்ந்து விட்ட பொருள் அடுத்தமனிதனாற் கிடைக்கும் ஊர்ப்பயணம் போனவர்கள் மீண்டும்வந்து சேர்வர் தானினைத்தகாரியமும் சம்பாத்தியப் பொருளும் நஷ்டமாகும் யாதொன்றும் நினைத்தபடி முடியமாட்டாது ஓர் பெண்பிள்ளையால் சங்கடமும் கோபமும் நேரும் இது பதினைந்து நாளையிற் பலிதமாகும் இதோடு ஊண்மெலிந்து மனம்புண்ணுய் ஒடுங்குவான் எ-று. 200

## அத்தத்தின் பலன்

ஒடுக்கிவனத்தந்தா னுதிக்குமாயின்
ஓதும்பொருள்பலநிறமா யுள்ளதங்கே
நெடுங்குறையாய்ப்பிறதேசம்சென்றவர்கள்
நிச்சயமாய்மணமுடித்து வருவர்பாரு
பிடுங்கவும்பொருட்சேதங் களவுபோகும்
பிசகாதுவூண்பகைய தாகுமாகில்
நடுங்கவேபோனபொருள் தந்திடாது
நவிலரசுபகையாகா லண்ணுங்காலே.

(இ-ள்.) அந்த நக்ஷத்திர முதயமாகில் கேட்கும்பொருள் ப
நிறத்தை யுடையனவாம் அரைகுறையாய்ப் பிரதேசம் போனவர்
மனஞ்செய்து கொண்டுவந்து சேர்வர் பொருட்சேதமும் சோரபய
முண்டாகும் ஊண்பகையானதா யிருக்குமாகில் போன பொருள்
வந்துசேராது அரசுபகையானதாகாவாம் எ-று. 201

நண்ணவேயூணரசுபகை யில்லாவிட்டால்
நழுவினதோர்பொருள்சேரும் நன்மையாக
என்னுமேசுகமாக வாழ்வதில்லை
இன்பமுளகாரியமும் நேர்வதில்லை
குண்ணவேசஞ்சலம்பட் டிருந்தபேர்கள்
குணமாகவீற்றிருந்து வாழமாட்டார்
சண்ணவேயேழைந்து நாளைக்குள்ளே
சாற்றவுமிப்பலன்கள் தருகும்பாரே.

(இ-ள்.) ஊணரசு பகையானதில்லாவிடின் நழுவி கைசேர்ந்த
பொருள்சேரும் என்றும் சுகமாக வாழமாட்டார் இன்பமுள்ள காரி
யங்கள் முடியமாட்டாது குண்ணுதலாய் சஞ்சலத்திருந்தவர்கள் சுப
க்ஷேமமாய் வசிக்கமாட்டார் இதுமுப்பத்தைந்து நாளிற்கு இப்பலன்
கள் தரும் எ-று. 202

## சித்திரையின் பலன்

தருகவேசித்திரையு முதிக்குமாயின்
தரைவிழுந்தபொருள்சிவப்பு வெள்ளைமஞ்சள்
உருகவேநினைத்தபொருள் சேராதங்கே
உதித்திடுஞ்சிறுகுசண்டை மணங்கூடாது
பருகவேவூணரசு பகையுமாகில்
பலபொருளுஞ்சேதமுட னுயிருஞ்சேதம்
வருகவுமூணரசுபகை யில்லாவிட்டால்
வளர்தல்குறைதலுமில்லை மகிதலத்திற்றானே.

(இ-ள்.) சித்திரை நக்ஷத்திர முதயமாயிருக்கின் தரையில் விழு
ந்த பொருள் சிவப்பு வெள்ளை மஞ்சள் நிறமுள்ளவை தானினைத்த
பொருள் சேராது சிறுகுசண்டை மணமானது கூடாது ஊணரசு
பகையாயிருக்கின் பொருட்சேத முண்டாவதுடன் உயிர்ச்சேதமுங்
காட்டும் அவ்வூணரசு பகையில்லாவிடின் வளர்தலுங் குறைதலு
மின்றி உலகில் வசிப்பர் எ-று. 203

மகிதலத்திற்பொருளுடைமை சேர்வதில்லை
மதித்திடவுஞ்செயமாக வருவதில்லை
முழுகிபடாச்சங்கடங்க ளதிகமாகி
முற்றுமேயபகீர்த்திப் பேருண்டாகி
சகிக்கமனிதரினுதவி யில்லாமற்றான்
சஞ்சலமுமதிகரித்துத் தவிர்ப்பாரங்கே
தகிக்கவேநாற்பது நாளிற்குள்ளே
தருகுமேகூடிவரா தொன்றுந்தானே.

(இ-ள்.) உலகினில் பொருளும் உடைமைகளும் சேரமாட்டாது பிறர் மதிக்கும்படியாகச் செயம்பெற்றுவரவு மாட்டார்கள் சங்கடங்களதிகரிக்கும் அபகீர்த்திப் பெயருண்டாகும் அயல்மனிதனுதவியின்றி சஞ்சலம்பெருகி தவிர்ப்பார் இது நாற்பதுநாளிற்குள் பலிதமாகும் யாதொன்றும் கூடிவரமாட்டாது எ-று. 204

## சுவாதியின் பலன்

ஒன்றாகச்சுவாதிதா னுதிக்குமாயின்
உற்றுமேநினைத்தபொருள் தங்கமாகும்
சென்றூருமூர்வழியிற் போனபேர்கள்
சிந்தைமகிழ்ந்தவரு மங்களமாய்ச்சேர்வர்
நன்றாகவான்குழந்தை பிறக்கும்பாரு
நம்பிடவேயாவுங்கை வசமேயாகும்
நின்றூலூணாசு பகையாகாது
நினைத்தபடிமுடியாது நீளுங்காலே.

(இ-ள்.) சுவாதி நட்சத்திரமுதிக்குமாயின் தானினைத்த பொருளானது தங்கமாகும் ஊர்வழிசென்றவர்கள் மனமகிழ்ச்சியாயும் மங்களகரமாயும் வந்து சேர்வர் ஆண்குழந்தையானது பிறக்கும் யாவும் கைவசமாக முடியும் ஊணாசுபகையாகாததினால் தானினைத்தபடி யாதொன்று முடியாவாம் எ-று. 205

நீளவேயூணாசுபகை யில்லாவிட்டால்
நிதநிதமேலட்சுமியின் கிருபையாலே
சூளவேநினைத்ததெல்லாங் கையுட்சிக்கும்
சொகுசுள்ளபொருள்கூடு முறவுஞ்சேரும்
நாளுமேசோபனங்கள் வந்துகூடும்
நன்றாகப்பொருள்சேருந் தொல்லையில்லை
தானவேயீரைந்து நாளிற்குள்ளே
தான்கூடுமெகிழ்ந்ததுவுந் தடையிராதே.

(இ-ள்.) ஊணரசுபகையில்லாவிடின் அநுதினமும் இலட்சுமியின் கிருபையினல் நினைத்ததியாவும் கையுட்சிக்கும் நாகரீகமான பொருள் கூடும் உறவினர்கள் சேர்வர் சோபனஞ்செய்ய வாய்க்கும் எப்பொருளுஞ் சேரும் தொல்லையில்லை இது பத்துநாளில் முடியும் தடையில்லாது மகிழ்ச்சியுண்டாகும் எ-று. 206

## விசாகத்தின் பலன்

தடையாகவிசாகமது வுதிக்குமாயின்
தானினைத்தபொருள் கசப்புள்ளவஸ்து
இடையினிற்றுமதத்தில் வந்துசேரும்
இன்பமாய்ச்சோபனங்கள் கூடாதங்கே
கடையினிலூண்பகையு மில்லாவிட்டால்
காட்டுமேநன்மைதுன்மை யிரண்டுமொன்றுய்
நடையினிலரசுபகை யாகநிற்கில்
நம்பவுந்தீமையென்று நவிலுவாயே.

(இ-ள்.) விசாகநக்ஷத்திர முதயமாயிருக்கின் நினைத்த பொருளானது கசப்புள்ள வஸ்துவாம் அது தாமதத்தில் வந்துசேரும் சோபனங்களானவை முடியமாட்டாது ஊண்பகை யில்லாவிடின் நன்மை துன்மை யிரண்டுமொன்றுய் நடக்கும் அரசு பகையாக நிற்கில் தீமையுண்டாகும் எ-று. 207

நவிலவேயரசுபகை யில்லாவிட்டால்
நம்புவாய்தப்பாது நோயில்மாள்வன்
தவிரவேவெகுதுயரம் பட்டுத்தேறில்
தங்காதுகாலன்வந்து கொண்டுபோவான்
புவியினிற்பொல்லாத நேரமென்பர்
புத்தியாய்மனதுகந்து காலம்பாரார்
செவிபுகவேபகையாவர் நாளைந்திற்குள்
தீரமாயிப்பலனைச் செப்புவாயே.

(இ-ள் ) பக்ஷி அரசுபகையில்லாவிடின் தப்பாது நோயில்மாண்டு விடுவன் ஒருவேளைத் துயரப்பட்டுத் தேறுவானுகில் காலனானவன் வந்து அவனைத் தங்கவொட்டாது கொண்டுபோவான் இவ்வுலகினில் பொல்லாத நேரமென்பவர் புத்தி பூர்வகமாய் மனதுவைத்து காலத்தை நோக்கார்கள் இது ஐந்துநாளில் பலிதமாய் யாவரும் பகையாவர் எ-று. 208

## அனுடத்தின் பலன்

செப்பவேயனுடமது வுதிக்குமாயின்
சென்றபொருள்வெள்ளியென்று சொல்லலாகும்

அப்போதுவூணதுவும் பகையதாகில்
அங்஢னெசெம்புவெள்ளி யென்றுசொல்லு
ஒப்பவேயூணரசு பகையதாகில்
உயர்படிகம்பீங்காளென் றுகந்துசொல்லு
தப்பவேவூணரசு பகையில்லாவிட்டால்
சரிகைவெள்ளியென்றுசொல்லுஞ் சங்கையற்றே.

(இ-ள்.) அனுடநட்சத்திர முதயமாயின் சென்ற பொருளானது வெள்ளி யென்று சொல்லவும், ஊண் பகையதாகில் செம்பு வெள்ளி யென்று சொல்லவும், ஊணரசு பகையதாகில் படிகம் அல்லது பீங்கா னென்றுஞ் சொல்லவும், ஊணரசு பகையில்லாவிடின் சரிகை வெள்ளி யென்று சொல்லுவாய் எ-று. 209

சங்கையறப்பொருளுடைமை கிடைக்கும்போது
சரியானபோசனங்க ளதுவும்நேரும்
மங்களமாய்ப்பிறதேசம் போனபேர்கள்
வகைமோசம்போகாமல் வருவாரங்கே
இங்கிதமாய்த்தேகமதில் நோயொன்றில்லை
எண்ணியதோர்படிமுடியு மிடர்வராது
பொங்கமாய்முப்பது நாளிற்குள்ளே
புக்கிவரும்வெகுநன்மை பூணிடற்கே.

(இ-ள்.) சந்தேகமற பொருள்பணிதி முதலியவை கிடைக்கும் போது தக்கபடி காலமாறுமல் போசனமும் நேரும் மங்களகரமாய்த் தூரதேசம் போனவர்கள் யாதொருமடிப்பு மோசமின்றிவந்து சேர் வர் தேகமானதில் நோயென்ப தணுகாது தான் எண்ணியபடி யாவு முடியும் இடரானது தீரும். இவை முப்பதுநாளிற்குள் நேரிடும் வெகு நன்மை யுண்டாம் எ-று. 210

## கேட்டையின் பலன்

பூணிடவுங்கேட்டையது வுதிக்குமாயின்
போனபொருள்பித்தளையென் றுரைக்கலாகும்
ஆணிடவுமூண்பகையே யாகுமாயின்
உள்ளபடியப்பிரக மென்றுசொல்லு
நாணிடவுமரசுபகை யாகநிற்கில்
நல்குவாய்மஞ்சள்நிற மானவோடு
தோணிடவுமூணரசுபகை யில்லாவிட்டால்
சூழவேகூடிவரு முகந்துகேளே.

(இ-ள்.) கேட்டை நட்சத்திர முதிக்குமாயின் கைசேர்ந்த பொருளானது பித்தளையென்று சொல்லவும் ஊண் பகையா யிருக்குமாயின் அது அப்பிரகமென்று சொல்லவும் அரசு பகையா யிருக்கில் மஞ்சள்நிறமாகிய ஓடு என்று சொல்லவும் ஊணரசு பகை யில்லாவிடின் யாவுங் கூடிவரும் எ-று. 211

உகந்துமேநினைத்தபொரு ளொன்றுஞ்சேரா
 உயர்வான தனங்கூடா வுறவுநேத்ர
அகந்தனிலேபோனபொரு ளதுவும்வாரா
 அகன்றுமேபோனவர்கள் வரவுமாட்டார்
சகந்தனிலேசரியான நிலையைப்பார்த்து
 தன்மையாய்க்குறிகுண மாராய்ந்துசொல்வாய்
இகந்தனிலோர்நாளெட்டிற் பலிக்குமப்பா
 எந்நாளும்போகாது கிருபையாலே.

(இ-ள்.) தானினைத்த பொருளானது ஒன்றேனுஞ் சேராது தனதானியசம்பத்துங் கூடிவரமாட்டாது உறவின்முறையார் எக்காலும் நேரார்கள் கைசேர்ந்து போனபொருள் அணுவேனும் வாராது தன்னைவிட்டுப் போனவர்கள் மீண்டுங் கலக்கார்கள் இவை யனைத்தும் சரியான நிலைப் பார்த்து குறிகுணங்களை யாராய்ந்து சொல்லக்கடவாய் இது எட்டு நாளையில் போகாது கிருபையால் பலிதமாகும் எ-று. 212

## மூலத்தின் பலன்

கிருபையாய்மூலமது வுதிக்குமாயின்
 கேட்டபொருள்நிலமலது கறைகளாகும்
சருவமுமேவூண்பகையு மதுவுமாகில்
 சார்வாகவாடுமா டென்றுசொல்லு
பருகவேயரசுபகை யாகநிற்கில்
 பன்பாகச்சொல்லுவது சொற்பலாபம்
உருகவேயூணரசுபகை யில்லாவிட்டால்
 உற்றபொருளுடைமையென வோதுவாயே.

(இ-ள்.) மூலநக்ஷத்திர முதிக்குமாயின் கேட்டபொருள் நிலம் அல்லது கறைபக்கென்று சொல்லவும் ஊண்பகையா யிருக்குமாயின் அது ஆடுமாடென்று சொல்லவும் அரசு பகையா யிருக்குமாயின் சொற்ப லாபங் கிடைக்குமென்று சொல்லவும் ஊணரசு பகை யில்லாவிடின் பொருள் பணிதியென்று சொல்லுவாய் எ-று. 213

ஓதவேநினைத்தபொருள் கைக்குட்சிக்கும்
உயர்மணங்கூடும்பிரபு வுறவுமாகும்
போதவேயாள்வருத்தால் பொருள்கைச்சிக்கும்
புகழான சொற்கேட்க மகிழ்ச்சிசெய்தும்
நீதமாயாண்குழந்தை ஜனிப்பதாகும்
நிச்சயமாயதிலேசந் தோஷம்பூணும்
தோதமாயிருபத்து வைந்துநாளில்
சொல்கேட்கக்கூடிவருஞ் சூட்டுங்காலே.

(இ-ள்.) நினைத்த பொருளானது கைக்குள்வந்து சிக்கும் மணமானது செய்விக்கும் பிரபுக்கள் உறவாவர் அன்னியமனிதன் வருத்தால் பொருள் கையிற் சிக்கும் நல்ல வார்த்தையைக் கேட்க மகிழ்ச்சியுண்டாகும் ஆண்குழந்தையானது ஜனிக்கும் அதினால் சந்தோஷம் மிருதியா யடைவர் இது இருபத்தைந்துநாளில் இதின் சேதியானதைக் கேட்கக் கூடிவரும் எ-று. 214

## பூராடத்தின் பலன்

சூட்டவேபூராட முதிக்குமாயின்
சொல்லவேநினைத்தபொருள் கல்மண்ணாதும்
கேட்டதுமூண்பகையு மாகுமாகில்
கிளறிடுமெருவாகுஞ் சாம்பலாகும்
நீட்டவேயரசுபகை யாகநிற்கில்
நிர்ணயமாய்ப்பறவையதி னிறகதாகும்
கூட்டவேயூணரசுபகை யில்லாவிட்டால்
கூறுவாய்க்கல்லிலையைக் குவலயத்தே.

(இ-ள்.) பூராடநட்சத்திர முதிக்குமாயின் நினைத்த பொருளானது கல் மண்ணென்று சொல்லவும், ஊண்பகையா யிருக்குமாயின் எருவு சாம்பலென்று சொல்லவும், அரசு பகையா யிருக்குமாயின் பறவையினது சிறகென்று சொல்லவும், ஊணரசு பகையான தில்லாவிடின் கல் இலையென்று சொல்லக்கடவாய் எ-று. 215

குவலயத்தில்நினைத்தபொருள் கூடாதென்று
குணமாய்ச்சோபனஞ்செய்யில் வாழ்ந்திரார்கள்
அவலமாய்ப்போனவர்கள் வரவுமாட்டார்
அங்ஙனேநினைத்தபடி யாகாதென்றும்
செவலையான்விஷதிருஷ்டி யாலேயாவுஞ்
சேர்ந்துவரப்போவதில்லை செல்வமப்பா
கவலைபடாவாறெட்டு நாளிற்குள்ளே
காணுவாயிப்பலனைக் கனிவாய்த்தானே.

(இ-ள்.) நினைத்த பொருளானது யாதொன்றுங் கைகூடாது சுப சோபனங்கள் செய்ப வாழ்வதிகரிக்காது தன்னைவிட்டு பிரிந்தவர்கள் வந்து சேரமாட்டார்கள் தானினைத்தபடி யாதொரு கருமமு மாகாது செலவுபான மனிதனது கண் திருஷ்டியால் வருவனவெல்லா மற்று விடும் செல்வமானது செழிக்காது இது நாற்பத்தெட்டு நாளிற்குள் இப் பலனைக் காணும்படி நிறைவேறும் எ-று. 216

## உத்திராடத்தின் பலன்

கனிவாகவுத்திராட முதிக்குமாயின்
காணவேகருத்திலொன்றும் நினைத்ததில்லை
தனியாகவூண்பகைதா னிருந்தாலென்ன
தங்கியேயரசுபகை யானாலென்ன
முனிவாகத்தன்மனதைச் சோதித்தெண்ணி
முக்கியமாய்ச்சொல்லிடவோர் பொருளுங்காணேன்
இனிதாகவிப்பலனை யெவர்க்குந்தோன்ற
எளிதினிற்போகருந்தா னியம்பத்தானே.

(இ-ள்.) உத்திராட நட்சத்திர முதிக்குமாயின் தன்கருத்தி லியாதொன்றும் நினைத்ததில்லையென்று சொல்லவும் இதில் ஊண் பகைதா னிருந்திடிலென்ன பின்னும் அரசு பகையானால்தானென்ன தன் மனதை நன்றாய்ச் சோதித்தெண்ணி முக்கியமான பொருளைச் சொல்ல ஒன்றேனும் காண்ப தரிதாகையால் இப்பலனை எவர்க்கும் தோன்ற எளிதில் போகரானவர் குறிப்பிட்டதெனக் கொள்க எ-று.

## திருவோணத்தின் பலன்

இயம்பவேதிருவோண முதிக்குமாயின்
எஞ்சியபொருள்தெல்லும் புல்லுமாகும்
வயம்படவேவூண்பகையு மதுவுமாகில்
மனந்தேற்றியதற்குரிய வழியைச்சொல்லு
நயம்படவேயரசுபகை யாயிருக்கின்
நடுங்காமலதிலமைந்த வகையைச்சொல்லு
செயம்படவேவூணரசு பகையில்லாவிட்டால்
செப்புவாயுயர்பலனைச் சீராய்த்தானே.

(இ-ள்.) திருவோண நட்சத்திர முதிக்குமாயின் கருதிய பொரு ளானது நெல்லும் புல்லுமென்று சொல்லவும் ஊண்பகையா யிருக்கு மாயின் தன் மனதைத் தேற்றி அதற்குத் தக்கவழியைச் சொல்ல வும் அரசு பகையா யிருக்குமாயின் பயப்படாமல் அதிலமைந்த வகை யனைத்துஞ் சொல்லவும் ஊணரசு பகை யில்லாவிடின் உயர்வாகிய நற் பலன்களைச் சீராயுரைத்திடுக எ-று. 218

சோரகநினைத்தபொருள் திரமாய்ச்சேரும்
திருடர்பயமுண்டுபொருள் பணிதியேகும்
நேராகப்போனபொருள் கைக்குட்சிக்கும்
நிலையாகத்துலைதூரம் போனார்மீள்வர்
போரானபகைஞருற வாவரங்கு
புகழானவரன்முறையோ ருறவுநேரும்
போரானவெழுமூன்று நாளிற்குள்ளே
பின்பற்றுமிப்பலனைப் பேசுவாயே.

(இ-ள்.) நினைத்த பொருளானது நிச்சயமாக வந்து சேரும் சோரர் பயமுண்டாகும். பொருள் பணிதியானது போய்விடும். கைசோர்ந்து போனபொருள் கையில்வந்துசிக்கும் துலைதூரம்போன வர்கள் மீண்டும் வருவர் பகைஞர்கள் உறவாவர் உறன்முறையார் உறவுவந்தடுக்கும், இவை இருபத்தோர்நாளிற்குள் இப்பலனடைவ ரெனச் சொல்லுவாய் எ-று. 219

## அவிட்டத்தின் பலன்

பேசவேயவிட்டமது வுதிக்குமாயின்
பெருமையாய்நினைத்ததெல்லா முடிக்கும்வஸ்து
ஏசவேவூண்பகையா யிருக்குமாயின்
எண்ணியதோர்நாணயத்திற் றாழ்வுசொல்லு
கூசவேயரசுபகை யிருக்குமாயின்
குறித்தநாணயமதனிற் றாழ்வுசொல்லு
வீசவேவூணரசுபகை யில்லாவிட்டால்
விலையுயர்ந்தநாணயமாய் விளம்புவாயே.

(இ-ள்.) அவிட்ட நட்சத்திர முதயமாயிருக்கின் நினைத்த தியாவும் பெருமையாய் முடிக்கும்படியான வஸ்துவென்று சொல்லவும் ஊண் பகையாயிருக்குமாயின் நாணயங்களிற்றாழ்ந்தது அதாவது பாதியென்று சொல்லவும் அரசு பகையாயிருக்குமாயின் அந்நாணயத் தினுந் தாழ்ந்தது அதாவது அதிலும் பேர்பாதியென்று சொல்லவும் ஊணரசு பகையில்லாதிருக்கின் விலையுயர்ந்த நாணயமாய் சொல்லவும் எ-று. 220

விளம்பவும்பொருள்பணிதி கைக்குட்சிக்கும்
வெகுவாகவுறவினர்கள் தொந்தமாகும்
உளமகிழவூர்பயணம் போனபேர்கள்
உள்ளபடிசெல்வர்களாய் வந்துசேர்வர்
வளம்படவுப்பிறமனித ருதவியாலே
வழக்கிடுவர்பால்பழ வர்க்கங்களங்கே
அளவிடவுமாறைந்து நாளிற்குள்ளே
ஆனதொருபொருள்வருத்து வமையுந்தானே.

(இ-ள்.)முற்கூறும் ஊணரசு பகைல்லாவிடின்பொருள்பணிதி கைக்குட்சிக்கும் உறவின் முறையானவர் தொந்தமாகச் சேர்வர் ஊர்பயணம் போனவர்கள் செல்வர்களாய் வந்தணுகுவர் பிறர்மனிதரி னுதவியால் பால் பழம் பலகாரவர்க்கங்கள் கிடைக்கும் இது முப்பது நாளிற்குள் அப்பொருளானது கிடைக்கும் எ-று. 221

### சதயத்தின் பலன்

அமையவேசதயமது வுதிக்குமாயின்
அறிவதனில்நினைத்தபொருட் பயிறுபச்சை
இமையளவுமூண்பகையே யிருக்குமாயின்
எண்ணியதோர்தர்க்கத்தில் தாழ்ந்ததாகும்
நிமையளவேயரசுபகை யிருக்குமாயின்
நீளவேபதிற்குறைந்த வர்க்கமென்பாய்
சமையவுமூணரசுபகை யில்லாவிட்டால்
தாழ்ந்தவிலையில்லையது சாற்றுதற்கே.

(இ-ள்.) சதய நட்சத்திர முதயமாயிருக்கின் நினைத்த பொருளானது பயிர் பச்சையென்று சொல்லவும் ஊன் பகையாயிருக்குமாயின் தானினைத்த வஸ்துவில் பாதி தாழ்ந்ததென்று சொல்லவும் அரசு பகையாயிருக்குமாயின் முன்விட்டதிற் பேர்பாதியென்று சொல்லவும் ஊணரசு பகையில்லாவிடின் உயர்ந்த விலையுள்ள வஸ்துவென்று சொல்லுவாய் எ-று. 222

சாற்றவும்பொருள்வருத்தோ வதிகமில்லை
சங்கடங்களொன்றுமில்லைத் தாழ்வுமில்லை
நாற்றிசையிற்சென்றவர்கள் துயரத்தாலே
நலிவினுற்சகிக்காமற் றேகம்நொந்து
ஆற்றிடவும்வருவர்கைப் பொருளுஞ்சேதம்
ஆக்கவுமுறவினர்கள் பகையதாவர்
ஏற்றவுமேமைந்து நாளிற்குள்ளே
இசைந்துவருமிப்பலனை யெண்ணிச்சொல்லே.

(இ-ள்.) முற்கூறிய ஊணரசு பகையில்லாவிடின் பொருள் வருத்து அதிகம் கிடைக்கமாட்டாது சங்கடங்களொன்றேனுமில்லை தாழ்வென்பதுமில்லை நாலுபக்கத்திற்சென்றவர் துயரப்பட்டு நலிவினுற் சகிக்கமுடியாமல் தேகம் நொந்து வந்து சேர்வார் கைப்பொருளானது சேதமுண்டாகும் உறவினர்கள் பகைஞராவர் இது முப்பத்தைந்து நாளிற்குள் இப்பலன் முடியவேணும் எ-று. 223

## பூரட்டாதியின் பலன்

சொல்லவேபூரட்டா தியுமுதிக்கின்
 சேர்ந்ததுதானினைத்த பொருளுறும்பூச்சி
செல்லவேயூன்பகையு மாயிருக்கின்
 சென்றதுவுஞ்சிறுபூச்சி யென்றுசொல்லு
புல்லவேயரசுபகை யாயிருக்கின்
 பொல்லாதபூச்சென்று புகழ்ந்துசொல்லு
வெல்லயூணரசுபகை யில்லாவிட்டால்
 விலையுயர்ந்தபூச்சதுவாய் விதித்திடாயே.

(இ-ள்.) பூரட்டாதி நட்சத்திர முதயமாயிருக்கின் சேர்ந்து போனபொருள் நகரும்படியான பூச்சென்றுசொல்லவிம் ஊண்பகை யாயிருக்குமாயின் அது சிறியபூச்சென்று சொல்லவும் அரசுபகையா யிருக்குமாகின் கொடுமையுள்ள பொல்லாத பூச்சென்று சொல்லவும் ஊணரசுபகை யில்லாவிடின் விலையுயர்ந்த பூச்சதுவென்று விதித்திடு வாய் எ-று. 224

விதித்திடவுஞ்செலவதிகம் வருத்துகொஞ்சம்
 வெற்றியில்லைவியாச்சியந் தோல்வியாகும்
மதித்திடவேயூர்வழிதான் போனபேர்கள்
 வழக்கிட்டுத்தோல்வியா யிடைஞ்சலாவர்
கதித்திடவேபொருள்பணிதி களவுபோகும்
 காணவேயரசர்தண் டனையும்நேரும்
துதித்திடவேமூன்றுபத்து நாளிற்குள்ளே
 சூழ்ந்துவருமிப்பலனைத் தொகுத்திடாயே.

(இ-ள்) முற்கூறிய ஊணரசுபகையில்லாவிடின் செலவான ததிக மாய் வருத்தானது கொஞ்சமாயிருக்கின் வியாச்சியந் தொடரவெற்றி யில்லாது தோல்வியடைவர் பலத்தபொருள் பணிதிகள் களவிற்சேத மாகும்அரசர்தண்டனையும்நேரும் இது முப்பதுநாளிற்குள் இப்பலன் அடுத்துவருவதை தொகுத்திடுவாய் எ-று. 225

## உத்திரட்டாதியின் பலன்

தொகுப்பாகவித்திரட் டாதியுமுதிக்கின்
 தொடர்ந்துமேகேட்டபொருள் குளிர்ந்தபச்சை
பகுப்பாகமன்னர்பகை யாகுமூணின்
 பகையதனிலழுக்குள்ள பச்சையென்பாய்

வகுப்பாகவாசபகை யாகநிற்கில்
வகைபானகளிப்புள்ள பச்சையென்பாய்
திகைப்பாகவூணாசபகை யில்லாவிட்டால்
செப்புவாயிலைப்பச்சை சேதியென்னே.

(இ-ள்.) உத்திரட்டாதி நட்சத்திரமுதயமா யிருக்கின் தொடர்ந்துவந்து கேட்ட பொருளானது குளிர்ந்த பச்சையென்று சொல்லவும் அரசர்பகையு முண்டாகும் ஊண்பகையாயிருக்கின் அழுக்குள் பச்சையென்று சொல்லவும் அரசு பகையாயிருக்கின் களிப்புள்ள பச்சையென்று சொல்லவும் வூணாசுபகை யில்லாவிடின் இலைப்பச்சையென்று சொல்லவும் எ-று. 226

சேதிக்கச்சிறுசண்டை களவுண்டாகும்
சேருமேசோரர்பய முறவொன்றில்லை
வாதிக்கச்சம்பந்தம் பகையதாகும்
வலிவானபிரபுசல்லி யங்கள்மேவும்
சாதிக்கப்போனவுயிர் திரும்பாதங்கே
தப்பாதுபொருளுடைமை தோல்வியாகும்
சோதிக்கவெண்ணைந்து நாளிற்குள்ளே
தோலாதுவரும்பலனைக் கட்டிடாயே.

(இ-ள்.)முற்கூறியவூணாசுபகையில்லாவிடின் சிறுசண்டைகளானதுண்டாகும் சோரபயமுமதிகரிக்கும் உறவின்முறையார் சுற்றமொன்றில்லா தகற்றும் ஓர்சம்பந்தி பகையதாகுவர் பலமான பிரபுவின் சல்லியங்கள் நேரிடும் களியிறைற் போனவுயிர் திரும்பி வாமாட்டாது பொருள் பணிதிபைத் தோற்றுவிடுவன் இது நாற்பதுநாளிற்குள் பலிதமாகும். எ-று. 227

## இரேவதியின் பலன்

சுட்டிடவேரேவதியு முதிக்குமாயின்
சோர்ந்தபொருள்முத்துவகை யென்றுசொல்லு
கெட்டிடவேவூண்பகையு மாயிருக்கின்
நிதிதாழ்ந்தரத்தினவகை யென்றுசொல்லு
முட்டிடவேயரசுபகை யாயிருக்கின்
முன்னுசுச்சொட்டையென்று வுறுத்திச்சொல்லு
கட்டிடவேயூணாசுபகை யில்லாவிட்டால்
கனமானவுயர்ந்தவர்க்கங் கழறிடாயே.

(இ-ள்) இரேவதிநட்சத்திர முதிக்குமாயின்கைசோர்ந்துபோனபொருளானதுமுத்துவகையென்று சொல்லவும்ஊண்பகையாயிருக்கு

மாயின் விலைதாழ்ந்த இரத்தின வகையென்று சொல்லவும் அரசு பகையாயிருக்குமாயின் சொட்டைகளென்று சொல்லவும் ஊணரசு பகையில்லாவிடின் கனமான விலையுயர்ந்த வர்க்கமென்று சொல்லவும் எ-று. 228

கழறவும்பொருள்வருத்து மெத்தவுண்டாங்
கனமாகமங்களசோ பனங்கள்கூடும்
வழிதப்பிப்போனவர்கள் மணமுஞ்செய்து
வந்தினத்தில்வாழ்ந்திடுவர் மகிழ்ச்சியாக
அழகுடனேயிரண்டுபிள்ளை மிகுந்தசெல்வத்
தவன்கிளையாய்பெருகிவளர்ந் தோங்குமங்கே
பிழையறவேநினைத்ததெல்லாங் கைக்குட்சிக்கும்
பிசகாதுநாள்மூன்றிற் பெருகும்பாரே.

(இ-ள்.) முற்கூறிய ஊணரசு பகை யில்லாவிடின் பொருள் வருத்து அதிகரிக்கும் மங்களசோபன வைபவங்கள்நேரிடும் வழிதப்பிப் போனவர்கள் மணமுடித்துக்கொண்டு தன்னினத்தில் வந்து சேர்ந்து மகிழ்ச்சியாய் வாழ்ந்திடுவர் அழகுபொருந்திய இரண்டு பிள்ளைகள் தன்கிளையாய் மிகுந்த செல்வம்பெருகி வளர்ந்தோங்குவர் தானினைத்த விஷய மியாவும் கைகூடிவரும் இப்பலன் மூன்று நாளிற் சம்பவிக்கும் எ-று. 229

## சிந்தனைக்கூற்றின் புத்தி

பெருகவேநின்றநிலை பேணிப்பாரு
பேசுமவர்முகம்நோக்குந் திசையைப்பாரு
பருவமுமுன்சொன்ன வெழுத்தோடியாவும்
பற்றவேநெறிமாறு தகைநிறுத்தி
உருகவேநட்சத்திரஞ் சொல்லக்கேட்டு
உளராமற்சொன்னபடி தெரிந்துணர்ந்து
சருவமுமோனமென்ற வெழுத்தையோதித்
தான்செய்யபோகருமே சமைத்தவாறே.

(இ-ள்.) ஆரூடங் கேட்க வந்தவர் நிலையை நினைத்துப்பார்த்து அவர் சொல்லும் வாக்கியாட்சாத் தலையெழுத்தையும் முகம்நோக்குந் திசையையும்பார்த்து பருவமானதறிந்து முற்கூறிய எழுத்துதொழில் வாரம்-பட்சம்-சத்துரு - மித்துரு - நட்புபகையான யாவும் ஆராய்ந்தறிந்துநெறிபிசகாது மனதைநிறுத்திர நட்சத்திபாகங்களைக்கொண்டு தாறுமாறு யுளராமல் இந்நூலிற் செப்பியபடி குணங்குறிகளைச் சாங்கோபாங்கமா யுரைக்க எல்லாவற்றிற்கும் மோனமென்ற அக்ஷரத்தையோதி சர்வ காரியங்களையுந் தடையின்றி செய்யும்படியாக போகரானவர் சமைத்தவிதியாகிய பஞ்சபட்சி நூலென்பதாம் எ-று.

# ஆரூடத் தொழின்முறைப் படலம்




## பூர்வபட்சம் உண்டியின் பலன்

ஊணாகிற்பதிவாழுங் கலக்கமில்லை
உறவினர்களூர்சென்றோர் வந்துசேர்வர்
தானாகமழைபொழியுங் களவுமில்லை
தன்புலத்திற்கதிர்விளையுந் தழைத்துவோங்கி
மானானமடமங்கைப் பேறதாகும்
வன்பிணியுந்தீரும்பெண் பெறுவள்பாரு
ஆனாலும்வாணிபம்பொன் பொருஞ்சேரும்
அரசரையும்வென்றிடுவ ரவனிமீதே.

(இ-ள்) ஆரூடங்கேட்கவந்தவர் ஊண்பட்சியிற் கேட்கில் வினவினன் பதியானது வாழ்வுமிகும் கலக்கமென்ப தொன்றுமில்லை உறவின் முறையார் வெளியூரிற் சென்றவர்கள் வந்து சேர்வர் மழையானது பெய்யும் களவென்பதுவுமில்லை தனது பலந்தழைத்துக் கதிர்விளையும் ஓர் பெண்ணைக்குறித்த பிரஸ்னையாகும் பிணியானது முற்றுந்தீரும் தன்குலஸ்திரீ பெண்ணைப்பெறுவள் வாணியம் செழிக்கும் பொன்பணிதிசேரும் அரசர்களையும் வென்றிடுவர் எ-று. 231

## 1-ம் விநாடி ஊணிலூன்பலன்

சொல்லலேயூணதனி லூணுமாகில்
  தொகுத்திடுவாய்நினைத்தபொருள் சிவந்தலோகம்
நல்லரத்தினவகையே நஷ்டங்காண்பாய்
  நாட்டிடிலேதன்னிடமோ ரிடத்திலுண்டு
செல்லவேகீழ்திக்கிற் கிரகத்தண்டை
  சிக்குமேமனுஷரால் மாதமொன்றில்
அல்லதோர்வாரத்திற் பலர்சம்பந்தத்
  தகப்படுமேதப்பாதென் றறிந்துகூறே.

(இ-ள்.) ஒன்றும் விநாடி ஊணில் ஊண்பலனுவது நினைத்த பொருள் சிவந்தலோகம் நவரத்தினமயமானவை நஷ்டமானது அது தனது வீட்டில் கீழ்த்திசையில் ஓரிடத்திலிருக்கின்றது. அவை மனுஷரால் ஒரு மாதத்தில் அல்லது ஓர் வாரத்தில் பலர் சம்பந்தத்தால் தப்பாமல் அகப்படுமென்று அவர்கட்குச் சொல்லுவாய் எ-று. 232

## 2-ம் விநாடி ஊணில் நடைபலன்

கூறவேயூணதனில் நடையுமாகில்
  கொடுபகைஞர்சோரார் பெண்வழியைச்சார்ந்தோர்
நேரவேபொதுநிறமா முயர்ந்தோன்வெள்ளி
  லிபியுளதுவெண்மைசிவப் புடையவஸ்து
சேரவேதென்கிழக்கிற் சென்றுமேற்குத்
  திசையிலேயுள்ளபொருள் பக்ஷமொன்றில்
தேறவேயோர்பெண்ணாற் சலமுமண்ணும்
  சேரிடத்திற்சிக்குமெனச் செப்புவாயே.

(இ-ள்) இரண்டாம்விநாடி ஊணில்நடைபலனுவது தனதுபெண் அல்லது மனைவியின் வழியைச் சார்ந்தோராகிய பகைவர் சோரனுனவன் மாநிறமுடையவன் உயர்ந்தவன் அபகரித்தவை அது வெள்ளியிலிபியுடைய வெண் சிவப்பாகிய வஸ்து அவை தென்கிழக்கிற் சென்று மேற்குத் திசையிலுள்ள பொருள் பட்சமொன்றில் ஓர் பெண்ணாற் சலமு மண்ணுமுள்ள சேரிடத்திற் சிக்குமெனச் செப்புவாய் எ-று. 233

### 3-ம் விநாடி ஊணில் அரசுபலன்

பார்க்கவேயூணதனி லரசுமாகிற்
 பணிதியதுதங்கம்பிணி வஸ்துவாகும்
சேர்க்கவேவவ்வழியில்பல வஸ்துபோக்கு
 திரிக்குநூல்தரிநீச்சர் மறையோரீனர்
ஆர்க்கவேயெடுத்துவட பாரிசத்தில்
 அங்ஙனேயொருமரத்தின் கீழ்கோயிலண்டை
ஏர்க்கவேபுதைத்ததுமுத் தினமுப்பட்ச
 மிதிற்கிடைக்குந்தடையில்லை யென்னலாமே.

(இ-ள்) மூன்றும் விநாடி ஊணில் அரசுபலனாவது கைசோர்ந்தது தங்கமாகிய பணிதியிணை வஸ்துவாகும் அது வழியில் சில பொருள்கள் நஷ்டமடைந்தது அதை பூனூல் தரித்தவர் அல்லது மறையோர் நீச்சர் ஈனர்களி லொருவருணத்தவரெடுத்தது அதை வடபாரிசத்தில் அங்கொரு கோயிலண்டை மரத்தின் கீழ் புதைத்து வைத்திருப்பவை இது மூன்றுதினம் அல்லது மூன்றுபட்சத்தில் யாதொரு தடையின்றி கிடைக்கும் எ-று. 234

### 4-ம் விநாடி ஊணில் துயில்பலன்

செப்பவேயூணதினிற் துயிலுமாகில்
 சேர்பூமிமண்ணது சம்பந்தமாகும்
ஒப்பவேசக்கிரா கிருதிமத்தி
 யுளத்துவாரமக்கினியிற் பட்டவஸ்து
துப்பறவேபொன்செம்பு பாத்திரங்கள்
 தொடவிதனையெடுத்தொரு வன்கையளிக்க
அப்பொழுதுவடமேற்கில் சென்றபேர்க்கு
 பத்திக்கிற்போனதுவு மகப்படாதே.

(இ-ள்) நான்காம் விநாடி ஊணிற்றுயிற் பலனாவது நினைத்துக் கேட்டது சேர்பூமி மண்ணின் சம்பந்தமானது அது சக்கிராதியாய் அதன்மத்தியில் வாரமுள்ள நெருப்பில் படப்பட்ட வஸ்து பொன் செம்பு பாத்திரமானவைகள் இவைகளை ஒருவனெடுத்து மற்றொருவனதுகையிற் கொடுத்தது வடமேற்கில் செல்லும்போது போனபோக்கானது மறுபடியும் அகப்படுவது கடினமாம் எ-று. 235

### 5-ம் விநாடி ஊணில் மரணபலன்

அகப்பட்டதுணதிலே மரணமாகின்
 ஆடையாபரணமுடன் சொர்ணவஸ்து

புகப்படாதேவர்பொருள் தானியாதி
போக்குதன்விரோதிகுலத் துதித்தோராலே
சுகப்படாயெடுத்தசொத்து கொடுக்கமாட்டார்
தொல்லையாங்கேடாலுந் தீங்கேயாகும்
பகைப்படாச்சந்தேகங் கேட்கத்தோன்றும்
பலிதமில்லைப்போனபொருள் பார்க்கொணாதே.

(இ-ள்.) ஐந்தாம் விநாடி ஊணில் மரணபலனாவது:—சென்று விட்டது ஆடையாபரணம் சொர்ணவஸ்து தேவாலயப் பொருள் தானியாதிகள் தனது விரோதியின் குலத்துதித்தோரால் எடுத்த சொத்து அவர் அதைக் கொடுக்கவுமாட்டார்கள் அது தொல்லையாலும் கேடாலும் தீங்கினாலும் பகைவரால் சந்தேகங் கேட்கத் தெரியும் போனபொருள் திரும்பியும் பார்க்கப் பலிதப்படாவாம் எ-று.

## நடையின்பலன்

நடையாகினிலைகுலைவ ரொன்னார்வெல்வர்
நவிலவேயுள்ளநிதி நஷ்டமாகும்
திடமில்லாக்கதிர்விளையுஞ் சேதமாகும்
சேயிழையாள்வாழ்க்கையது தினமுங்குன்றும்
இடையவேசுற்றம்போம் பொருளுஞ்சோர
தின்பமாய்மனங்கூடா வேட்கைசெல்லா
தடையாகுந்தொடுத்ததெல்லாஞ் சண்ணுமங்கே
தாரையேவார்த்திடுவன் சாற்றுங்காலே.

(இ-ள்.) நடைப்பட்சியிற்கேட்கில் தனது நிலைகுலையும் பகைவர் வெல்வர் தனநஷ்டம் கதிர்சாவியாய்ப் பயிர்ச்சேதமாகும் மனைவியர் வாழ்வு குன்றும் உறவினர் அகன்றிடுவர் பொருள்சென்றிடும் மனமானது கூடாது வேட்கைசெல்லாது தான் தொடுத்த காரியங்கள் தடையாகும் சகலமுந் தாரைவார்த்திடுவன் எ-று. 237

## 1-ம் விநாடி நடையில் நடைபலன்

என்னவேநடையதனில் நடையுமாகில்
எடுத்ததுபெண்ணணியும் நகைவெள்ளிபொன்னில்
சொன்னதுபூமியில் வெளியில்விழுந்தபோது
தொட்டெடுத்தோன் சிவலையான்கடையில்விற்க
முன்னமேவரும்போதும் மூலமாக
முறையாகக்கிடைக்கு மக்கினியின்றிக்கில்

சொன்னபடிசமீபம்நீர் பொதுவிலுண்டு
சொத்துவருமிருமாத மிருவாரத்தே.

(இ-ள்.) ஒன்ரும் விநாடி நடையில் நடைபலனானது பெண்க ளணியும் வெள்ளி பொன்னிற்செய்த நகையானது வெளியில் பூமியில் விழுந்தபோது சிவந்த நிறமுடையவன் எடுத்துத் தான்போய் கடையில் விற்கும்போது அங்கே வருகையில் அம்மூலமாகக் கிடைக்கும் அது அக்கினியின் றிக்கில் சலத்தின்சமீபம் பொதுவிலுள்ளது இரண்டுமாசம் அல்லது இரண்டுவாரத்திற் சொத்தானது கிடைக்கும் எ-று. 238

## 2-ம் விநாடி நடையி லரசுபலன்

வினவுவேநடையதனி லரசுமாகில்
மேவுமுபர்காலிசெம்மை கறுப்புவஸ்து
மனமகிழ்நிருதி மூலையிலிருந்து
வாயுவின் றிக்கினிலே வருங்காலத்தில்
தனதுகைதவறியது கிடைக்கும்பாரு
தனித்தொருவரெடுத்ததல்ல கீழேவீழ்தல்
கனத்ததண்டமபராதம் பிரயாசத்தாற்
கைக்கிட்டும்போனபொருள் கண்டுசொல்லே.

(இ-ள்.) இரண்டாம்விநாடி நடையிலரசு பலனாவது சென்றது காலி களவு சிவப்பு கறுப்பு வஸ்து தான் நிருதிமூலையிலிருந்து வாயுவின்றிக்கில் வருங்காலத்தில் தனது கைசோர்ந்துவிட்ட பொருளானது கீழே விழுந்ததன்றி ஒருவரெடுத்ததல்ல இவை தண்டனை அபராதம் பிரயாசத்தாற் போய்விட்ட பொருளானது கைக்குகிட்டும் எ-று. 239

## 3-ம் விநாடி நடையிற் றுயில்பலன்

வாரதுவும்நடையதனிற் றுயிலுமாகின்
வளர்சிவனிருப்பெந்திரக் கருவிதோஷில்
சேரவேயுடையவன்கை களவுபோதல்
திரும்பாதுசூத்திரர்கீழ் குலத்தோர்கள்வர்
ஊரிலேமுன்னிஷ்டன் பின்விரோதன்
ஓரிடத்திலுள்ளவன் கருவலாவன்
மீறியேதிருடியது கிடைக்காதங்கே
விவரமாய்ச்சொல்லிவிடு வினவுங்காலே.

(இ-ள்.) மூன்றும்விநாடி நடையிற்றுயில்பலனாவது வளர்க்கும் படியான சிவனது போலிற்செய்த எந்திரக்கருவி அதற்குடையவனாற் களவுபோனதை சூத்திரனை கீழ்குலத்தோன் கள்ளனானவன் முன்

னிஷ்டனுமிருந்து பின் விரோதியானவன் கருவலாயுள்ளவன் திருடி யது மீண்டுங் கிடைக்காதென்று விவரமாய்ச் சொல்லிவிடவும் எ-று.

### 4-ம் விநாடி நடையில் மரணபலன்

பகரவேநடையதனில் மரணமாகிற்
பலமுபற்சிலிகித பத்திரமும்போக்கு
நிகரமேவிரோதியுமுன் நேரஞ்செய்து
நேராகவெடுத்தது தென்றிசையிலுண்டு
அகலவேபோனபொருள் கிடைப்பதற்கு
அதிகபிரயாசைஎன்மே லாகவேண்டும்
சகலருக்குமுரைப்பதிலு மத்திபந்தான்
சந்தேகமாகவிதைச் சாற்றுவாயே.

(இ-ள்.) நான்காம் விநாடி நடையில் மரணபலனாவது பல விஷ யத்தா லெழுதப்பட்ட பத்திரமானது போக்குள்ளவை விரோதி யானவன் உளவாக நேசஞ்செய்து எடுத்தது அது தென்றிசையி லுண்டு போனபொருள் கிடைப்பதற்கு அதிகப் பிரயாசைப்பட்ட போதிலும் கிடைப்பது மத்திபமெனச் சந்தேகமாகவே சொல்லு வாய் எ-று. 241

### 5-ம் விநாடி நடையிலூன் பலன்

செல்லவேநடையதனி லூனுமாகிச்
சூழ்பஞ்சலோகவஸ்து வெந்திரம்போல்
நல்லவட்டத்துள்ளதுவும் நீளமான
நற்கயிறுள்ளது கொலுசுநகையும்போக்கு
இல்லறத்திலூழியக் காரபகரித்து
எடுத்திருக்கும்பொருள்வார மொன்றினிற்குள்
அல்லலறக்கிடைக்கும்பார் தவறில்லாமல்
அதுதப்பிலொருமாத மாகுந்தானே.

(இ-ள்.) ஐந்தாம் விநாடி நடையிலூண்பலனாவது கேட்ட பொருள் பஞ்சலோகத்தில் எந்திரமபோல வட்டமுள்ளது நீளமா னது கயிறுகிய கொலுசு நகையானது களவாடியது அது தனது வீட்டில் வேலைக்காரன் அபகரித்து எடுத்திருக்குஞ் சொத்தானது வாரம் ஒன்று அல்லது மாதமொன்றில் தவறின்றி கிடைக்கும் எ-று.

### அரசின் பலன்

அரசாகிற்புவிபோா மரசராலே
அனந்தபொருள்சன்மான மதிகமுண்டாம்
திரமானவரிசையுடன் செயமுந்தோன்றும்
தீவினைகள்தான்விலகும் தீங்கொன்றில்லை

பரம்பெற்றபெரியோர்கள் வந்துசேர்வர்
வழக்குவெல்லும்பயமில்லை மகிழ்ச்சியெய்தும்
புறைபோகும்களவில்லை பொல்லாங்கியாவும்
போக்குவிக்கும்கீர்த்தியுடன் புகழுமாமே.

(இ-ள்.) அரசுபட்சியிற் கேட்கில் மண்மனைவாழ்வைப் பற்றியது அரசர்களால் அனந்தபொருள் சேரும் அரசர்கள் மானமும் அதிகரிக்கும் மணவரிசை சுபகாரியம் நேரும் மகத்தான செயம் வாய்க்கும் தீவினை யனைத்தும் விலகும் தீங்கான விஷயமொன்றேனும் சோராது மவுனயோக ஞானிகள் பெரியோர்கள் வந்தடுப்பர் வழக்கானது வெல்லும் மகிழ்ச்சி யுண்டாகும் புரை களவுகாணாது பொல்லாங்கு யாவும் போக்குவிக்கும் கீர்த்தியும் புகழும் கிட்டிடச் செய்விக்கும் கெம்பீரமாக பாவற்று முடித்திடுவன் எ-று. 243

## 1-ம் விநாடி அரசிலரசு பலன்

ஆகவேலரசுதனி லரசுமாகில்
அதுகோயில்நகைவெண்மை செம்மைமஞ்சள்
லோகத்தில்ரத்தினங்கள் பதிந்தவஸ்து
நோக்கிடுவார்கள்வருட னிராசாங்கத்தார்
ஊகிக்கபெருந்தொகைதான் வடகிழக்கில்
உள்ளதுவும்பூமிக்குள் வடக்கேதூரம்
பாகமாயோராண்டி லரசராலே
படைத்திடவுங்கிடைத்துமெனப் பகரலாமே.

(இ-ள்.) ஒன்றும் விநாடி அரசி லரசு பலனாவது:—களவு போய்விட்டது கோயில்நகை அச்சொத்தானது வெண்மை செம்மை மஞ்சள் நிறங்களையுடையது பலலோகங்களில் இரத்தினங்கள் பதிந்த வஸ்துக்கள் இதை இருவர்களுடன் இராசாங்கத் தொழிலாளிகளுஞ் சேர்ந்து யெடுத்த பெருந்தொகையை வடகிழக்கிற்சென்று அங்குள்ள பூமிக்குள் வடபாரிசத்தில் வெகு தூரத்தில் அடக்கஞ்செய்திருப்பது அரசராலே ஓராண்டில் வாங்கிக் கொடுக்கவுங் கிடைக்குமெனப் பகர்வாய் எ-று. 244

## 2-ம் விநாடி அரசில் துயில் பலன்

சாற்றவேயரசுதனிற் றுயிலுமாயின்
சதிபுருஷாணிபணிதி யோடுதூரம்
தோற்றவேசெல்லுகையிற் காலைதன்னிற்
றொடர்ந்துமேசோர விரோதிகளுங்கூடி

ஏற்றவேகொலைசெய்ய வெத்தனித்தார்
இனிமேற்குத்திசைபோனார் கிழக்கிலிவ்வாறு
ஆற்றவோர்கம்மியனாற் கீழ்குலத்தோன்
அபகரித்தோன்பொருள்கிடைக்கப் படமாட்டாதே.

(இ-ள்.) இரண்டாம் விநாடி அரசில் துயில் பலனாவது:—சதி புருஷர்கள் அணியும்படியான பணிதியோடு தூரதேசஞ் செல்லுகையில் காலையில் இவர்களைத் தொடர்ந்து சோரரோடு தன் விரோதிகளுங் கூடி இவர்களை கொலைசெய்ய வெத்தனித்திருக்கையில் இவர் மேற்குத் திசையிற் சென்றனர் கிழக்குத்திசையி லிவ்வாறு நடக்க ஓர் கம்மியனாகிய கீழ்குலத்தோன் அபகரித்த பொருளானவை மீண்டுங் கிடைக்கமாட்டாது ஏ-று. 245

## 3-ம் விநாடி அரசியல் மரணபலன்

கிடைக்கவேயரசதனில் மரணமாயின்
கெம்பீரமானபொரு ளுபர்ந்ததாகும்
படைக்கவேசெம்மைவெண்மை ரத்தினங்கள்
பாக்கியதோராபரண மென்றுபோம்
தொடைக்கவேஸ்நானத்தில் சலசம்பத்
துள்ளதனில்விழுந்தபொருள் கிழக்குதிக்கில்
புடைக்கவேயெப்பொழுதுங் கிடைக்கமாட்டா
பொல்லாதுபலனில்லைப் புவியிற்றானே.

(இ-ள்.) மூன்றும் விநாடி அரசில் மரணபலனாவது:—கேட்டது கம்பீரமானபொருள் விலையுயர்ந்தவை செம்மை வெண்மை ரத்தினங்க ளிழைத்த ஓராபரணமானது தான் ஸ்நானஞ்செய்கையால் சகல சம்பந்தமாய் அதனுள் விழுந்தபொருள் கிழக்கிலென்று சொல்லலாம். அது எப்பொழுதுங் கிடைக்கமாட்டாது பொல்லாங்கைத்தரும் பலனில்லை ஏ-று. 246

## 4-ம் விநாடி அரசிய லூண்பலன்

புவியினிலரசதனி லூணுமாயின்
போனபொருளரசானி சொத்துமாகும்
கவியவேலோகமதி விலையதாகும்
காணவோர்பெண்வழியாற் போனதங்கே
தவிரவேவடமேற்கி லிருப்பதுண்டு
தனிக்கடிகைபத்துநல்ல தினமும்பத்தில்
குவிக்கவேகிடைக்குமென் றுறுதியாக
கூறுவாயெவர்க்குமீ குணமாய்த்தானே.

(இ-ள்.) நான்காம் விநாடி அரசிலுண் பலனாவது:—போன பொருளானது அரசர்களணியும் சொத்து விலையுயர்ந்த லோக மானவை அது ஓர் பெண் வழியிற்போன களவு அங்கு வடமேற்கி லிருப்பதுண்டு அவை கடிகை பத்து அல்லது தினம் பத்தில் கிடைக்குமென்று யாவருக்கும் சொல்லுவாய் எ-று. 247

## 5-ம் விநாடி அரசியல் நடைபலன்

குணமாகவரசதனில் நடையுமாயின்
கொள்ளுடிரசாயன வஸ்துவோடு
மணமாமலிகிதபத்திரமும் ரொக்கம்
வற்பபொருள்போனதுவுங் கிடைக்கும்பாரு
சணமாகுந்திருடர்நால் வர்க்குமேலாய்ச்
சந்திக்கச்சிலசாமான் மாதமாறில்
கணமேனுந்தப்பாது கிடைக்குமென்று
காணவேபுரைத்திடுவாய்க் கணக்காய்தானே.

(இ-ள்.) ஐந்தாம் விநாடி அரசியல் நடையனுவது:—சென்ற பொருள் இரசாயன வஸ்துவோடு சில லிகிதப் பத்திரமும் ரொக்க மும் களவுபோனது மறுபடியும் திருடர் நால்வருக்குள் சணமுண்டா கிச் சந்திக்கச் சில சாமான்கள் மாதமாறில் தப்பாது கிடைக்கு மென்று கணக்காக எல்லவர்க்கு முரைத்திடுவாய் எ-று. 248

## துயிலின்பலன்

பிடித்திடிலோ சாவதுவும் வந்துசேரும்
வம்புணியுந்துலையாது வதிகரிக்கும்
தரித்திடிலேபொருள்கூடா நிதியுங்காணுர்
சங்கடத்தில்நிலைகுலைவார் தானுமோங்கார்
விரித்திடிலேமனைவியவள் வெறுப்பதாவாள்
மென்மேலுந்துக்கமுடனலைவார்பாரும்
பரித்திடிவேசகலபொருள் நஷ்டமாகும்
பதங்குலைவரக்காலிற் பன்னுங்காலே.

(இ-ள்.) மரணபக்ஷியிற் கேட்கில் சாவானது நேரும் பிணியா னது வதைக்கும் பொருளானது சேராது நிதியானது கிட்டாது சங் கடமானதில் நிலைகுலைவார் தாங்களும் ஓங்கமாட்டார் மனையாளும் வெறுப்பாள் மென்மேலுந் துக்கத்தை யனுபவிப்பார் சகல பொருளை யுந் தாரைவார்ப்பார் சந்ததமும் பதங்குலைவர் எ-று. 249

## 1-ம் விநாடி துயிலிற் றுயில்பலன்

திறமாகுந்துயிலதனிற் றுயிலுமாயின்
செப்புவேனெவ்வனமாம் புருஷன்றானும்
உறமாகவோர்பெண்ணின் கைதனத்தை
யுறவாடியபகரித்துத் தூரதேசம்
தெரியாமற்றலைமறையச் சென்றபோர்க்குச்
சேரவருமவன்மூன்று வாரமப்பால்
அறியவேயதுமீறில் மாதமூன்றில்
அவன்போவான்வடகிழக்கி லகப்படாதே.

(இ-ள்.) ஒன்றாம்விநாடி துயிலிற் றுயில்பலனாவது:—எவ்வனமாகிய வாலிபனொருவன் ஓர் பெண்ணின் கையிலுள்ள தனத்தை உறவாடி ஏமாற்றி அபகரித்துத் தூரதேசம் போய்த் தலைமறையச்சென்றபோக்கு அது சேரவருவது மூன்று வாரம் மீறிடின் மூன்று மாதத்தின் அவன் இருவரோடு சேர்த்து வடகிழக்கிலிருந்து தென்மேற்கு திக்கிற் போவான். அப்பொழுதும் அப்பொருளானது கைக்குட்கிட்டாதென்றும் கூறுவாய் எ-று. 250

## 2-ம் விநாடி துயிலில் மரணபலன்

சூட்டவேதுயிலதனில் மரணமாயின்
சூழவேசிவன்மூலப் பொருளுமாகும்
காட்டவேகாணமற் போனவஸ்து
கழறவேவிரோதியா லெடுத்ததாகும்
பூட்டவேயதைப்பற்றிப் பார்க்குங்காலில்
பொருள்போக்குச்சமாச்சாரங் கிடைப்பதல்லால்
நீட்டவேகைகொடுப்பா ரொருவரில்லை
நிச்சயமாய்ச்சொல்லிவிடு நேரிற்றானே.

(இ-ள்.) இரண்டாம் விநாடி துயிலின் மரணபலனாவது:- சென்றது சிவபெருமானது மூலப்பொருள் காணமற் போய்விட்ட வஸ்து விரோதியாளெடுத்த களவாகும். அதைப்பற்றிப் பார்க்குங்கால் பொருள் போக்குச் சமாச்சாரம் கிடைக்குமேயன்றி கையிற் கொடுப்பவர் ஒருவரேனு மில்லையென நிச்சயமாய்ச் சொல்லிவிடுவாய் எ-று.

## 3-ம் விநாடி துயிலி லூன்பலன்

சாற்றவேதுயிலதனி லூனுமாகிற்
சரிகைதுணிபொன்வெள்ளி பொருளும்போக்காம்
நாற்றிசையிலிருக்குமிடங் குடும்பத்துள்ளே
நங்கையவள்கையினாற் போனசொத்து

மாற்றவேகாலுதினத் துள்வீட்டிற்குள்
வந்துவிடுமவர்களால் வரிசையாக
ஏற்றவேயீசான்யம் வடக்குத்திக்கில்
இருந்தகப்படுமென்றே யியம்பலாமே.

(இ-ள்.) மூன்றும் விநாடி துயிலி லூண்பலனுவது:—போன சொத்து சரிகைதுணி பொன் வெள்ளி பொருள்போக்கு அது தன் குடும்பத்துள்ளே பெண்பிள்ளை கையிற் சேர்ந்துவிட்டது அவை காலு தினத்துள் வீட்டிற்குள் ஈசானியம் வடக்கு திக்கிலிருந்து அகப்படுவது நிச்சயம் என்றுரைப்பாய் எ-று. 252

## 4-ம் விநாடி துயிலில் நடைபலன்

இயம்பவேதுயிலதனில் நடையுமாயின்
எழில்வாகனுதியுட னுழவுவஸ்து
சுயம்படவேயேந்திராதி கருவியொன்றை
தொட்டெடுத்துப்போனதுதான் களவுமாகும்
நயம்படவேயக்கினியின் றிக்கிருந்து
நல்குமேயதிசுலப மாகத்தானும்
வயம்படவேபொருள்வருந் துள்ளேசிக்கும்
வழியதனையுலகோர்க்கு வகுத்துச்சொல்லே.

(இ-ள்.) நான்காம்விநாடியில் நடைபலனுவது:- சென்ற பொருள் வாகனுதியாகிய உழவு வஸ்து ஏந்திரக்கருவி யொன்றை எடுத்துப் போனதுதான் களவாடியது அது அக்கினியின் றிக்கிலிருந்து அதி சுலபமாய் பொருள்வந்து வீட்டினுட்சிக்கும் என்பதாய் உலகிலுள்ள வர்க்கு வகுத்துச் சொல்லுவாய் எ-று. 253

## 5-ம் விநாடி துயிலி லரசுபலன்

தடையறவேதுயிலதனி லரசுமாயின்
தார்குழலாளணிந்திருக்கும் போதேபோக்கு
இடையிலேயயல்மனுஷன் வசத்திலுண்டு
இப்பொழுதுவடகிழக்கிற் றூரதேசம்
நடையிலேசுயசாதி சமமானோரால்
நகையிருப்புத்தன்கைக்குப் பக்ஷமொன்றில்
அடையவேசமாச்சாரத் துடன்கிடைக்கும்
அல்லலறப்பொருள்வருத்து மாகுந்தானே.

(இ-ள்.) ஐந்தாம் விநாடி துயிலி லரசுபலனுவது:- அச்சொத்து பெண்பிள்ளையானவ ளணிந்திருக்கும்போதே போக்கானவை அது இடையில் அயல்மனுஷன் வசத்திலிருப்பது இப்பொழுதுவடகிழக்கில்

னாதேசத்தில் சுயசாதி சமமா யிருக்கப்பட்டவரால் அந் நகையா னது தன் கைக்குப் பக்ஷமொன்றில் அதின் சமாச்சாரங் கிடைப்ப தோடு அப்பொருளும் வந்து சேரும் எ-று. 254

## மரணத்தின் பலன்

மரித்திடிலேசாவதுவும் வந்துசேரும்
வன்பிணியுந்துலையாது வதிகரிக்கும்
தரித்திடிலேபொருள்கூடா நிதியுங்காணார்
சங்கடத்தில்நிலைகுலைவார் தானுமோங்கார்
விரித்திடிலேமனைவியவள் வெறுப்பதாவாள்
மென்மேலுந்துக்கமுட னலைவார்பாரும்
பரித்திடவேசகலபொருள் நஷ்டமாகும்
பதங்குலைவரக்காலிற் பண்ணுங்காலே.

(இ-ள்.) மரணபக்ஷியிற் கேட்கில் சாவானதுநேரும் பிணியா னது வதைக்கும். பொருளானது சேராது நிதியானது கிட்டாது சங்கடமானதில் நிலைகுலைவார் தாங்களும் ஓங்கமாட்டார். மனையாளும் வெறுப்பாவாள் மென்மேலுந் துக்கத்தை யனுபவிப்பார் சகல பொரு ளையுந் தாரை வார்ப்பார் சந்ததமும் பதங்குலைவார் எ-று. 255

## 1-ம் விநாடி மரணத்தின் மரணபலன்

கொண்டுமேமரணத்தில் மரணமாயின்
கூறிடவும்பெண்ணொருத்திக் குடும்பந்தன்னில்
விண்டுமேவிரோதமாய்ச் சேலைரெண்டோடு
வெளிப்பட்டார்கஷ்டமதாய்த் தண்ணீர்தன்னில்
கண்டிடவேயிவ்வஸ்துத் தோன்றும்பாரு
கடல்கிழக்குத்தெற்கினிலே பதினோர்நாளில்
அண்டிடவேயிதைக்குறித்த விந்தைதன்னை
அறியலாமென்றுநீயை யமறச்செப்பே.

(இ-ள்.) ஒன்றும் விநாடி மரணத்தில் மரணபலனாவது:—சொல் லுங்கால் தன் குடும்பத்தில் ஓர்பெண்ணானவள் விரோதமாய் இரண்டு சேலையுடன் கஷ்டந் தாளாமல் வெளிப்பட்ட சேதியானது தண்ணீ ரிற் காணும்படியாய் அவ் வஸ்தானது தெரியும் இது கடல் கிழக்கு தெற்கில் பதினோர்நாளில் இதைக் குறித்த விந்தையானது சந்தேக மற அறியலாமென்று நீ அமைவாய்ச் சொல்லுவாய் எ-று. 256

## 2-ம் விநாடி மரணத்தி லூண்பலன்

பண்பாகமரணத்தி லூணுமாயின்
பகர்மிருக்ந்தாதுமா முறிவுபட்டு

வண்மையாயவ்வஸ்து சமீபத்துள்ள
  வவனாலேயபகரித்து வடபால்சென்று
உண்மையாய்த்தென்பாலிற் போயிருக்கும்
  உள்ளபொருள்வடபாலிற் கிட்டுங்காலம்
தண்மையாய்வாரமா றலதுமாதம்
  தன்னிலுட்கிடைப்பதுவுந் தடையிராதே.

(இ-ள்.) இரண்டாம் விநாடி மாணத்தி னூண்பலனாவது சென்றது மிருகம் தாது மரம் முறிவுபட்டுள்ள வஸ்து, அது சமீபத்துள்ளவனாலே அபகரித்து வடபால்சென்று அங்கிருந்து தென்பாலிற் போயிருக்கும். அப்பொருளானது மீண்டும் வடபாலிற்கிட்டுங் காலமானது வாரம் ஆறு அல்லது மாதம் ஆறில் தடையில்லாது கிடைக்கும் எ-று. 257

## 3-ம் விநாடி மரணத்தின் நடைபலன்

வருக்கவேமரணத்தில் நடையுமாயின்
  வஸ்துமூவறிவுடைய சீவனாகும்
மிருக்கவேயிருவரா லபகரித்து
  மேற்கிருந்துகீழ்த்திசையிற் போனதாகும்
தொருக்கவவ்விடர்தனக் குறித்தோன்சூத்திரன்
  சூழ்ந்துளான்றினம்பதினொன் றதுவயீறில்
பருக்கவேமூவாரம் பொருளிரைத்தால்
  பற்றிவருமவ்வுடைமை பண்பாய்த்தானே.

(இ-ள்.) மூன்றும் விநாடி மாணத்தில் நடைபலனானது போன வஸ்து மூவறிவுடைய சீவனை இருவரால் அபகரித்து மேற்கிலிருந்து கிழக்குத் திசையிற்போனது அவ்விடத்தில் தனக்குரியோனான சூத்திரன் சூழ்ந்துள்ளவனால் பதினொருதினத்தில் அப்பொருள்கள் கிட்டும் மீறின் மூன்று வாரத்தில் பொருட்செலவு செய்யவும் அவ்வுடைமைகள் தன் கையிற் சேரும் எ-று. 258

## 4-ம் விநாடி மரணத்தி லரசுபலன்

நேரிலேமரணத்தி லரசுமாயின்
  நிலையானரொக்கதன பொன்னும்வஸ்து
சேரவேபோனதுவுங் கிராமத்தண்டை
  சொல்லுவேன்றனக்கறிந்த சிறியோராலே
கோரவேயபகரித்த பொருளுமாகும்
  குணமாகவிரைவினிலே கிடைக்கும்பாரு
நீரமாயப்பொருளுந் தடையிராமற்
  கிக்குமெனவுரைத்திடுவாய்ச் சிறப்பாய்த்தானே.

(இ-ள்.) நான்காம்விநாடி மாணத்தி லரசுபலனாவது, போய்விட்டது ரொக்கதனம் பொன்னாகிய வஸ்து அது கிராமத்தண்டை கைசோர்ந்தது தனக்கறிந்த சிறியோரால் அபகரித்த பொருளாதலால் விரைவில் தடையில்லாது கிடைக்குமென்பதாய் யாவருக்குந் தெளியச் சொல்லுவாய் எ-று. 259

## 5-ம் விநாடி மரணத்திற் றுயில் பலன்

அமையவேமரணத்திற் றுயிலுமாயின்
அனேகராற்சங்க மூலத்தாலற்பு
சமயத்தாற்சிலபூமி சம்பந்தத்தாற்
றர்க்கத்தாற்சுபஸ்தான சொர்ணரத்தினம்
இமையசம்பந்தத்தாற் பாலியர்க்கு
ஏற்கவேநஷ்டஞ்செய் பொருள்பரித்து
திமிரவேசிசுக்களையு மரணஹேது
செய்கதனாற்போனபொருள் சிக்காதென்னே.

(இ-ள்.) ஐந்தாம் விநாடி மரணத்திற் றுயில்பலனாவது, அனேகவற்பராலும் கங்கமூலச் சமயத்தாலும் சில பூமி சம்பத்தாலும் தர்க்க குதர்க்கத்தாலும் சுயஸ்தான சொர்ண ரத்தினத்தாலும் இமையா நாட்டத்தோர் சம்பந்தத்தாலும் பாலியற்கு நஷ்டஞ்செய் பொருளினாலும் சிசுக்களை மரணஹேது செய்வதினாலும் போன பொருளானது சிக்காதென்பதாம் எ-று. 260

பூர்வபக்ஷம் முற்றிற்று.



# அமரபக்ஷம் ஊணின் பலன்

பகைக்கெடுதிபுரைகளவு போக்குங்காணூர்
பலகாலும்வாழ்வுபெருகு மக்களுண்டாம்
தகைமையுடன்வழிபயணஞ் செல்லநன்று
தர்க்கம்போர்கலக்கமோ சற்றுமில்லை
திகைத்திடவேமழையுண்டாம் பயிர்களோங்கிச்
செந்நெல்விளைந்திடுமகமுஞ் செழிக்குமேலாய்
துகைபெருகுஞ்சம்பத்து வதிகரிக்கும்
துன்பவினையற்றிடும்புள் ளூண்ணுங்காலே.

(இ-ள்.) அமரபக்ஷத்தினூல் ஊண்பக்ஷியின் பலனாவது, பகை கெடுதி புரைகளவு போக்கென்பதொன்றும் நேராது. எக்காலும் வாழ் வானது பெருகி புத்திரசம்பத்துண்டாகும் வழிப்பயணஞ் செல்ல நன்மையைத் தரும் தர்க்கம் யோர்கலக்கங் கிஞ்சிற்றேனுமில்லை மழை யானது பொழிந்து பயிர்களோங்கி செந்நெல் விளைந்து செழிப்பாகும் எண்ணற்ற துகைபெருகி சம்பத்ததிகரித்திடும். துன்பவினையாவது அற்றுவிடும் எ-று. 261

## ஊணி லூண் பலன்

சாற்றவேயூணதினி லூணுமாகில்
சஞ்சாரத்தனேகவித பணிதிவெள்ளி
போற்றவேசொர்ணங்கள் தவரல்போக்கு
போனதுவும்வடக்குதிவ்ய ஸ்தலசஞ்சாரத்
தேற்கவேகடலருகி லுள்ளதாகும்
இதுபக்ஷம்நான்கலது மாதம்நான்கில்
மாற்றவேசிலதுவகை கிடைக்கும்ரெண்டு
மனுஷாரற்பயமுண்டாம் வசனிப்பாயே.

(இ-ள்.) ஊணிலூன் பலனாவது பலவித ஆபரணங்களும் வெள்ளி பொன் நாணயங்களும் சஞ்சாரஞ் செய்யுமிடத்தில் கைசோர் ந்து போய்விட்டது. அதற்கு வடதிக்கிலுள்ள திவ்விய ஸ்தலத்தி னருகில் கடற்கடையில் பதனஞ்செய்திருப்பவை பக்ஷம் நான்கு அல் லது மாதம் நான்கில் சில சொத்துக்கள் இரண்டு மனிதர்களாற் கிடைக்குமென்பாய் எ-று. 162

## ஊணில் நடைபலன்

சிக்கவேயூணதனில் நடையுமாகின்
சேர்விகிதப்பத்திரங்கள் தஸ்தாவேசு
முக்கியமாயாசர்களி லுடம்படிக்கை
முற்றுமேசுபஸ்தான மறதிபோக்கு

அக்கரைவாகனமலது பாதசாரி
யாய்வந்தமனிதரிட மவைகளுண்டு
தக்கபடியிவனுக்கெவ் விதமுங்கிட்டும்
தாட்டியாயினதையெடுத்துச் சாற்றுவாயே.

(இ-ள்) ஊணில் நடைபலனானது விகிதப் பத்திரங்கள் தர்வேசுகள் அரசர்களி னுடம்படிக்கை முதலியன சுயஸ்தானமாகிய தனது வீட்டினுள் மறந்து போக்கடித்த வஸ்துக்களானது வாகனமேறியோ அல்லது பாதசாரியாயோ அயலிலிருந்துவந்த மனிதரிடம் அவைகள் அடங்கி யிருக்கின்றன அவை இவனுக் கெவ்விதத்திலேனும் கிட்டுமென்பதாய்ச் சொல்லவும் எ-று. 263

### ஊணிலரசின் பலன்

வசனிக்கவூணதனி லரசுமாயின்
வாகாகநாணயங்க ளுயர்ந்தவஸ்து
விசனிக்கவெள்ளிசொர்ண மணியும்லோகம்
வித்துவிரைசம்பந்த மானபோக்கு
அசனிக்கவுத்தரத்திற் செல்லநஷ்டம்
ஆனதுவுங்கீழோனே யபகரித்தோன்
துசனிக்கமூவாரம் யனமூவாரற்
குதிக்குமேசிலசொத்து மன்னராலே.

(இ-ள்) ஊணிலரசுபலனானது உயர்ந்த வஸ்தாகிய நாணயங்கள் அதுவெள்ளி பொன்னு லணியப்பட்ட லோகம் அதோடு இன்னும் வித்துவிரை சம்பந்தமானபோக்கு அவை உத்தரபாரிசஞ் செல்லுகையில் காணாமற்போன நஷ்டம் அங்கொரு கீழ்ச்சாதியோ மூவரால் அபகரித்தவை அதில் சில சொத்துகள் அயனமூன்று அல்லது ஆண்டு மூன்றில் அரசால் கிடைக்குமென்பாய் எ-று. 264

### ஊணிற்றுயில் பலன்

சுருக்கமாயூணதனிற் றுயிலுமாயின்
சுயமானவுயர்ந்தகல் நகையாம்வஸ்து
உருக்கொணுச்சிலாவகைசிற் பத்துவந்தேவர்க்
குள்ளதுதான்பகைளுர்விரோ தத்தாற்போக்கு
பெருக்கமாயிதைக்காப்பாற் றுவனெடுத்து
பின்னுமேற்கினில்கோயில் வடபால்பூமி
வருக்கமாய்ப்புதைத்துசில கற்கள்மேலே
வடையாளம்வைத்திருக்கு மண்ணிற்றுனே.

(இ-ள்) ஊணிற்றுயில் பலனாவது, சுயமாகிய வுயர்ந்தகல்பதித்த நகையானவஸ்து அது சிற்பனால் உருக்கி வார்க்கொணாத தெய்வ வுருவாய்ப் பூத்து வந்தவனெடுத்து அதின்மேற்கிலுள்ள கோயிலுக்கு வடபாரிசத்துள்ள பூமியிற் புதைத்துவைத்து அங்கு சில கற்களை அடையாளமாகவைத்து மண்ணினால் மூடியிருப்பனவாம் எ-று. 265

### ஊணில் மரணபலன்

சிதருமல்ஊண தனில் மரணமாயின்
சேர்வெள்ளிசொர்ணவகை வஸ்துபோக்கு
பதருமற்குடும்பத்தி லொருத்திசையிற்
பற்றியதுவிருவர்சம் பந்தமாகும்
கதருமற்றன்வேலைக் காரனாலே
கண்டுபிடிபட்டதிது கையிற்சேர
வதருமலெப்பிரயத் தினஞ்செய்தாலும்
வாராதுபோனபொருள் வகையாய்ச்சொல்லே.

(இ-ள்) ஊணில் மரணபலனாவது, வெள்ளி சொர்ணத்தாற் செய்த நகையாகிய வஸ்துகள்போக்கு அது குடும்பத்தி லொருத்தி கையிற் சிக்கியது மீண்டும் இருவர் சம்பந்தமாகி தனது வேலைக்காரனாலே கண்டுபிடிக்கப்பட்டது இதுகையிற் சேர எவ்விதப்பிரயத்தினம் செய்தபோதினும் போனபொருளானது திரும்பவும் அகப்படாது எ-று. 266

### நடையின் பலன்

தொல்லையறவெற்றியுடன் சுகமுண்டாகும்
சூழ்வினைகளற்றுவிடும் தோடந்தீரும்
எல்லையினிற்செய்கருமம் நன்மையாகும்
இன்பமுடன்மணமுண்டா மகமுந்தாழார்
இல்லையேகெதியொன் றுந் தூரமுள்ளோர்
இடமின்றிவந்திடுவர் மழையுமுண்டாம்
கொல்லையிலேபயிர்விளையுங் குறித்ததெல்லாம்
கூடிவரும்பக்ஷியது நடக்கிலென்னே.

(இ-ள்) நடைப்பக்ஷியின் பலனாவது பிணியானது நீங்கும் தோஷமானது தீரும் செய்த கருமமானது பலிக்கும் மணமானது கூடும் அகமானது தழைக்கும் இருப்பிடத்திலுள்ள எலிகளிடமகப்பட்டு அவைகள் இழுத்துக்கொண்டுபோய் கீழே போட்டுவிட அது பூமியில் புதைந்து மறைந்திருக்கின்றது அல்லது இருபத்தேழாம் நாளுக்குள் கையிற்சிக்கும் ஆனாலவை அகப்படாமற் போகாது எ-று.

## நடையில் நடைபலன்

என்னவேநடையதனில் நடையுமாயின்
எழிலாடுமாடுவெண்மை கறுப்புமாகும்
அன்னதோர்பந்தனத்துட் கட்டுப்பட்டு
ஆனதால்தென்பக்கத் திருக்குதங்கே
முன்னமேகொஞ்சம்பொருட் செலவுசெய்யு
முயற்சியாற்போனபொருள் முழுதுஞ்சேரும்
சொன்னசொற்றவறாது வருந்துவோர்க்குத்
துரையாகசொல்லிவிடுஞ் சுருக்கிற்றானே.

(இ-ள்.) நடையில் நடைபலனாவது வெண்மை கருப்புநிறமாகிய ஆடு மாடுகள் களவுபோய் அனுபந்தனக்கட்டுபட்டு தென்பக்கத்தில் அடக்கஞ் செய்திருப்பது சில திரவியச் செலவு செய்திடுங்கால் சென்றுபோன காலிசீவன்கள் யாவும் பழுதின்றி கிடைக்குமென்று சொன்னசொற் றவறாது கேட்பவர்க்கு விரைவிற் கூறுவாய் எ-று.

## நடையி லரசுபலன்

மண்ணினில்நடையதனி லரசுமாயின்
வளமானசொர்னநகை லோகமாகும்
பண்ணியதுவெண்மைசெம்மை மஞ்சள்நீலம்
பச்சையுடன்பஞ்சவர்ண மாயிருக்கும்
அன்னதுதானிருப்பிடத்திற் பூமிக்குள்ளே
அகப்பட்டுயெலிகளால் மறைந்திருக்கும்
திண்ணமாயிருபத்தேழ் நாளிற்குள்ளே
சிக்குமேயப்பொருளுஞ் சிதறிடாதே.

(இ-ள்.) நடையி லரசுபலனாவது சொர்னநகையானது லோகத்தில் வெண்மை செம்மை மஞ்சள் நீலம் பச்சையாகிய பஞ்சவர்ணமாயிருக்கும் அது தன் னிருப்பிடத்திலுள்ள எலிகளிடம் அகப்பட்டு அவைக ளிழுத்துக்கொண்டுபோய் கீழே போட்டுவிட அது பூமியில் புதைந்து மறைந்திருக்கின்றது அங்கது இருபத்தேழ் நாளிற்குள் கையிற் சிக்கும் ஆனு லவை அகப்படாமற் போகாது எ-று. 268

## நடையிற் றுயில்பலன்

சலிப்பறவேநடையதனிற் றுயிலுமாயின்
தாம்பிரங்கல்லுயர்பொருளும் லோகவர்க்கம்
ஒலிக்கவேபணித்தரமக் கினியிற்காச்சி
யுள்ளதவைபூமிக்குள் சலசம்பந்தம்

வலிக்குமிவ்விடங்களிலே யிருப்பதுண்டு
வாகாகக்கிடைக்காது மத்திபந்தான்
கெலிக்கவேபொருள்சேரா பணிதிகிட்டா
கேடாகுநட்டமாங் கேட்கொணுதே.

(இ-ள்.) நடையிற்றுயில் பலனுவது தாம்பிரத்தில் கல் பதித்த உயர்ந்த பொருளாகிய லோகவர்க்கம் அது அக்கினியிற் காச்சிப் பணித்தரமாய்ச் செய்தவை அவை பூமிக்குள் சலசம்பந்தமானவிடத்தில் இருப்பதுண்டு அப்பொருள் கிடைக்காது பணிதி சேராது மத்திபமாம் எ-று. 269

## நடையில் மரணபலன்

பகைபறவேநடையதனில் மரணமாயின்
போனபொருளுளவாளி யபகரித்தல்
சிறையாகத்தன்னில்லந் தென்கிழக்கில்
சேரவோர்ஸ்திரீமூல மிருக்குதங்கே
விரைவாகவோர்தாழ்ந்த சாதியான
மெல்லியர்பாலிவ்விஷம் வெளியாய்ப்பின்னும்
அறையவேயப்பொருளுஞ் சுவாதீனத்தில்
ஆகாதுமத்திபந்தா னடுத்துச்சொல்லே.

(இ-ள்) நடையில் மரணபலனுவது போனபொருள் உளவாளியால் அபகரித்து தனது வீட்டில் தென்கிழக்கில் ஓர் ஸ்திரீமூலமாயிருப்பது அங்கோர் தாழ்ந்த சாதியான ஓர் பெண்பிள்ளை மூலமாய் அச் சேதியானது வெளிப்பட்டும் பின் அப்பொருள் தன் சுவாதீனத்தில் வரமாட்டாது மத்திபமெனச் சொல்லுவாய் எ-று. 271

## நடையில் ஊண்பலன்

வகையாகநடையதனி லூணமாயின்
வாழ்சீவவஸ்தாடு மாடுகாற்கால்
திகையாதுபோக்குவெண் சிவப்புவர்ணம்
திசைகிழக்குவடக்கினிலே கட்டுபட்டு
பகையாதுவிருவரால் கிரகத்துள்ளே
பதுங்கவும்வைத்ததுதென் மேற்குத்திக்கில்
புகையாதுபிரயாசை மனிதர்மூலம்
பொன்பொருள்கிட்டுமது புரையிலாதே.

(இ-ள்.) நடையிலூண்பலனுவது தானனுபவிக்கப்பட்ட சீவவஸ்தாகிய ஆடுமாடுகள்நாற்கால் மிருகபோக்குள்ளதுவெண்மைசிவப்புள்ளவை அவைகள்கிழக்கு வடக்கினிலேகட்டுபட்டு அக்கிரகத்துள் இரு

வால் தென்மேற்குதிக்கில் பதுங்கவைத்ததுண்டு அதற்குத்தக்கப் பிரயாசைப்படுவதில் சிலர் மனிதர்மூலமாய்ப்போன உருப்படிகள் மறுபடியும் புரையின்றிகிட்டும் எ-று. 272

## அரசின் பலன்

உற்றதோர்செயமுண்டாஞ் சுகமுந்தோன்றும்
ஊர்ப்பயணஞ்செல்லுங்கா லின்பமெய்தும்
பற்றவேமழையற்பங் கலக்கமேகும்
பற்பொருளுங்கைகூடும் பணிதிசேரும்
சுற்றமுமடுத்திடுவர் வெற்றியுண்டாம்
சுகித்திடவேலாபமுடன் சுபமுங்கூடும்
நற்றமாய்ச்சுக சௌக்கியமும்நல்கும்
நவிலவும்பட்சியது லரசினுக்கே.

(இ-ள்.) அரசுபட்சியின் பலனாவது செயமானதுண்டாகும் சுகமானது தோன்றும் ஊர்பயணஞ்செல்லுகையிலின்பமுதிக்கும் மழை கொஞ்சமாய்ப் பெய்யும் கலக்கமானதகலும் பலபொருளுங் கைகூடும் பணிதியானது சேரும் சுற்றமாகிய உறவினர்கள் அடுத்திடுவர் வெற்றியானது விளங்கும் இலாபமானது பெருகும் சுபமானதுநிறைவேறும் சுகசௌக்கியமமையும் எ-று. 273

## அரசி லரசுபலன்

வைப்பாகவரசிதனி லரசுமாயின்
மாரசிதஞ்சொர்னபொருள் கருவிபோக்கு
இப்பாரில்மதித்துளை விநோதமான
இதுதெய்வமனுஷ்யவுயிர்க் கருவியாகும்
ஒப்பவேவுயர்குலத்தோ னிதைக்கைப்பற்றி
யோசித்தோர்பெண்ணின்கை யளித்ததாகும்
தப்பாமும்மாதத்துட் பிறராற்கிட்டும்
தடையில்லையரசாற் சாருந்தானே.

(இ-ள்.) அரசிலரசுபலனாவது, வெள்ளியினாலும் சொர்னத்தினாலும் செய்தகருவியாகிய பொருள்போக்கு அதின்மத்தியில் விநோதமாகிய துளையொன்றுண்டு அது தெய்வமனுஷ்ய வுயிர்க்கருவி யென்பதாம் அதனை உயர்குலத்தோனொருவன் கைப்பற்றி பின்னும் யோசித்து ஓர் பெண்ணின் கையிற்கொடுத்துள்ளது இது மூன்றுமாதத்தினுள் பிறரால்தடையின்றி இராசாங்கமூலமாய் தன் கைக்குக் கிட்டும் எ-று. 274

## அரசிற் றுயில்பலன்

சாரவேயரசதனிற் றுயிலுமாயின்
தங்கவெள்ளிபொரு ளலங்காரவஸ்து
சேரவேவெண்மைநிறம் போக்கதாகும்
நினைத்தொன்னார்சிலநாளா யுத்தேசித்தே
கோறவேகிரகிக்கப் பட்டதாகும்
கூறுவேன்பரதேசஞ் சலத்தின்மீது
ஏறவுஞ்செல்விக்கும் பொருளுஞ்சிக்கா
தென்றிடவுமத்தியமா யியம்புவாயே.

(இ-ள்) அரசிற்றுயில் பலனாவது தங்கம் வெள்ளியினாற் செய்த பொருளானது அலங்காரவஸ்து அதுவெண்மை நிறமுள்ளது போக்கானவை அதைப் பகைவர் சிலநாளாயுத்தேசித்து கிரகிக்கப்பட்டது அவை பரதேசஞ் சலத்தின்மீது சென்றபேர்க்கு அப்பொருளானது கைக்குச் சிக்காது மத்திபமென்பாய் எ-று. 275

## அரசில் மரணபலன்

விளம்பவேயரசதனில் மரணமாயின்
விரையநஷ்டம்பொருள்வெளுப்பு கறுப்புமாகும்
வளம்படவேநீளமுள லோகத்தாலும்
வைத்தபணிசித்திராதி லிகிதமுண்டாம்
இளம்பிடவேகிடைக்காவாம் பலவஸ்துக்குள்
கேடுறமேநஷ்டமாய்க் கேடுநேரும்
உளம்படவேயப்பொருளுங் கைக்குட்கிட்டா
தோதுங்காற்பொருணட்ட முண்டாம்பாரே.

(இ-ள்) அரசில்மரணபலனாவது, விரையமாகியநஷ்டப்பொருள் வெளுப்புங்கறுப்புமாயுள்ள நீலமுடைய லோகத்தாற்செய்த பணிதியானது சித்திரமுள்ள லிகிதபதிப்புடையவஸ்துபோக்கானதில் அது மறுபடியுங் கிடைக்காவாம் இன்னும் அதோடு பல பொருள்கேட்டு நஷ்டமாய் கேடுண்டாகுமேயன்றி சென்றபொருள் கைக்குக்கிட்டாது எ-று. 276

## அரசி லூண்பலன்

அடுத்துமேயரசதனி லூணுமாயின்
அதுமூலவிருட்சாதி பணிதிபத்திரம்
எடுத்துநீலஞ்செம்மை வெண்மைதன்னில்
இழைத்ததுவுங்காய்ந்த சம்பந்தமாகும்

தொடுத்தது சவாரியிற் சொத்துபோக்கு
சூத்திரனும்நீச்சனுங்கை கிடைத்ததங்கே
தடுத்தரசன்பட்சமொன்றில் மாதமொன்றில்
தான்கொடுப்பன் வடகிழக்கிற் றங்கிடாதே.

(இ-ள்.) அரசிலுண்பலனுவது மூலவிருட்சபணி பத்திரமானது நீலம் செம்மை வெண்மைநிறத்தில் இழைத்தது காய்ந்த சம்பந்தமானவஸ்து தான் சவாரியிற்போகையில் அச்சொத்து போக்கானது சூத்திரனும் நீச்சனும் கூடிச்செல்கையில் அவர்கள் கையில் கிடைத்தது அது இராசாங்கமூலமாய் பட்சமொன்று அல்லது மாதமொன்றில் தன்கையிற் கொடுப்பர் அவை வடகிழக்கிற் றங்கியிருந்து வந்து நேரும் எ-று. 277

## அரசில் நடைபலன்

தங்கவேயரசதனில் நடையுமாயின்
தவறியதுவஸ்திரக் கடிதாசிவெண்மை
அங்ஙனேமூல வஸ்துக்களாலே
யமைந்தபொருள்கைமறதி யாலேபோக்கு
பொங்கவேவியாபாரச் சொத்துமங்கே
புகலவேகிழக்கதனி லிருந்தெடுத்தல்
சங்கவேயிருவராற் கிடைக்கும்பாரு
நடையறவேயுத்தமமாஞ் சலிப்பிராதே.

(இ-ள்.) அரசில் நடைபலனுவது தவறியது வெண்மைநிறமாகிய வஸ்திரகடிதாசு அது மூலவஸ்துக்களாலே யமைக்கப்பட்டது மறதியாய் விழுந்தபோக்கு அவை வியாபாரச் சொத்துமாகும் அதைக் கிழக்கிலிருந்தெடுத்தவை மறுபடியும் அப்பொருள் இவராற் றடையின்றி கிடைக்கும் எ-று. 278

## துயிலின் பலன்

உதித்திடும்பிணியதுவு மதிகரிக்கும்
உள்ள தீவினைமூண்டு வொடுங்கச்செய்யும்
சதைத்திடும்மழையின்றி விளைவுகுன்றும்
தான்படைத்ததனமெல்லாம் தாரைவார்க்கும்
கதித்திடவேநெஞ்சதனிற் றோஷமீறும்
கவலையுடன்கருமகாரியஞ் செய்விக்கும்
விதித்திடும்பலதுன்ப மிடியுண்டாகும்
விரையமதுசெய்யுமே துயிலிற்றனே.

(இ-ள்.) துயில்பட்சியின் பலனுவது, பிணியான ததிகரிக்கும் அதோடு தீவினைமூண்டு ஒடுங்கச்செய்யவும் மழையானதில்லாது பயி

ரானது சாவியாய்விடும் தான் சேகரித்த தனங்களைத் தாரைவார்க் கச் செய்யும் நெஞ்சில் நினைத்தநினைவைத் தடுமாறச் செய்விக்கும் கவலையுண்டாகும்படி சூதககருமகாரியங்களை முடிப்பிக்கும் பல துன் பமாகிய மிடியுண்டாக்கி யாவும் விரையஞ் செய்விக்கும் எ-று. 279

## துயிலிற் றுயில்பலன்

வருகவேதுயிலதனிற் றுயிலுமாயின்
வாகாகயிரும்புமுதல் தோல்களாகும்
கருமையாம்வஸ்துவோர் கருவியங்கே
கையொடித்தொழில்முடிப்பர் கவனிப்பாக
பெருகவேபோனபொருள் வந்துசேரா
பேசுங்காலெடுத்தவனும் பிறதேசத்தே
உருகவேசென்றுவிட்டா னங்குமில்லை
ஒருக்காலுங்கிட்டாது வுறுதிதானே.

(இ-ள்.) துயிலிற்றுயில்பலனாவது சென்மனிபொருள் இரும்பு முத லிய தோலில் கருமைநிறத்திற் செய்த கருவியாகிய வஸ்துவாம் அது என்னேரமும் கையாடி தொழிலை முடிப்பிக்கும் கவனமுள்ளது அங்கே போனபொருள் திரும்பியும் வந்து அதைக் குறித்து பேசுங் கால் எடுத்தவன் பிரதேசஞ் சென்றுவிட்டாலும் அவனங்கு இல்லா மையினாலும் ஒருக்காலும் அப்பொருள் கிட்டாது எ-று. 280

## துயிலில் மரணபலன்

கனிவாகத்துயிலதனில் மரணமாயின்
கழறுவேன்பாஸ்தலசஞ் சாரந்தன்னில்
தனியாகவாகன ரூடனாகித்
தான்செல்லும்வழியினிலே தவறிவீழ்தல்
முனிவாகவப்பொருளும் லோகமான
வுயிர்க்குயிரேயுதவுநல்ல வஸ்துவாகும்
இனியந்தப்பொருள்வந்து கைக்குட்சிக்கா
திதைப்பற்றியோசிப்ப திழிவாம்பாரே.

(இ-ள்.) துயிலில் மரணபலனாவது பாஸ்தலசஞ்சாரத்தில் தான் தனியாக வாகனரூடனாகிச் செல்லுகையில் வழியில் தவறிவீழ்ந்த பொருளானது லோகமானவை அது வுயிருக்குயிராயுதவுகின்ற நல்ல வஸ்துவானதாம் அந்தப் பொருளானது தன் கைக்குக்கிட்டாது அதைப்பற்றி யோசிக்கில் இழிவைத்தரும் எ-று. 281

## துயிலினூண் பலன்

உண்டாகுந்துயிலதனி னூணுமாயின்
உயர்செம்மைகற்கள் சம்பந்தமாகும்
விண்டார்க்குவரைவட்ட வளைவுமூலம்
விருட்சத்தாலுண்டாகும் பொருள்தான்போக்கு
கண்டார்க்குவிரும்புசெம்பு கருவியாகும்
காணில்லம்பின்பக்கங் கால்வாய்ப்பள்ளம்
கொண்டார்க்குவதினின்று கிடைக்கும்பாரு
கோதறவேயிப்பலனைக் கூறுவாயே.

(இ-ள்.) துயிலூண்பலனாவது உயர்வாகிய சிவந்தகற்கள் சம்பந்தமானவை அது அறைவட்டம் வளைவாகிய மூலவஸ்து விருட்சத்தாலுண்டாகிய பொருள் போக்காம் பார்ப்பவர்க்கு இரும்பு செம்பினாற் செய்த கருவியாகும் அவை தன்வீட்டின் பின்பக்கத்துள்ள கால்வாய்ப் பள்ளத்திலிருந்து அப்பொருளானது தடையின்றி கிடைக்கும் எ-று. 283

## துயிலின் நடைப்பலன்

இயங்கவேதுயிலதனில் நடையுமாயின்
எந்திராதிகருவிகளின் சாமானாகும்
தியங்கவேஸ்திரீயவளுஞ் சோரஞ்செய்த
திவன்கிரகத்தின்மேற்கில் பொருளுமுண்டு
மயங்கவேநாற்பகலுங் கருடைவஸ்து
வந்தடைந்ததிக்கென்றும் வருக்கலாகும்
வியங்கவேபொருட்செல விட்டாலேகிட்டும்
வியவகாரமுண்டென்றும் விளம்பலாமே.

(இ-ள்) துயிலில் நடைபலனாவது, போக்காகியவஸ்து எந்திராதி கருவிகளின் சாமானெனப்படும். அதை ஓர் ஸ்திரீயானவள் சோரஞ் செய்து அவன் கிரகத்தின் மேற்குதிக்கில் அப்பொருளை அடக்கஞ் செய்து இருப்பனவாம். அது நாற்பக்கத்திலும் கறுப்புநிறமுள்ள வஸ்து அத்திக்கிலேயே யிருக்கின்றது தான் பொருட்செலவு செய்தால் மாத்திரம் அவ்வளவு கிடைக்கும்படியான வியவகாரமுண்டென்றும் விளம்புவாம் எ-று. 283

## துயிலிலரசு பலன்

இழிவாவதுயிலதனி லரசுமாயின்
இவ்வஸ்துபொன்வெள்ளி நகையின்மேலே
அழியாதுதுணிமூடிப் பந்தனித்த
தனைமூவர்தெரிந்தப கரித்தபேர்க்கு

வழிபாகப்பூணுநூற் றரித்தோன்சொல்ல
வளர்சிறுவர்முயன்றூர்கள் மாதமூன்று
கழியும்வரைகஷ்டபட நஷ்டமாக
கைக்கிடைக்குஞ்சிலதுமே கண்டுசொல்லே.

(இ-ள்) துயிலரசுபலனாவது சென்றவஸ்துவானது பொன் வெள்ளி நகையின்மீது அதுகெடாதபடி துணியால் மூடிபந்தனஞ் செய்துள்ளதை நபர்கள் தெரிந்திருந்து அபகரித்த களவானவை அவாள் பூணுநூல்தரித்தவராய்ச் சொல்ல சிறுவராய் முயன்றதாகும் அது மாதமூன்று கழியும்வரையில் நஷ்டப்பட நஷ்டமாகாது அதிற் சிலது தன் கைக்குட்சிக்கும் எ-று. 284

மரணத்தின் பலன்

பொல்லாதுகைப்பொருளைப் போக்குவிக்கும்
. பொருந்தவேகருமமது புகச்செய்விக்கும்
செல்லாதுநல்வினை தீவினையதாக்கும்
செய்யுநற்கருமமெலாம் தீங்கேயாகும்
நில்லாதுசாவினில் மரித்தபுள்ளு
நீடித்துஜனித்துவந் துதிப்பதாலே
வெல்லாதுயாதொன்றை மேலாகத்தான்
விவரமாய்ப்போகர்சொன்ன விதியிதாமே.

(இ-ள்) மரணபட்சியின் ஊணானது இதுபொல்லாததாகையால் கைப்பொருளைப் போக்குவிக்கும் கருமசூதகத்தில் கலக்கச்செய்யும் நல்வினையானதை தீவினையால் நடத்தும் நற்காரியங்களைத் தீங்காக முடிப்பிக்கும் இப்பட்சியானது சாவினில் மரித்துமறுபடியும் நீடித்து ஜனிப்பதினால் இவையாதொன்றையும் வெல்லமாட்டாவாம் என்பதாய் போகரானவர் விவரமாய்ச் சொன்ன விதியிதாம் எ-று, 285

மரணத்தில் மரணபலன்

நெறியாகமரணத்தில் மரணமாயின்
நீளமுங்குறுகியதோர் லோகமாகும்
விரிவாகமண்முதலாய்ச் சீவராசி
மேலிருந்தெடுத்தபொருள் செங்கறுப்பு
குறியாகுஞ்சதுரத்தில் நடுத்துவாரம்
கொண்டுளதுபள்ளமங் குடையதாகும்
சரியாகக்கருவிபரஸ் தலந்திலேயே
தங்கியதுகட்டமாந் தான்கிட்டாதே.

